கனகராச ஐயர்

இயற்றிய

# காசி விசுவநாத சதகம்

பதிப்பாசிரியர்

முனைவர் த. இராசேசுவரி



International Institute of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

கனகராச ஐயர்

இயற்றிய

# காசி விசுவநாத சதகம்

பதிப்பாசிரியர்

முனைவர் த. இராசேசுவரி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Kasi Viswanatha Sadagam** |
| Author | : | Kavirasa Pandithar P. Kanakaraja Iyer |
| Editor | : | Dr. T. Rajeswari |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai 600 113. |
| Publication No | : | 324 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 1999 |
| Paper Used | : | 18.6 kg TNPL Super Printing |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | **10 point** |
| No. of Pages | : | (viii) + 170 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 40/- |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 4 Ph. 4984693 |
| Subject | : | **Sadagam on<br>Kasi Viswanathar.** |

முனைவர் ச.சு.இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

## காசி விசுவநாத சதகம்

பாட்டியல் நூல்கள் சிற்றிலக்கியங்கள் 96 வகைப்படும் என்று பகர்கின்றன. பள்ளு,குறவஞ்சி,பிள்ளைத்தமிழ்,உலா,கோவை,அந்தாதி போன்ற பலவற்றுள் ஒன்று சதகம். சதகம் என்பது வடமொழிச் சொல். இது, சதம் என்ற சொல்லுடன் 'க' என்ற எழுத்துப் பேறு சேர்ந்து அமைந்ததாகும். சதகம் என்பது 100 செய்யுள்களால் அமைய வேண்டிய சிற்றிலக்கியம். இலக்கண விளக்கம், சதகத்தின் செய்யுள் எண்ணிக்கையை, 'விளையும் ஒரு பொருள் மேல் ஒரு நூறு தழைய வுரைத்தல் 'சதகமென்ப' என்னும் நூற்பாவால் வரையறை செய்துள்ளது. ஆனால் பாடுபொருளை வரையறை செய்யவில்லை. எனவே புலவர்களும் சதகத்தின் பாடுபொருளை வரையறை செய்யாமல் பலவாகப் பாடமுற்பட்டனர். மேலும் செய்யுளின் எண்ணிக்கையையும் கூட்டியும் குறைத்தும் சதகம் பாடினர்.

நூல்களுக்கு எண்ணிக்கை அடிப்படையில் பெயர் வழங்கும் இயல்பு பழந்தமிழர் மரபு. அக நானூறு,புறநானூறு,பதிற்றுப்பத்து,நானாற்பது போன்றவை இதற்குச் சான்று. ஆயின் 'சதகம்' எனும் இந்த இலக்கிய வடிவம் வடமொழி மரபையொட்டி அமைந்ததால் நூறு என்று சொல் அமையாமல் சதகம் என்று அமைந்துள்ளது.

சதகம் என்ற சொல்லை முதன்முதலாகப் பயன்படுத்தியவர் மாணிக்கவாசகர். அவர் எழுதிய திருவாசகத்தில் 'திருச்சதகம்' என்ற பெயர் காணப்படுகிறது. ஆகையால் திருச்சதகத்தைச் சதகத்தின் தோற்றுவாயாகக் கருதலாம். மாணிக்கவாசகர்காலம் ஒன்பதாம் நூற்றாண்டு. ஆனால் இச்சதகம் பின்னர் 11ஆம் நூற்றாண்டில் எழுந்த சதகத்தின் அமைப்பைப்பெறவில்லை.

கிபி11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அவிநாசி ஆறைகிழார் என்பார் தாம் வாழ்ந்த மண்டலத்தைச் சிறப்பித்துக் கார்மண்டலச் சதகத்தைப் பாடினார். இவ்வாறு மண்டல வரலாறுகளைச் சிறப்பித்துக் கூறும் முறையில் சதக இலக்கியங்கள் பாடப்பெறலாம் என்று முதன் முதலாக வழிகாட்டியவர் இவரே. இதை அடியொற்றிப் படிக்காசுப்புலவர் தொண்டைமண்டல சதகம் பாடினார். இதே போன்று சோழமண்டல சதகம்,பாண்டி மண்டல சதகம், நந்த மண்டல சதகம், கொங்கு மண்டல சதகம் முதலியவை தோன்றி மண்டல சதகங்கள் வளர்ச்சியுற்றன.

சதக இலக்கியம் தோன்றிய காலம் தொட்டு இன்றுவரை வெளிவந்துள்ள சதகங்களின் எண்ணிக்கை 107 எனத் தெரிகிறது.

சதகங்கள் வேறுபட்ட பாடுபொருளைக் கொண்டமைவதால் அவற்றை 1. மண்டல சதகங்கள், 2.நீதிச் சதகங்கள் ,3.துதிச் சதகங்கள் எனப் பாகுபடுத்தலாம் மண்டல சதகங்கள் புலவர்கள் தாம் வாழ்ந்த நாடுகளைச் சிறப்பித்தும் அங்கு வாழ்ந்த மக்கள் வரலாற்றை விளக்கியும் பாடும் வகையில் அமைந்தவை. நீதிச் சதகங்கள் ஓர் இடத்தில் எழுந்தருளியுள்ள இறைவனை முன்னிலைப்படுத்தி மக்கள்

வாழ வேண்டிய அறக் கருத்துக்களைக் கூறும் நிலையில் அமைந்தவை. துதிச் சதகங்கள் இறைவனைத் தலைவனாகக் கொண்டு அவன் பெருமைகளைக் கூறும் நிலையில் விளங்குபவை.

தொண்டை மண்டல சதகம், கொங்கு மண்டல சதகம், தண்டலையார் சதகம், குமரேச சதகம், அறப்பளீசுர சதகம், ஜெயங்கொண்டார் சதகம் போன்றவை மிகவும் புகழ்பெற்ற சதகங்கள்.

காசி விசுவநாத சதகம் இறைவனைப் போற்றும் வகையில் மட்டுமன்றி, நூலாசிரியர் தாம் நேரில் கண்டு தரிசித்த சைவ வைணவ ஆலயங்கள்: காசி, அயோத்தி, மதுரை போன்ற பெரு நகரங்கள்: புண்ணிய தலங்கள், திருமாலின் அவதார மகிமை கூறும் கதைகள், சிவனடியார்கள், சிவபெருமானின் திருவிளையாடல்கள், சமணர், பௌத்தர் பற்றியும் பாடியுள்ளார். இது அவருடைய சமயப் பொது நோக்கைக்காட்டுகிறது. இமயம் முதல் குமரி வரை உள்ள கோயில்களையும், இலங்கையில் உள்ள கோயில்களையும் அவர் பாடியிருப்பது அவருடைய தேசிய ஒருமைப்பாட்டுணர்வைப் புலப்படுத்துகிறது.

ஆசிரியர் பல புண்ணிய இடங்களைப் பாடியிருப்பினும் காசிக்குச் சிறப்பிடம் கொடுத்து நூலுக்குக் 'காசி விசுவநாத சதகம்' எனப் பெயரிட்டுள்ளார். நூலில் காப்புச் செய்யுள் நீங்கலாக *109* பாடல்கள் இடம்பெற்றிருப்பது சூழ்நிலைக்கேற்ப ஆசிரியர் நூற்றுக்கு மேல் *9* பாடல்கள் பாடியிருப்பதை உணர்த்துகிறது. பாடல்கள் ஆசிரியவிருத்தத்தால் ஆனவை. மிக எளிமையாக உள்ளன. பாடல்கள் 'காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள் காசி விசுவேச சிவமே' என்று மகுடம் வைத்துப் பாடப்பட்டுள்ளன.

அரிய சுவடிகளைப் பாதுகாக்க வேண்டும் என்ற நோக்கில் செயல்படும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அச்சிடப்படாத சுவடி வடிவில் இருக்கும் இந்நூலைப் பதிப்பித்து வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறது. இது சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ள காகிதச் சுவடி. இதன் ஆசிரியர் பி.கனகராஜ ஐயர். சுவடியில் உரையில்லாமல் மூலம் மட்டுமே உள்ளது. இதன் பதிப்பாசிரியர் முனைவர் த.இராசேசுவரி பொழிப்புரை, குறிப்புரை, அருஞ்சொற்பொருள் முதலியவை வழங்கியுள்ளார்.

காலக் கரையான்களால் அழிக்கப்படாமல் காசிவிசுவநாத சதகம் எனும் இச்சுவடியை நூலாக்கம் செய்து தந்த பதிப்பாசிரியர் முனைவர் த. இராசேசுவரியைப் பாராட்டுகிறேன். அவர் இந்நிறுவனத்தில் சுவடிப் புலத்தில் மாணவியாக இருந்தபோது எழுதப்பட்ட ஆய்வேடு இது இப்போது நூலாக வெளிவருகிறது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற இந்நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி பண்பாட்டுத் துறை மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் சு. இராமகிருட்டிணன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை வனப்புற அச்சிட்டுத்தந்த 'யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்' சென்னைஅவர்களுக்கும் எங்கள் நன்றி.

இயக்குநர்

# முன்னுரை

தமிழ்மொழியின் பண்டைய இலக்கியங்கள் சுவடிகளில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அந்நூல்கள் காலத்தால் அழிந்து விடாமல் இருக்கவும், இலக்கிய உலகுக்கு அந்நூல்களை அறிமுகப்படுத்தவும் அவற்றை அச்சில் கொண்டுவருவது மிகவும் தேவையான ஒன்று.

1984-85ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நான் சுவடியியல் பட்டய வகுப்பு மாணவியாகப் பயின்றபோது, சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூல் நிலையத்தில் உள்ள 'காசி விசுவநாத சதகம்' என்ற காகிதச் சுவடியைப் படி எடுத்துப் பாடல்களைப் பதிப்பித்துக் கொடுத்தேன். சதக இலக்கியங்களை அச்சில் கொண்டுவர விரும்பிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் (திரு.) ச.சு. இராமர் இளங்கோ அவர்கள், அந்நூலைச் செப்பமிட்டு நூல் வடிவில் கொண்டுவருமாறு ஊக்கமூட்டினார். அன்னாரின் விருப்பத்திற்கிணங்க அச்சுவடியைச் செப்பம் செய்து பதிப்பித்துள்ளேன்.

## பதிப்பு முறை

பாடல்கள் மட்டும் அமைந்திருந்த மூலநூலுக்குப் பொழிப்புரை, அருஞ்சொற்பொருள், குறிப்புரை முதலியவை வழங்கி நூலைத் தெளிவுறப் பதிப்பித்துள்ளேன். நூலில் உள்ள பாடல்களில் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களே பாடப்பட்டுள்ளன. நூலைப் படிக்கும்போது, பல திவ்ய திருத்தலங்களைத் தரிசித்த மனநிறைவு ஏற்படும் வகையில் நூல் அமைந்துள்ளது. நூலாசிரியர் தாம் நேரில் கண்ட தலங்களைப் பற்றி உண்மைச் செய்திகளைப் பாடியிருப்பது படித்து இன்புறற்குரியது. 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மூலமாக இந்நூலைப் பதிப்பித்து வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி யடைகிறேன்.

முனைவர் த. இராசேசுவரி

# நன்றியுரை

'காசி விசுவநாத சதகம்', என்ற நூலை அச்சில் கொண்டுவர ஊக்கமூட்டிச் செயல்பட வைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் (திரு.) ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு முதலில் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாடல்களைப் படியெடுக்குங்கால் அதில் ஏற்பட்ட பிழைகளைக் களைந்து பாசத்துடன் உதவிய, திரு. மு.கோ ராமன் (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முன்பு சுவடி காப்பாளராக இருந்தவர்) அவர்களுக்கும், பாடல்களுக்குப் பொழிப்புரை, பொருள், குறிப்புரை ஆகியவை எழுதும்போது ஏற்பட்ட ஐயங்களைத் தீர்த்து, எல்லாப் பாடல்களுக்கும் உரிய பொழிப்புரையை அன்புடன் செப்பமிட்டுத் தந்த பேராசிரியர் திரு. தி.வே. கோபாலையர் (பிரெஞ்சு இந்தியக் கலைக்கழக ஆய்வாளர்) அவர்களுக்கும் என் அன்பான, மனமுவந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர் த. இராசேசுவரி

# சொற் சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அப்பர் | - | திருநாவுக்கரசர் |
| அ.பொ. | - | அருஞ்சொற் பொருள் |
| இ.வி. | - | இலக்கண விளக்கம் |
| சம். | - | திருஞானசம்பந்தர் |
| தேவா. | - | தேவாரம் |
| பக். | - | பக்கம், பக்கங்கள் |
| பொழிப். | - | பொழிப்புரை |

# பொருளடக்கம்

# காசி விசுவநாத சதகம்
## பதிப்பு ஆய்வு

### பதிப்பு முன்னுரை:

'சதகம்' என்ற சொல் வடமொழிச் சொல் என்பர். சதக என்பது சதம் என்ற அடிச்சொல்லிலிருந்து வந்தது. 'சதம்' என்ற வடசொல் நூறு என்னும் பொருளது. அது 'க' என்ற பிரத்தியயம் சேரச் சதகம் என்றாயிற்று. தமிழ் மொழியில் சதக இலக்கியம் தோன்றாத காலத்திலேயே, வடமொழியில் சதகம் என்ற பெயரில் பல்வேறு நூல்கள் வளர்ந்துள்ளன என்பர். தொல்காப்பியர் காலம் முதல் மாணிக்கவாசகர் காலம் வரை சதகம் என்ற பெயர் தமிழில் காணப்படவில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றில் முதன் முதலாக மாணிக்கவாசகர் பாடலில் தான் 'திருச்சதகம்' என்ற பெயர் தலைப்பாக வந்துள்ளது. இது நூறு பாடல்களால் அமைந்த பகுதியாகும். இந்த நூறு பாடல்களும் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளன. அவை நூறும் ஒரே வகைச் செய்யுளால் அமையாமல் பத்துப் பத்துப் பாடல்கள் ஒவ்வொரு யாப்பு வகையால் அமைந்துள்ளன. ஆனால் தற்காலச் சதகப் பொருளோ அமைப்போ அதில் இருப்பதாகத் தெரியவில்லை.

'சதகம்' என்ற பெயரில் தனியொரு சிற்றிலக்கியம் முழுமையாகத் தோன்றியது கி.பி. பதினோராம் நூற்றாண்டு எனவும், முதலில் தோன்றியது அவிநாசி ஆறைகிழார் என்பவர் இயற்றிய கார் மண்டல சதகம் எனவும், கி.பி. 17, 18, 19 ஆகிய மூன்று நூற்றாண்டு காலத்தையும் சதக இலக்கியத்தின் பொற்காலம் எனவும் ந.வி. செயராமன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார் ( பக். 15, 16, - சதக இலக்கியங்கள் ).

கார்மண்டல சதகம், கார்மண்டலத்தில் வாழ்ந்த காராளரின் குலப்பெருமையையும், அங்கு வாழ்ந்த மன்னர்கள் சிறப்பையும் விரிவாகக் கூறும் நூல். கார் மண்டல சதகம் தோன்றிய பின், ஈழ மண்டல சதகம், தொண்டை மண்டல சதகம், பாண்டி மண்டல சதகம் எனப் பல்வேறு மண்டல சதகங்கள் எழுந்தன. சதக இலக்கியத்தில் மண்டல வரலாறு கூறும் அமைப்பு மட்டுமன்றிக் கடவுள் மீது பாடப்பட்ட துதி நூல் போன்ற அமைப்பும் காணப்படுகிறது. இவ்வமைப்பிலுள்ள நூல்கள் அவையாம்பிகை சதகம், சிவசங்கர சதகம் போன்றவையாகும். மக்கள் வாழ்வதற்கு வேண்டிய அறிவு நெறிகளையும் அறமுறைகளையும் தொகுத்துக் கூறும் நீதி நூல்களாகவும் சில சதகங்கள் அமைந்துள்ளன. இவற்றுள் சிறந்தவை குமரேச சதகம், அறப்பளீசுரர் சதகம், கைலாசநாதர் சதகம் முதலியனவாகும். எனவே, தமிழில் சதக இலக்கியங்கள்

பொதுவாக வரலாறு கூறும் நிலையிலும், இறைவனைத் துதிக்கும் வகையிலும், நீதியுரைக்கும் வகையிலுமாக மூன்று நிலைகளில் காணப்படுகின்றன.

பாட்டியல் நூல்கள் சிற்றிலக்கியங்களின் இலக்கணங்களைத் தொகுத்துக் கூறுகின்றன. அவற்றுள் வைத்தியநாத தேசிகர் எழுதிய இலக்கண விளக்கம் என்ற நூலில் மட்டுமே சதகத்தின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. அச்சூத்திரம்,

விளையும் ஒருபொருள் மேலொரு நூறு
தழைய வுரைத்தல் சதக மென்ப (இ.வி.847)

என்பதாகும். இதிலிருந்து ஏதாவது ஒரு பொருண்மை பற்றி நூறு பாடல்கள் பாடுவதை நோக்கமாகக் கொண்டு அமைபவை சதக இலக்கியங்கள் என்று உணர முடிகின்றது.

## மகுடம் பெறுதல்:

சதக நூல்கள் பிற இலக்கிய வகைகளில் இல்லாத புதுவகை அமைப்பைக் கொண்டுள்ளன. சதக நூலிலுள்ள ஒவ்வொரு செய்யுளும் இறுதியில் ஒரே வகையான முடிவு பெற்றவைகளாக விளங்குகின்றன. பாடலின் ஈற்றுத் தொடர் மகுடமாக அமைகிறது. சான்றாக, கார் மண்டல சதகம், காராளர் மண்டலமே! என்றும், சிவசங்கர சதகம், சிவசங்கரா! என்றும், குமரேச சதகம் மயிலேறி விளையாடு குகனே! புல் வயல் நீடு மலைமேவு குமரேசனே! என்றும் மகுடங்கள் பெற்று விளங்குகின்றன.

வடமொழியில் சதக இலக்கிங்கள் பொதுவாகத் தர்மம், காமம், மோட்சம் ஆகியவற்றைக் கூறும் நிலையில் அமைந்துள்ளன. சதகம் என்ற பெயரைக்கொண்டே சதக நூல் நூறு பாடல்களால் அமைய வேண்டும் என்பது புலப்படும். ஆயினும் புலவர்களின் உள்ள நிலைக்கேற்ப இந்த எண்ணிக்கை அமைப்புச் சில நூல்களில் மிகுந்து காணப்படுகின்றது. குருநாத சதகம், கோகுல சதகம் ஆகியவற்றில் நூற்றி இரண்டு பாடல்களும், தண்டலையார் சதகத்தில் ஒன்பது பாடல்களும் அதிகமாக உள்ளன.

## யாப்பு

இலக்கண விளக்கம், சதக இலக்கியத்தின் பாடல்களின் எண்ணிக்கை பற்றித் தான் குறிப்பிட்டிருக்கின்றதே யன்றி, அவற்றின் பாடுபொருள், யாப்பு முதலியவை பற்றி விதி வகுக்கவில்லை. தொண்டைமண்டல சதகம் கட்டளைக் கலித்துறையிலும், குருநாத சதகம் கலிவிருத்தத்திலும் அமைந்துள்ளன. பெரும்பாலான நூல்கள் ஆசிரிய விருத்தத்தில் அமைந்துள்ளதால் சதக இலக்கியங்களில் பொதுவாக ஆசிரிய விருத்தமே செல்வாக்குப் பெற்று விளங்கும் பாவினமாக அமைந்திருப்பதை அறிய முடிகிறது.

### பொருளமைதி:

ஓர் இலக்கியத்தின் நோக்கம் என்பது படைப்பவனுடைய நோக்கம், படிப்பவனுடைய பயன் ஆகிய இரண்டும் சேர்ந்தது. ஏதேனும் ஓர் உயர்ந்த பொருளை அறிவுறுத்துவது இலக்கியப் பொது நோக்கமாகும். சதக இலக்கியங்களை நோக்கும்போது அவற்றின் பாடுபொருள் எது என்பதில் ஒரு வரையறை இல்லை என்றே எண்ணத் தோன்றுகிறது. இவை ஒரே பொருண்மை கொண்டனவாக அமையாமல் மண்டல வரலாறு கூறுவது, இறைவன் அல்லது இறைவியைப் பாடிப் பரவுவது, அறம் கூறி நீதி புகட்டுவது என்ற நிலையில் பல நோக்குடன் பாடப்பட்டுள்ளன. ஒவ்வொரு சதகமும் தான் எடுத்துக்கொண்ட பொருளை அறிவுறுத்துவதையே நோக்கமாகக் கொண்டுள்ளது. மாணிக்கவாசகரின் திருச்சதகம் பேரின்பப் பொருளமைதி உடையதாகக் காணப்படுகின்றது. கார்மண்டல சதகம் நாட்டு வரலாற்றுப் பெருமையைப் பகர்கின்றது. இவை, சதக இலக்கியங்கள் காலப்போக்கிற்கேற்ப வளர்ச்சியடைந்து பாடுபொருளில் வேறுபட்டுள்ளதையே காட்டுகின்றன.

### சுவடி பற்றிய செய்திகள்:

சுவடி எண். ஆர். 8415. சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூல் நிலையத்திலுள்ளது. இது காகிதச் சுவடி. சுவடி நல்ல நிலையில் முழுமையாக உள்ளது. இந்நூலாசிரியரான கவிராச பண்டிதர் திரு. பி. கனகராச ஐயர் எழுதிய சிற்றிலக்கிய நூல்களின் தொகுப்பாக விளங்கும் புத்தகத்தில் 66ஆம் பக்கம் முதல் 115ஆம் பக்கம் வரை 49 பக்கங்களில் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலின் தொடக்கத்திலும் பாடல் எண் கொடுக்கப்பட்டுள்ளது. சுவடி எழுதி முற்றுப்பெற்ற நாள் 26.10.1971 என்று குறிக்கப்பட்டுள்ளது.

### நூல் அமைப்பு:

சதக இலக்கியம் நூறு பாடல்களைக் கொண்டு அமையவேண்டும் என்று இலக்கண விளக்கம் கூறியிருப்பினும், இந்நூல் காப்புச் செய்யுள் நீங்கலாக வாழ்த்துச் செய்யுளுடன் சேர்த்து நூற்றி ஒன்பது பாடல்களுடன் விளங்குகின்றது. இச்சதகத்தில் பெரும்பாலான பாடல்களில் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களே பாடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலின் ஈற்றுத் தொடரும், 'காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள் காசி விசுவேச சிவமே', என்று மகுடம் வைத்துப் பாடப்பட்டுள்ளது. ஈற்றுத் தொடரிலுள்ள காசி விசுவ என்ற சொல்லுடன் நாத சதகம் என்ற சொல்லையும் சேர்த்துக் 'காசிவிசுவநாத சதகம்', என்று ஆசிரியர் இந்நூலுக்குப் பெயரிட்டுள்ளார். இறைவன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களின்

சிறப்பைக் கூறும் திருவேங்கட சதகம், திருப்போரூர் சதகம் முதலிய நூல்களைப் போன்று இதுவும் இறைத்தலப்பெருமையைப் பகர்கின்றது. சில பாடல்கள் (5, 13, 61) இறைவனுடைய பக்தர்கள் வாழ்ந்த நகரங்களின் சிறப்பை எடுத்துரைக்கும் வகையிலும் அமைந்துள்ளன.

## யாப்பு:

பாடல்கள் பதினான்கு சீர் ஆசிரிய விருத்தத்தால் ஆனவை.

## மொழியமைதி:

மக்கள் விரும்பிக் கற்கும் வண்ணம் எளிய நடையில் அமைந்துள்ளது.

## நூலாசிரியர்:

இந்நூலின் ஆசிரியர் கவிராச பண்டிதர் பி. கனகராச ஐயர் என்பவர் ஆவார். இவர் எம்.ஏ., பட்டம் பெற்றவர்; செய்யுள் துறையில் பயிற்சி பெற்றவர். புதுக்கோட்டை அரசர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். இவர் இயற்றிய நூல்களுள் மிகுதியானவை சிற்றிலக்கியங்களே. இவையெல்லாம் ஆசிரியரின் புலமையையும் கவிதை இயற்றுவதில் அவருக்கிருந்த திறமையையும் புலப்படுத்துகின்றன. மேலும் இவர் தமிழக வரலாற்றிலும் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடுமுடையவர் என்பதற்கு இவர் எழுதிய, 'சோழமன்னன் முதல் பகுதி', 'ஹிஸ்டரி ஆப் தமிழ் பொயட்ஸ் முதல் பகுதி' என்ற நூல்கள் தக்க சான்றுகளாகும்; 'மறைந்த மாநகர்' என்ற நாடக நூலும் இயற்றியுள்ளார்.

ஆசிரியர் விநாயகப் பெருமானை வணங்கி நூலைத் தொடங்குகிறார். காசி விசுவநாத சதகம் என்று நூலுக்குப் பெயர் இட்டிருந்தாலும் நூலில் சிவபெருமானின் பெருமை மட்டுமன்றித் திருமால் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள், இறைவி எழுந்தருளியிருக்கும் கோயில்கள், திருமாலின் திரு அவதாரங்கள், அடியார் பற்றிய செய்திகள், முருகப்பெருமான் கோயில்கள், சமணர்களுடைய இருப்பிடங்கள் முதலியவை பற்றியும் ஆசிரியர் பாடியுள்ளார். மேலும், இவர் தென்னாடு, வடநாடு என்னும் பேதமின்றிக் கன்னியாகுமரி முதல் இமயமலை வரையுள்ள எல்லாத் திருப்பதிகளையும் பாடியிருப்பதோடன்றி, ஈழ நாட்டிலுள்ள கதிர்காமம் போன்ற திருத்தலங்களையும் பாடியுள்ளார். இது ஆசிரியரின் பொதுநோக்குப் பண்பையும் தேசிய ஒருமைப் பாட்டுணர்வையும் புலப்படுத்துகிறது. நூலில் வருணனை இடம்பெறவில்லை. பாடல்கள் பொருள்நயம் சொல் நயம் உடையனவாக அமைந்துள்ளன. எல்லாக் கோயில்களையும் நகரங்களையும் ஆசிரியரே நேரில் சென்று தரிசித்துத் தாம் கண்டவற்றைப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

## ஆசிரியரின் புலமை:

ஆசிரியர் பல ஊர்களுக்குச் சென்று அங்குள்ள கோயில்களைப் பாடியிருப்பது அவர் தமிழ்ப் புலமையுடன் வரலாற்றறிவும் அமையப்பெற்றவர் என்பதைக் காட்டுகின்றது. மேலும் ஆசிரியர் பெரியபுராணக் கதைகள், பாகவதக் கதைகள், திருவிளையாடல் புராணக் கதைகள் முதலியவை குறித்து மிகச் சிறப்பாகப் பாடியிருப்பது அவர் தமிழ் இலக்கியங்களை வழுவறக் கற்றுத் தேறியவர் என்பதையும் அவருடைய முந்து நூல் கற்ற புலமையையும் புலப்படுத்துகின்றது.

ஆசிரியர் இயற்றிய நூல்களில் அச்சானவை:

1. மறைந்த மாநகர் } - நாடகச் செய்யுள்
2. சிவாஜி விஜயம் }
3. தம்ம பதம் - பாலி மொழிபெயர்ப்பு
4. தமிழ்ப் புலவர் வரலாறு - 1
5. தமிழ்ப் புலவர் வரலாறு - 2
6. தமிழ்ப் புலவர் வரலாறு - 3
7. பாண்டிய மன்னன் - 1
8. பாண்டிய மன்னன் - 2
9. சோழ மன்னன் - 1
10. சோழ மன்னன் - 2
11. சோழ மன்னன் - 3
12. விஜய நகர வீழ்ச்சி
13. கட்டுரைத் தொகுதி
14. கட்டுரை இலக்கணம்
15. கலைமகள் துதி செய்யுள்
16. பெரிய நாயகி பிள்ளைத் தமிழ்
17. கம்ப நாடர் பிள்ளைத் தமிழ்
18. திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ்
19. ஆனந்தக் கூத்தன் உலா

ஆசிரியர் இயற்றிய நூல்களில் அச்சாகாதவை.

உரைநடை:

1. இராமாயணத் திரிவேணி - 1000 பக்கம்

செய்யுள்:

2. சங்கர விஜயம் - 2400 செய்யுள்
3. சுந்தரர் புராணம் - 2000 செய்யுள்
4. தேவி திருவாயிரம் - 1008 செய்யுள்
5. திருவாரூர் பிள்ளைத் தமிழ் - 108 செய்யுள்
6. சடகோபர் பிள்ளைத் தமிழ் - 108 செய்யுள்
7. சங்கரர் பிள்ளைத் தமிழ் - 108 செய்யுள்

8. கண்ணபிரான் பிள்ளைத் தமிழ் - 108 செய்யுள்
9. இலங்கைப் பரணி - 2400 தாழிசை
10. சூரசங்காரப் பரணி - 2400 தாழிசை
11. ஆஞ்சநேய புராணம் - 1400 செய்யுள்
12. சமரச சித்தானந்த போதினி - 108 செய்யுள்
13. பிரபந்தத் திரட்டு - 3000 செய்யுள்
14. புவனேசுவரி அந்தாதி - 108 செய்யுள்
15. கண்ணகி வழக்குரை நாடகச் செய்யுள் - 12000 அடிகள்
16. உபநிடதம்
17. கம்பர் பிள்ளைத் தமிழ்
18. நம்மாழ்வார் பிள்ளைத் தமிழ்
19. திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ்
20. சங்கரர் பிள்ளைத் தமிழ்
21. முத்துமாரிப் பிள்ளைத் தமிழ்
22. சதாசிவ பிரமேந்திர விஜயம்

முதலியவையாகும்.

இந்நூலில் இடம்பெற்றிருக்கும் சைவ சமயக் கோயில்கள், மடங்கள், திருமால் திருத்தலங்கள், இறைவியர் கோயில்கள், முருகப் பெருமான் கோயில்கள், சமணர் கோயில், மலைகள், நகரங்கள் முதலியவை கீழ் வருமாறு:

I. **சைவ சமயக் கோயில்கள்:**

| | | பாடல் எண் |
|---|---|---|
| 1. | இராமேசுவரம் | 14 |
| 2. | காசி | 1 |
| 3. | காஞ்சி | 2 |
| 4. | குடுமியான் மலை | 74 |
| 5. | கோகன்ன நாதன் | 64 |
| 6. | சங்கர நயினார் கோயில் | 54 |
| 7. | சிதம்பரம் | 33 |
| 8. | சீகாழி | 29 |
| 9. | சுசீந்திரம் | 58 |
| 10. | திரிசிராப்பள்ளி | 18 |
| 11. | திருக் கயிலாயம் | 67 |
| 12. | திருக்காளத்தி | 77 |
| 13. | திருக்கானப்பேர் | 55 |
| 14. | திருக்கேதாரம் | 66 |
| 15. | திருக்கேதீச்சுரம் | 69 |
| 16. | திருநெல்வேலி | 60 |
| 17. | திருமறைக்காடு | 31 |
| 18. | திருவண்ணாமலை | 48 |
| 19. | திருவாரூர் | 26 |
| 20. | திருவாலங்காடு | 32 |

X. நகரங்கள்:

| | | |
|---|---|---|
| 1. | அத்தினபுரம் | 13 |
| 2. | அயோத்தி | 3 |
| 3. | அரித்துவாரம் | 10 |
| 4. | அவந்தி | 5 |
| 5. | இருடிகேசம் | 9 |
| 6. | கோவர்த்தனபுரி | 6 |
| 7. | தஞ்சாவூர் | 19 |
| 8. | திருக்குடந்தை | 20 |
| 9. | துவாரகா | 7 |
| 10. | மதுரை | 4 |
| 11. | மாயாவதி | 8 |
| 12. | மாயூரம் | 27 |
| 13. | மும்பை | 11 |

XI. மலைகள்:

| | | |
|---|---|---|
| 1. | இமயமலை | 70 |
| 2. | விந்தியமலை | 71 |

XII. பாரதக் கதை:

| | | |
|---|---|---|
| 1. | வில்லடி கொண்ட திருக்கோலம் | 98 |

மேலே கூறப்பட்ட திருத்தலங்களில் சிவபெருமானுடைய பஞ்ச பூதத் தலங்கள்[1], ஐந்து சபைகளில் நான்கு சபைகள்[2], முக்தி தரும் இடங்கள்[3], சப்தபுரிகள்[4] முதலியவை இடம்பெற்றுள்ளன. 72, 73, 75 ஆகிய பாடல்களில் சமணர் குகைகள், இருப்பிடம் போன்ற செய்திகள் காணப்படுகின்றன. கூன் பாண்டியனைப் பற்றிய விவரங்கள் 56, 72 ஆகிய ஈரிடங்களில் இடம் பெற்றுள்ளன. வைகுண்டம் ( 62 ), திருமெய்யம் ( 63 ), சிதம்பரம் ( 33 ) ஆகிய திருத்தலங்களில் சிவபெருமானும் திருமாலும் எழுந்தருளியுள்ள கோயில்கள் உள்ளன. மும்பை நகரில் திருமாலுக்குரிய கோயில் மட்டுமன்றி அலைமகள், கலைமகள், மலைமகள் ஆகிய மூவரும் எழுந்தருளியிருக்கும் பாங்கையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். நாரத்தா மலையில் சிவபெருமானுக்கும் மாரியம்மனுக்கும் கோயில்கள் அமைந்துள்ளன. இவ்வாறாக இந்நூல் இறைவன் உகந்தருளியிருக்கும் திருத்தலங்களைக் கூறும் நிலையில் சிறப்பாக அமைந்துள்ளது படித்து இன்புறற்குரியது.

1. காஞ்சி 2 ( மண் ), திருவானைக்கா 76 ( நீர் ), திருவண்ணாமலை 48 ( நெருப்பு ), திருக்காளத்தி 77 ( காற்று ), சிதம்பரம் 33 ( ஆகாயம் ).
2. சிதம்பரம் 33 - ( கனகசபை ); திருவாலங்காடு 32 - ( இரத்தினசபை ); திருவாலவாய் 17 - ( வெள்ளிசபை ); திருநெல்வேலி 60 - ( தாமிரசபை ).
3. கமலாலயம் ( திருவாரூர் ) 36 - பிறக்க முக்தி, காசி 1 - இறக்க முக்தி, திருவண்ணாமலை 48 - நினைக்க முக்தி, சிதமபரம் 33 - தரிசிக்க முக்தி.
4. அயோத்தி 3, மதுரை 4, மாயை 8, காசி 1, காஞ்சி 2, அவந்தி 5, துவாரகை 7.

# காசி விசுவநாத சதகம்

## காப்பு

காசிவிசு வேசனருட் காட்சிமனம் கண்டுருகி
மாசிறமிழ் பாட்டிசைக்கும் வாய்ப்புற்றேன் - ஆசிரயன்
தாண்மலரிற் சாரும் சதகம் விநாயகனே
கோண்மணியா நல்கும் குளிர்ந்து.

பொழிப்புரை: காசி விசுவநாதப் பெருமானின் அருள்வடிவத்தை உள்ளத்தில் கண்டு அதனால் உள்ளம் உருகிக் குற்றமற்ற தமிழ்ப் பாடல்களை இயற்றும் வாய்ப்பினைப் பெற்றுள்ளேன். எல்லோராலும் புகலாகப் புகத்தக்க விசுவநாதப் பெருமானின் திருவடித் தாமரைகளில் பொருந்தும் இச்சதகப் பிரபந்தம் எல்லோரும் போற்றத்தகும் இரத்தினமாக ஆகுமாறு விநாயகப் பெருமானே உள்ளம் குளிர்ந்து அருள் செய்வான்.

அருஞ்சொற் பொருள்: ஈசன் - எல்லோரையும் அடக்கி ஆள்பவன். ஆசிரயன் - எல்லோருக்கும் பற்றுக் கோடாக இருப்பவன். கோள்மணி - எல்லோரும் விரும்பிக் கொள்ளத்தக்க இரத்தினம். விநாயகன் - தனக்கு மேல் வேறொருவன் தலைவனாக இல்லாதவன்.

### 1. காசிச் சிறப்பு

1. பிறப்பவர் சிறப்பெய்து கமலால யத்திலே
பிறவிவாய்ப் பெளிதில் லையே
பிறவிபெற வேண்டிச்சிவ புண்ணியப் பேற்றினைப்
பெற்றவுயிர்ப் பன்மை யிலையே
அறப்பயனை நாட்டவே அன்னமலை பாலிக்கும்
அம்பலத் தாடி திருமுன்
ஐம்பொறியு மொன்றவே நின்றுதரி சித்துருகும்
அருட்பேறு பெறுநர் சிலரே
மறப்பரிய அருணகிரி மூர்த்தியை நினைந்துருகும்
வாய்ப்புநெஞ் சமைத லரிதே
மரித்தவுயிர் எதுவெனினும் வீடருளும் வள்ளலுறை
வாரணா சிப்பெரு மையைக்
கறப்பதுணர் காமதேனு வினுமிகு மென்னவே
கலைஞர்மனம் உணர்வ துளதே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பிறவி எடுப்பவர் சிறப்பு எய்துதற்குரிய திருவாரூரில் பிறவி பெறும் வாய்ப்பு எளிதில் கிட்டுவதன்று. அவ்வூரில் மனிதப் பிறவி பெறுதற்குரிய சிவபுண்ணிய நல்வினையைப் பெற்ற உயிர்கள் பலவாக இருப்பதில்லை. தருமத்தின் பயனை நிலைநாட்டவே சோற்றை மலைபோல அடியார்க்கு வாரி வழங்கும் தில்லை நகரில் பொன்னம்பலத்தில் திருக்கூத்து நிகழ்த்தும் கூத்தப்பிரான் திரு முன்னர், ஐந்து பேரறிவும் கண்களே கொள்ளுமாறு ஐம்பொறிகளும் பொருந்தி நின்று தரிசித்து உள்ளம் உருகுதற்குரிய எம்பெருமானுடைய அருளாகிய நல்வினையைப் பெறுபவர் மக்களுள் சிலரேயாவர். மறத்தற்கு அரிய அண்ணாமலைப்பெருமானை விருப்புற்றுத் தியானித்து உருகும் வாய்ப்பினை உடைய நெஞ்சு எல்லோருக்கும் பொருந்தியிருத்தல் கிட்டுதற்கு அரிய செயலாகும். தன்னிடத்துத் தங்கி உயிர் நீத்த உயிர் எதுவாக இருந்தாலும் அதற்கு வீடுபேற்றை நல்கும் வள்ளலாகிய விசுவநாதப் பெருமான் உகந்தருளியிருக்கும் வாரணாசி என்ற பெயருடைய காசி நகரப் பெருமை வேண்டியவர்களுக்கு வேண்டிய பொருள்களைச் சுரந்து அளிக்கும் காமதேனுவைவிட மேம்பட்டது என்று அறிஞருடைய உள்ளங்கள் நன்கு உணர்கின்றன. உலகை வாழ்விப்பதற்காக மேம்பட்ட கங்கை நதியைத் தன் சடையில் ஏற்றுக்கொண்டு மயிர்க்கால் வழியாக உலகில் பெருகுமாறு செய்து அருள் செய்கின்ற காசி நகரில் உகந்தருளியிருக்கும் விசுவேசப் பெருமானே! நீயே மங்கல மூர்த்தி ஆவாய்.

அ. பொ: கமலாலயம் - திருமகள் இருப்பிடமான திருவாரூர், அன்னமலை - சோற்றுக் குவியல்; அம்பலத்தாடி - நடராஜர் (சிதம்பரம்), ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன; அருணகிரி - திருவண்ணாமலை; வாரணாசி - வாரணா, அசி என்ற கங்கையின் உபநதிகள் இரண்டு ஓடும் காசி நகர்.

குறிப்பு: திருவாரூரில் பிறக்க, சிதம்பரத்தைத் தரிசிக்க, திருவண்ணாமலையைத் தியானிக்க, காசியில் இறக்க முத்தி கிட்டும்.

## 2. காஞ்சிச் சிறப்பு

காமகோ டிக்குரிய காஞ்சிமா நகரத்த
கலைச்செல்வ மறிந்து கூறக்
காசியே முதலாகக் கன்னியா குமரிவரை
காலால்ந டக்க வேண்டும்
நாமகோ டிக்குரிய நாயகிவி சால்முள
நகரத்த ரசுபு ரிவாள்
நம்பனைச் செல்வனை நன்கமர வைத்தருளி
நாள்தோறும் விழாக்கொள்ளுவாள்
சாமகோ டிக்குதவு செவியினொடு மிதயமே
சத்துசித் தானந் தமாகத்
தக்கதே புரிவித்து வானவரு மானவரும்
சரணகம லம்ப ணியவே
காமகோ டிக்குரிய கற்பகத் தாருவைக்
கண்குளிர நோக்கு வோமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: எல்லோருடைய விருப்பத்தையும் நிறை-வேற்றுதற் குரிய இறைவிக்கு உரிய காஞ்சிமா நகரத்திலுள்ள கலைச் செல்வங்களை முழுமையாக அறிந்து கூறுவதற்குக் காசி நகர் முதல் கன்னியாகுமரி நகர் வரை நடந்து சென்று ஆங்காங்குள்ள சிறப்புக் களை எல்லாம் கண்டு காஞ்சி நகரில் அச்சிறப்புக்கள் யாவும் உள்ள செய்தியை அறிய வேண்டும். பல திரு நாமங்களை உடைய தலைவியாகிய காமாட்சி பரந்த நிலப்பரப்புடைய அந்நகரை ஆட்சிபுரிந்து கொண்டிருக்கிறாள். எல்லோராலும் விரும்பப்படும் செல்வனாகிய சிவபெருமானை அந்நகரில் உகந்தருளியிருக்கச் செய்து நாள்தோறும் அப்பெருமானுக்கு விழா நிகழ்த்தச் செய்வாள். சாம வேத மந்திரங்களைச் செவிமடுத்து உள்ளம் உண்மை அறிவு ஆனந்த மயமாக அப்பெருமாட்டித் தக்க செயல்களையே செய்விப்பதால் தேவரும் மக்களும் அவள் திருவடித் தாமரைகளை வழிபட அத்தலத்தில் அடியார்கள் விருப்பங்களை நிறைவேற்றுதற்குரிய கற்பகமரமாக வீற்றிருக்கும் காமாட்சி அம்மையை நம் கண்கள் குளிர்ச்சி பெறுமாறு தரிசிப்போமாக. உலகை வாழச்செய்ய மேம்பட்ட கங்கையைப் பெருக்குவித்த காசி விசுவேசப் பெருமானே! நீயே மங்கல மூர்த்தி ஆவாய்.

அ.பொ: காமகோடி - விருப்பங்களை நிறைவேற்றும் தெய்வம்; நாமகோடி - எண்ணற்ற திருப்பெயர்கள்; சாமகோடி - சாமவேத மந்திரம்; நாயகி - காமாட்சி; மானவர் - மனிதர்; கற்பகத்தாரு - தேவருலகத்துச் சந்தனம்; அரிச்சந்தனம், சந்தானம், மந்தாரம், பாரிசாதம் என்ற ஐந்து தெய்விக மரங்கள்.

## 3. அயோத்திச் சிறப்பு

எத்துணைய வீரர்களும் எண்ணற்றப் படைகளொடும்
எதிர்ந்துசமர் வெல்லவ ரியதாய்
இருக்குமுத லாம்வேத நான்கினொடும் அங்கமதனால்
இருமூன்றும் வேறு நூலும்
உத்தமகு லத்தின்வரு சீடர்பதி னாயிரர்க்கு
ஒப்பற்ற குருகு லத்தே
ஓதுவித் துணவும்கொ டுத்தகு லபதியாய்
உயர்தவ வசிட்ட முனிவர்
வைத்ததரு மத்திநெறி மாறாது வாழ்ந்துலகு
மன்னரசு பெற்ற நகராய்
மனுதரும நிலையமாய் மனிதரே தேவராய்
வாழ்வுபெறப் பெற்ற பேரூர்
கைத்ததை யினிப்பாக்குங் காகுத்த வள்ளல்வாழ்
கதிதரும யோத்தி யலவோ
காசினியை வாழ்விக்க் வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: எண்ணற்ற வீரர்கள் படைக்கலன்களொடு எதிர்த்துப் போரிட்டாலும் வெல்ல முடியாத நகரமாய், இருக்கு முதலிய நான்கு வேதங்கள், நிருத்தம் முதலிய ஆறு வேதாங்கங்கள், ஏனைய அறுபத்து நான்கு கலை நூல்கள் ஆகியவற்றை உத்தம குலத்தில் தோன்றிய மாணாக்கர் பதினாயிரவருக்குத் தனக்கு ஒப்பில்லாத குருகுலப் பள்ளியிலே கற்பித்து, அம்மாணாக்கருக்கு உணவும் வழங்கிய, பலருக்கு ஆசிரியராகிய குலபதியாய் விளங்கிய மேம்பட்ட தவத்தை உடைய வசிட்ட முனிவர் நிறுவிய அறநெறி வழுவாமல் வாழ்ந்து இவ்வுலகைப் பாதுகாத்த நிலைபெற்ற அரசாட்சி நிகழ்த்தப் பெற்ற பேரூராய் மனு தருமத்துக்கு இருப்பிடமாய், மனிதர்களே தம் பண்பு செயல்களால் தேவர் நிலைக்கு உயருமாறு வாழப் பெற்றதாய், கசப்பையும் இனிக்கச் செய்யும்

காகுத்தன் என்ற அரசன் மரபில் உதித்த வள்ளலான இராமபிரான் வாழ்ந்த நற்கதி வழங்கும் பேரூர் அயோத்தி அன்றோ?

அ.பொ: அயோத்தி - போரிட்டு வெல்ல முடியாத பேரூர், ஆறங்கம் - நிருத்தம், வியாகரணம், கற்பம், கணிதம், பிரமம், சந்தம் என்பன, குலபதி - ஆயிரக்கணக்கான சீடர்களைப் பயிற்றுவித்த ஆசிரியர், காகுத்தன் - ககுத்தன் என்ற அரசன் மரபில் பிறந்த இராமபிரான்; கதி - நல்வினைப் பேறு.

## 4. மதுரைச் சிறப்பு

கஞ்சபவன் யாதவர் குலம்வளர வேண்டியே
கருதிப்ப டைத்த நகரம்
கண்ணனொடு பலராமன் இளமைவிளை
யாட்டெலாம்
கண்டகோ குலம ருகுறத்
தஞ்சமென வருவாரை யானந்த வாழ்விலே
சார்புறச் செய்யு நகரம்
தனயர் பலரோடு மகிழ் பத்தினியர் எண்மரைத்
தாங்குகரி யோன்பெ ருமையை
நஞ்சனைய மனமுள சராசந்த னாதியோர்
நன்கறிய நின்ற நகரம்
நந்தகோன் திறையளந் தன்போடி ணங்கிவாழ்
நராதிபதி வாழ்ந்த நகரம்
கஞ்சகுல மன்னனொடு கண்ணனே மாய்த்தருட்
கதிநல்கு மதுரை யன்றே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பிரமன் யது மரபில் தோன்றிய யாதவர்களின் மரபு வளர விரும்பித் திட்டமிட்டுப் படைத்த பேரூர் வடமதுரையாகும். பலராமன் கண்ணனோடு இளமைப் பருவத்தில் நிகழ்த்திய விளையாடல்களுக்கு எல்லாம் இருப்பிடமான கோகுலம் தன் பக்கத்தில் அமைய, தன்னையே பற்றுக் கோடாகக் கொண்டு வருகின்றவர்களை எல்லாம் மகிழ்ச்சியான வாழ்க்கையிலே பொருந்துமாறு செய்த பேரூர் அது. தேவிமார் எண்மரையும் புதல்வர் பலரையும் கொண்ட கண்ணனுடைய பெருமையை, விடத்தை ஒத்த கொடிய மனத்தை உடைய சராசந்தன்

முதலியோர் நன்கு உணருமாறு நிலைபெற்ற பேரூர் அது. நந்தகோபன் பசுக்களின் நெய், தயிர் போன்றவற்றைக் கப்பப் பொருளாக வழங்கி அன்போடு பொருந்தி வாழ்வதற்குக் காரணமான அரசன் வாழ்ந்த நகரம். கம்சனுடைய குலத்தில் தோன்றிய தீய மன்னர்களைக் கண்ணனே அழித்து, நல்லவர்களுக்குத் தன் அருளாகிய பேற்றினை வழங்கிய நகரம் வட மதுரை அன்றோ?

அ.பொ: கஞ்சபவன் - திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றிய பிரமன், யது - சந்திரன் குலத்து மன்னர் தலைவருள் ஒருவன், கோகுலம் - திருவாய்ப்பாடி, பத்தினியர் எண்மர் - உருக்குமணி, சத்தியபாமை, காளிந்தி, மித்திரவிந்தை, சத்தியை, பத்திரை, இலக்கணை, சாம்பவதி என்பார். சராசந்தன் - சரை என்ற பேயினால் உயிர் வழங்கப்பட்ட பெருமன்னன், கம்சனுடைய மாமனார், நராதிபதி - கம்சன் தந்தையாகிய உக்கிரசேனன், நந்தகோன் - கண்ணனின் வளர்ப்புத் தந்தை.

## 5. அவந்திச் சிறப்பு

பொன்னினொளி தெளியாது நீவாரத் தானியம்
புல்லினிழல் போய்த்தி ரட்டிப்
பொறுமையொடு பசிதாங்கு மனைவியொடு மக்கள்பலர்
பூரிப்பை யெய்தநி னையாது
அன்னியரை யிரவாது தன்னகத் தூறியெழும்
ஆனந்த மதுவில் என்றும்
அப்பிரம வானந்த அனுபவத் தாழ்ந்துருகும்
அந்தண சுதாமன் வாழ்ந்த
தன்னிகரில் நகரமே அவந்தியா மென்றுநாம்
சாதித்தல் வேண்டு மன்றே
சச்சிதா னந்தபர மானந்த மூர்த்தியே
தம்பிமுறை கொண்ட மறையோன்
கன்னியர்கள் திலகமாம் பன்னியுடன் வாழ்வுறீஇக்
கதிபெற்ற புண்ணிய நகரம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பொன்னின் ஒளி மேம்பட்டது ஆதலின் பொன்னைத் தேடித் திரட்ட வேண்டும் என்ற எண்ணம் இன்றி, பொறுமையோடு பசியைத் தாங்கிக் கொண்டிருந்த மனைவியும் நன் மக்கள்

பலரும் வளமாக வாழ்ந்து மகிழ்ச்சி அடைய வேண்டும் என்பதனைக் கருதாது, மற்றவரிடம் எந்தப் பொருளையும் இரந்து பெற நினையாது, காட்டில் உதிர்ந்து கொள்வாரும் இன்றிச் சிதறிக் கிடக்கும் நீவாரப் புல்லின் தானியத்தைத் திரட்டி உணவுக்கு வழங்கி, தன் உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பெருகும் ஆனந்தத் தேனில் தோன்றிய அந்தப் பிரமானந்த அனுபவத்தில் எந்நாளும் முழுகி மனம் உருகும் அந்தணனாகிய சுதாமன் வாழ்ந்த ஒப்பற்ற பேரூரே அவந்தியாகும் என்று நாம் உறுதியாக மனத்துக் கொள்ள வேண்டும். உண்மை, அறிவு, ஆனந்த வடிவமான கண்ணபிரானையே தம்பி முறையாகக் கொண்ட அந்தச் சுதாமன், மங்கையர் திலகமாகிய தன் மனைவி சுசீலையோடு வாழ்வை நிகழ்த்தி நற்கதி அடைந்த புண்ணியத்தை வழங்கிய திருத்தலம் அவந்தியாகும்.

அ.பொ: பொன்னின் ஒளி தெளிதல் - பொன் ஒளியில் மயங்கிப் பொன்னைத் தேடித் திரட்டுதல், நீவாரம்- நெல் போன்று தானியம் வழங்கும் ஒருவகைக் காட்டுப்புல், சுதாமன் - குசேலனின் இயற்பெயர், பன்னி - சுதாமன் மனைவியாகிய க்ஷுத் க்ஷுஷாமா என்னும் சுசீலை, அவந்தி - முத்தி வழங்கும் நகரங்கள் ஏழில் ஒன்று.

## 6. கோவர்த்தனபுரிச் சிறப்பு

ஆன்மசக் தியின்மிக்க பக்தியோ கத்தினவர்
ஆயிரவர் கூடும் அவையும்
ஆழியிலி ருந்தெழுந் தெய்தியருள் தாருமய
ஆனந்த மூர்த்தி நனியும்
மான்மிய மிகுந்தபே ராலயத் தன்னமிடு
மடைப்பள்ளி வாய்த்த வாய்ப்பும்
மாமேரு போன்றதொரு தேரில்நூ றாயிரவர்
வன்கயிறு தொட்டி ழுக்கத்
தேன்மலியு மலர்சூடு மிறைவியொடு மிறைவனே
திருத்தேரில் வருசி றப்பும்
தேவரும் பெறவரிய காட்சியா யின்றளவும்
சீர்மிகுந் தோங்கு நகரம்
கான்மலியு மலர்மிக்க கோவர்த் தனப்புரி
கதிநல்கு பெருந கரமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: ஆன்மாவின் பேராற்றல்களுள் மேம்பட்ட பக்தி யோகத்தில் ஈடுபட்ட ஆயிரக்கணக்கான சான்றோர் கூடியிருக்கும் சபையும், பாற்கடலிலிருந்து வெளிப்பட்ட, வேண்டியவர்களுக்கு வேண்டியவற்றை நல்கும் கற்பகமரம் போன்ற ஆனந்த மூர்த்தியாகிய திருமால் உகந்தருளியிருக்கும் மிகவும் மேம்பட்ட சிறப்பினை உடைய பெரிய கோயிலில், வருபவருக்கு எல்லாம் உணவு வழங்கும் சிறப்புடைய மடைப் பள்ளியும், மகாமேரு மலை போன்ற கம்பீரமான திருத்தேரினை வலிய கயிற்றை இணைத்து நூறாயிரம் பேர் இழுக்க அத்தேரில் பூவினைச் சூடிய இறைவியோடு இறைவன் வீதி உலாவரும் சிறப்பும், தேவர்களும் காண்பதற்குப் பெறல் அரிய காட்சியாய்த் தோற்றமளிக்க இன்றும் கூடச் சிறப்பு மிக்கு மேம்பட்ட பேரூர். நறுமண மிக்க பூக்கள் நிரம்பக் காணப்படும். கோவர்த்தனபுரி என்ற பெயருடையதாய்த் தன்னை வழிபடுபவர்களுக்கு நற்கதி வழங்கும் திருத்தலமாகும்.

அ.பொ: தாருமயம் - கற்பக மரத்தின் இயல்பாகிய கொடை, ஆழி - கடல், மடைப்பள்ளி - கோயிலில் நிவேதன அமுது சமைக்கும் இடம், கான் - நறுமணம்.

## 7. துவாரகா நகரம்

கண்ணபல ராமர்பல மல்லர்தலை சாய்த்தபின்
கஞ்சனை வதைத்த ரசினைக்
கடுஞ்சிறையி னைந்தகுல மன்னரே பெறுகென்று
கருணைபுரி கார ணத்தால்
வண்ணமுகி லாயவனை மாயனென் றுணராத
மாவலி சராஅசந் தனே
மாமனாம் கஞ்சற்கு மைத்துனன் பெண்ணீந்த
மரபினா னெனுமுறை மையால்
திண்ணமுறு பகைமையோடு பலமுறை செருத்ததாற்
றிருமதுரை நகர்நீங் கியே
திரைகடலி னிடையிலே புதிதாயெ ழும்பியருள்
செல்வமலி துவரை நகரம்
கண்ணகுல யாதவர் சிறப்புற நிறைந்தெழும்
கதிநல்கு திருந கரமாம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: கண்ணனும் பலராமனும் மல்லர் பலரை அழித்த பிறகு கம்சனைக் கொன்று, அரசாட்சியைக் கம்சனால் சிறையிடப்பட்டு வருந்திய அவன் தந்தையாகிய உத்தமகுல மன்னனாகிய உக்கிரசேனனே பெறுமாறு கருணையால் தீயோரை அழித்து நல்லோரைப் பாதுகாத்த காரணத்தால், கார்மேக நிறத்தவனாகிய கண்ணனைத் திருமாலுடைய அவதாரம் என்று உணராத மிக்க வலிமையை உடைய சராசந்தன் கம்சனுக்குப் பெண் கொடுத்த மாமனாகிய காரணத்தால், கம்சனுக்கு உறவு முறையினன் என்பதனை மனங்கொண்டு அவனைக் கொன்ற கண்ணனிடத்து உறுதியான பகைமையோடு பலமுறை வடமதுரையை நோக்கிப் படையெடுத்து மக்களுக்கு அமைதியின்மையை வழங்கியதால், மக்கள் நலம் கருதி அழகான வடமதுரை நகரை விட்டு நீங்கி, அலைகளை உடைய கடலின் நடுவிலே புதிதாகத் தோற்றுவிக்கப் பெற்றுக் கண்ணன் குலத்தவரான யாதவர்கள் சிறப்புறுமாறு எல்லா வளங்களும் நிறைந்து தோன்றித் தன்னை வழிபடுவாருக்கு நற்கதி வழங்கும் திருத்தலமாகும்.

அ.பொ: மல்லர் - சாணூரன், முட்டிகன் என்போர், பலமுறை - பதினெட்டு முறை, செருத்தல் - பகைத்துப் போரிடல்,

## 8. மாயாவதி நகரம்

இமயமலை முடியிலே தவமுனிவர் பலர்சார
இறைமையை விளக்கு நகரம்
இயக்கமு மயக்கமு மிலாதபொரு ளெதுவென்று
இயம்பவே முயலு நகரம்
சமயமுடி பியாதென்று சாத்திரக் குடிஞையாய்ச்
சதுர்வேத சாக ரத்தாற்
சான்றதனை உலகறிய நாட்டுவது நோக்கமாச்
சற்சங்கம் ஓங்கு நகரம்
தமையனொடு தம்பியாய்த் தம்பியொடு தமையனாய்த்
தரணிமிசை வந்த பெருமான்
சாத்துவிக மாயையாற் தாமசம ழித்தருளு
சத்திபெறு சித்தி நகரம்
கமையுருவ நிலமங்கை முடியான மாயையாக்
கதிநல்கு நகர மென்போம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பனிமலையாகிய இமயமலையின் உச்சியிலே தவத்தின் மேம்பட்ட முனிவர்கள் பலர் தங்குமாறு தெய்வத்தன்மையை விளக்கும் திருத்தலம்; போக்கு வரவும் கலக்கமும் இல்லாத பரம்பொருள் யாது என்பதனை விளக்கிக் கூறுவதற்கு முயலும் திருத்தலம்; அறவழிகளாகிய சமயங்கள் முடிந்த முடிவாகக் கொள்ள வேண்டுவது யாது என்று சாத்திரங்களையும் நான்கு வேதக் கடல்களையும் சான்றாகக் காட்டி நன்மக்கள் உண்மையை உணரத் தெரிவிக்கும் செய்தியை நோக்கமாகக் கொண்டு சான்றோர் குழாம் சிறப்புற்று இலங்கும் திருத்தலம். இராமாவதாரத்தில் அண்ணனும் தம்பியுமாய், கிருஷ்ணாவதாரத்தில் தம்பியும் அண்ணனுமாய் இவ்வுலகில் அவதரித்த திருமால் சத்துவச் சொரூபமாகிய தன் ஞானத்தால் தாமசமாகிய அஞ்ஞான இருளை அழித்து அருள் செய்யும் ஆற்றல் பொருந்திய மந்திர சித்தியுடைய திருத்தலம்; அதுவே பொறுமைக்கு இருப்பிடமாகிய பூமிதேவியின் உச்சியாக உள்ள மாயாபுரி என்ற பெயருடைய நற்கதி வழங்கும் திருத்தலம் என்று கூறுவோம்.

அ.பொ: இயக்கம்-போக்கு வரவு, பிறத்தல் இறத்தல், குடிஞை-ஆறு, சாத்திரங்கள்-ஆறுகள், வேதம்-கடல், சற்சங்கம் - சத்சங்கம் - சான்றோர்குழாம், மாயை-ஞானம், மாயாவயூநம்-ஞானம் ( வேதநிகண்டு ) கமை- க்ஷமை, பொறுமை, சித்தி - உறுதிப்பாடு.

## 9. இருடிகேசச் சிறப்பு

கங்கைமா நதிபெருகி யிமயமலை நீங்கியே
கடுந்தரையை நோக்கி யெய்தும்
காட்சியின தழகையும் மாட்சியைய முணரவே
கடவுளருள் கண்ட தலமாய்
மங்கையரு மாடவரும் மனமுருகி யிறைவனது
மான்மியம் தெளிந கரமாம்
மாதவச் செல்வர்பலர் இரவினொடு பகல்பனியை
மதியாது மலைநி லத்தே
அங்கையை யுயர்த்தியும் ஒருதாளை யூன்றியும்
அருந்தவம் பூண்ட நிலையம்
அன்னதே நீயென்ற மறைமுடியின் முடிபொருள்
அறிவர்தெளி இருடி கேசம்

கங்கையங் கரைமீது சிவானந்த அடிகளார்
கதிகண்ட நிலையின் னதே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: கங்கையாகிய பெரிய ஆறு பெருகி இமயமலையை விடுத்து அழுத்தமான தரையை நோக்கி இறங்கி வரும் காட்சியின் அழகையும் பெருமையையும் மக்கள் உணருமாறு இறைவன் அருள் பாலிக்கும் திருத்தலமாய், மகளிரும் ஆடவரும் உள்ளம் உருகி இறைவனுடைய மேதக்க பெருமையைத் தெளிவாக உணரும் இடமாய், தவமாகிய செல்வத்தை உடைய முனிவர் பலர் இரவும் பகலும் பனியின் கொடுமையைப் பொருட்படுத்தாது அழகிய கைகளை உயர்த்தியும் ஒரு காலை ஊன்றி ஒரு காலை உயர்த்தியும் கடுந்தவம் புரியும் தலமாய், நீயே பிரமமாவாய் என்ற உபநிடதத்தின் முடிந்த பொருளை முக்காலமும் உணர்ந்த சான்றோர்கள் தெளிவாக உணரும் இருடீகேசம் என்ற புனிதத்தலம் கங்கைக் கரைமீது சிவானந்தர் என்ற முனிவர் நற்கதியை அடைய நிறுவிய ஆசிரமத்தை உடையது.

அ.பொ: மான்மியம் - பெருமை, மறைமுடி - உபநிடதம், அறிவர் - முக்காலமும் உணர்ந்த ஞானியர், சிவானந்தர் - அண்மைக் காலம் வரை வாழ்ந்த துறவி ஒருவர், நிலையின்னது - நிலையத்தை (ஆசிரமத்தை) உடையது.

### 10. அரித்துவாரச் சிறப்பு

அமரநதி நீராட வருநகர வகையுளே
அருந்தவம் சான்ற நிலையம்
அரித்துவாரம் என்னவே தத்தாத்தி ரேயமுனி
அன்றறிந் தோது நகரம்
குமரனையு மிகழ்கின்ற எழில்மிக்க தவயோகி
கும்பமே ளாவி ழாவிற்
குணக்கிலே கதிர்வருமுன் ஆறிரண் டாண்டிலொரு
குணமிகு முகூர்த்தத் திலே
அமரகதி கருதியோ பேரின்பம் வேண்டியோ
அவதூ தர்பலர் மூழ்கவே
அத்தகைய திருநாளை விழிகொண்டு காணவே
ஆயிரம் கோடி வருமே

கமழுமண மலரோடு தீபநீ ராசனம்
கங்கைநதி கண்ட ருளுவாள்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தெய்வத் தன்மை வாய்ந்த கங்கை நதியில் நீராடுதற்கு அமைந்த திருத்தலங்களுள் அரிய தவம் செய்வதற்கு நல்ல சூழ்நிலை அமைந்த திருத்தலம், முருகனையும் இகழுமாறு அழகில் மிக்க தவமும் யோகமும் உடைய தத்தாத்ரேயர் என்ற முனிவர் அக்காலத்தில் இதன் பெருமையை அறிந்து சிறப்பித்த இடம். கும்பமேளா என்ற திருவிழா நிகழும் நாளிலே கிழக்கில் கதிரவன் உதிக்கும் முன் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மேம்பட்ட நல்ல நேரத்திலே தேவராகப் பிறப்பதைக் கருதியோ வீடுபேறாகிய பேரின்பத்தை விரும்பியோ ஆடையின்றி உலவும் சான்றோர் பலர் கங்கை நதியில் மூழ்குகின்ற அத்திருநாளை இக்கண்களால் காண்பதற்கு ஆயிரக்கணக்கான நன்மக்கள் வருவார்கள். அந்நாளில் கங்கைநதி நறுமண மலரோடு தீப ஆரத்திகளைப் பெற்று மகிழ்வாள்.

அ.பொ: தத்தாத்திரேயர் - அத்திரி முனிவருக்கும் அநசூயைக்கும் மகனாகத் தோன்றிய முனிவர், கும்பமேளா - பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மாசி மாதம் கங்கையில் நீராட்டு நிகழ்த்தும் பிரசித்தமான திருவிழா, அவதூதர் - ஆடை அணியாதவர், நீராசனம் - ஆலத்தி.

## 11. மும்பை நகர்ப் பெருமை

மும்பைமா நகரென்று பாரதப் பெருமக்கள்
மொழிநகரம் ஒப்பற் றதே
முத்திநக ரேழினிது புகவில்லை யாயினும்
முத்தர்பலர் புக்க நகரே
அம்பைமலை மகளோடு கலைகளு மருகமர
அருளுதிரு மகள்கோ யிலாய்
அலைகடலி னருகிலே அகலமுடி மீதமையும்
ஆல யந்திருமிக் கதே
மும்பையம் பிகையுறையு நடுநகர்க் கோயிலோ
முக்திதரு சக்தி நிலையே
முகுந்தனுக் கொருகோயில் தென்னாட்டு முறையிலே
முகிழ்த்துள்ள திந்ந கரிலே

கம்பைமா நதிசூழு காஞ்சிநகர் பெற்றசீர்
காண்பதிம் மும்பை நகரம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: மும்பை மாநகரம் என்று இப்பாரத தேயத்தில் வாழும் பெருமக்கள் சிறப்பாகக் குறிப்பிடும் பேரூர் தனக்கு நிகராகப் பிறிதொரு பேரூர் இல்லாத வகையில் உயர்ந்ததாகும். முத்தி தரும் திருத்தலம் ஏழினுள் மும்பை ஒன்று அன்று, எனினும் முத்தி பெறும் பேறுடையார் பலர் வந்து தங்கியிருந்த பேரூர் இது. மலைமகளாகிய பார்வதியோடு கலைமகளும் தன் அருகில் விரும்பித் தங்கியிருக்க உலக உயிர்களுக்கு அருள் செய்யும் திருமகளுடைய இருப்பிடமாய் அலைகள் வீசும் கடலின் அருகிலே பரப்புடைய உயர்ந்த இடத்தில் அமைந்துள்ள திருக்கோயில் அழகு மிக்கதாகும். ஊர் நடுவிலே மும்பை அம்பிகை உகந்தருளியிருக்கும் திருக்கோயில் வீடுபேற்றை வழங்கும் சக்தி நிலையமாகும். இதே நகரிலே முகுந்தனாகிய திருமாலுக்குத் தென்னாட்டு முறைப்படி ஒரு கோயில் புதிதாக எடுக்கப் பட்டுள்ளது. பண்டு கம்பை மாநதியால் சூழப்பட்டிருந்த காஞ்சிமா நகரம் பெற்ற பெருமையை இன்று மும்பை மாநகரில் காணலாம்.

அ.பொ: முத்தி தரும் திருத்தலங்கள் ஏழு - அயோத்தி, வடமதுரை, மாயாபுரி, காசி, துவாரகை, அவந்தி, காஞ்சி என்பன, மலைமகள் அம்பை - இமவான் மகளாகிய அம்பிகை, அகலமுடி - பரந்த மேட்டிடம், இமுத்தர்- வீடுபேறடைய முயலும் முமுக்ஷுக்கள், முகுந்தன் - மோட்சம் வழங்கும் திருமால், கம்பை- புராணகாலத்தில் காஞ்சிமா நகரில் ஓடிய ஆறு.

## 12. காளிகட்ட நகரப் பெருமை

காளிகா தேவியே காளிகட் டத்திலே
கற்கோயில் வாழ்வு வந்தாள்
கண்டபலர் நெஞ்சம்து ணுக்குறத் தக்கதொரு
காட்சிதரு கோலத் தினாள்
மாளிகா மயமான நகரிலே கங்கைநதி
வருகின்ற சிறுவ ழியிலே
வளர்பெருங் கோயிலிடை மண்டபம் பின்புறம்
வணக்கமே வேண்டி நிற்பாள்

சூளிகா மகுடமுள கோயிலாள் மனமெலாம்
சூழ்ச்சிமய மாம னிதரைத்
துகளாம தித்ததாலும் நரபலியை வேண்டாத
தூய்மை நிலை மேவு கின்றாள்
காளிகா கட்டநகர் கல்விகலை மிக்கின்று
கனமிக்க நிலையி லுளதே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காளி என்ற பெண்தெய்வம் ஆம் தேவி காளி கட்டம் என்று பண்டு வழங்கப்பட்ட கல்கத்தா நகரிலே கல்லால் கட்டப்பட்ட கோயிலிலே தங்கியிருத்தலை விரும்பி ஏற்றுக் கொண்டாள். தன்னைத் தரிசிப்பவர் உள்ளம் அச்சத்தால் நடுங்குமாறு தரிசனம் வழங்கும் அஞ்சத்தக்க வடிவுடையாள். பெரிய கட்டிடங்கள் பலவும் அமைந்துள்ள இப்பேரூரிலே கங்கையாறு ஓடி வருகின்ற சிறிய வழியிலே அமைந்துள்ள பெருங்கோயிலிலே அமைந்துள்ள தன் மண்டபத்தில் தன்னுடைய பின்பக்கத்தை நோக்கியே மக்கள் வணங்குவதையே அவள் விரும்பி நிற்கிறாள். உச்சியிலே ஸ்தூபி அமைந்துள்ள கோயிலை உடைய காளிதேவி, உள்ளமெல்லாம் வஞ்சனை நிரம்பிய மேம்பட்ட மனிதப் பிறப்பெடுத்த உயிர்களைத் தூசியாகக் கருதி, பிறரால் சிறப்பாகக் கூறப்படும் மனித உயிர்ப்பலியை விரும்பாத தூய்மையான தன்மையை விரும்புகின்றாள். காளிகட்டம் எனப்பட்ட கல்கத்தா என்னும் பேரூர் இக் காலத்தில் கல்வியிலும் கலைகளிலும் மேம்பட்ட மிக உயர்ந்த நிலையில் உள்ளது.

அ.பொ: காளிகா - காளி என்ற பெயருடையவள்
துணுக்குறல் - நடுங்குதல், மாளிகா - மாளிகை. பெரிய கட்டிடங்கள், சூளிகை - கருவறையின் மேலுள்ள விமானத்தின் தூபி, நரபலி - மனிதனை வெட்டி நிவேதனம் செய்தல்
காளிகா கட்டம் - இன்றைய கல்கத்தா நகரம்.

## 13. அத்தினாபுர நகரப் பெருமை

குருகுலப் பெருமக்கள் அரசாண்ட நகரமாய்க்
கொற்றமிகு மற்ற மன்னர்
கோடானு கோடிபொன் செலவிட்டு மாளிகை
கூடமா டங்க ளாக்கி

வருகுலச் செல்வமென மாண்புற வளர்த்ததாம்
வளநகரம் இன்று முளதே
மாபாரதக் கதையில் வாழ்ந்தநக ராயினும்
மன்னர்குல மொன்றின் றியே
பெருகுறப் பெற்றநம் பாரதப் பெருநாடு
பெற்றபே ராட்சி நகரம்
பிறரரசு நீங்கிய பின்நமது பேரரசு
பேறுடைய தில்லி நகரம்
கருவுறப்பெறு செல்வர் எவருக்கும் உரிமைதரு
கலைசான்ற அத்தி னபுரம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: குருகுலத்தில் தோன்றிய கவுரவர் பாண்டவர் ஆகிய பெருமன்னர் அரசாண்ட பேரூராய், பின்னர்த் தோன்றிய வெற்றிமிக்க மற்ற மன்னர்கள் பலகோடிப் பொன்னைச் செலவு செய்து மாடம் மாளிகை கூடம் கோபுரம் ஆகியவற்றை எடுப்பித்து தொன்றுதொட்டு வருகின்ற இப்பாரதக் கதையில் கூறப்படும் பழைய நகரமாயினும் முடியாட்சி நீங்கப்பெற்று, குடியாட்சி பெருகி வருகிற நம் பாரதப் பெருநாடு தன் தலைநகராகப் பெற்ற பெருமை உடையது இது. வேற்று நாட்டவர் நம்மை ஆண்ட அந்நியர் ஆட்சி அகன்ற பிறகு, நம் பெரிய குடியரசு பெற்றுள்ள தலைநகராகிய இத் தில்லி மாநகரம், இந்நாட்டிலே பிறப்பெடுத்த செல்வத்தை உடைய எல்லா மக்களுக்கும் சமமான உரிமைகளை வழங்கும் கலை நயங்கள் மிக்க பழைய அத்தினாபுர நகரமாகும்.

அ.பொ: குருகுலம் - குரு என்ற சந்திரகுல அரசனுடைய மரபு, கோடானுகோடி - பலகோடிகள் என்ற எண்ணிக்கை, மாடம் - பல அடுக்குக் கட்டிடம், மாளிகை - அழகான வீடு, கூடம் - அரங்கங்கள், குலச்செல்வம் - தொன்று தொட்டு இருந்துவரும் செல்வம்.

## 14. இராமேசுவர மகிமை

இராமனே வழிபட்ட இறைவனைப் பெற்றுள்ள
திராமேச் சுரச்சி வதலம்
இராகவற் கொருதேவி சீதைகைம் மலரினால்
இழைத்ததிரு மணலி லிங்கம்

இராமனது பாவங்கள் போக்கவே முனிவர்கள்
இருக்கினால் வேண்டு மூர்த்தி
இராவணற் கொன்றதற மாயினும் கொலைப்பாவம்
என்பதாற் பரிகா ரமே
மராமரம் வில்லம்பி னாற்துளைத் தன்றுசமர்
வாலியை வதைத்த வள்ளல்
மனமார்ந்த கழுவாயெ னச்செய்த வழிபாடு
வாய்ந்துவர மீந்த நகரம்
கராமன்று பற்றவே கயேந்திரன் விளித்ததும்
கருணைபொழி மாலின் நகரம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திருமாலின் திரு அவதாரமான இராமனே வணங்கிய சிவபெருமானைப் பெற்றுள்ள இராமேசுவரம் எனப்படும் சிவத்தலம் இராமனுடைய ஒப்பற்ற தேவியாகிய சீதாப் பிராட்டி தன் மலர் போன்ற கைகளால் குவித்து அமைத்த மணல் இலிங்கத்தை உடையது. இராமனுடைய பாவங்களைப் போக்குவதற்கு முனிவர்கள் வேத மந்திரங்களை ஓதி வேண்டிய பெருமான் இங்குள்ள இறைவனாவான். பிறன் மனைவியை விரும்பிய இராவணனை இராமன் கொன்றது அறமாயினும், அரசனாக இராமல் முனிவன் நிலையில் இருந்த இராமன் செய்த கொலை தீச்செயலாக அமையுமே என்று அதற்குக் கழுவாயாக அவனால் இந்த இலிங்கம் தாபிக்கப் பெற்றது. மராமரம் ஏழினையும் தன் வில்லிலிருந்து புறப்பட்ட ஒற்றை அம்பினால் துளைத்துப் பின் தம்பியோடு போரிட்ட வாலியைப் பிறன் மனைவியைக் கைக்கொண்ட செயலுக்காகக் கொலை செய்து அவனுக்கு நற்கதி வழங்கிய வள்ளலாகிய இராமபிரான் மனத்துக்கு நிறைவு தந்த கழுவாயாக இலிங்கத்தை நிறுவிய வழிபாடு அமையப்பெற்று அவனுக்கும் ஏனைய அடியவர்களுக்கும் பேறு வழங்கும் திருத்தலம் இது. முன்னொரு காலத்தில் முதலைத் தன் காலைக் கௌவவே, கசேந்திரன் 'ஆதிமூலமே' என்று அழைக்க அந்த யானைக்குக் கருணை புரிந்த திருமால் அமைத்த திருக்கோயிலை உடைய திருத்தலம் இந்த இராமேச்சுரம் ஆகும்.

அ.பொ: இராமேச்சுரம் - இராம + ஈச்சுரம் - இராமன் அமைத்த கோயிலை உடைய திருத்தலம், பரிகாரம் - தீவினையைப் போக்கும் கழுவாய், சமர் - வாலி சுக்கிரீவனோடு செய்த போர், கராம்- முதலை, விளித்தல் - பெயரிட்டு அழைத்தல்.

## 15. திருப்பூவணப் பெருமை

மலர்வகைகள் மிக்கதொரு காட்டிலே பண்டைநாள்
வந்தெழுந் தான்ப ரமனே
வனப்பினு ருவாய்வரும் தேவியொடு பூவனம்
மகிழ்வுறக் கோயில் கொண்டான்
பலர்வரவு வாய்த்தபின் மூவர்தமிழ் மறைதரும்
பாசுரம் செவியி லேற்றான்
பண்புமிகு பாவையாய்க் கணிகையர் இனத்தில்
பலவகைக் கலைகள் கற்றே
நலர்புகழும் மகளாகி நாகரிக மிகவாழ்ந்த
நாரிமணி பொன்ன னையவள்
நம்பனுக் குரிமையாச் செல்வமெல் லாமீந்து
நற்கதியை யேற்ற நகரம்
கலர்மனமு நாணவே யென்பெலா மலர்களாக்
காட்டுநதி சூழு நகரம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பலவகைப் பூக்கள் மிகுதியாக மலரும் காடு ஒன்றில் மேம்பட்ட சிவபெருமான் உகந்தருளி அழகே உருவமாய் அமையும் தேவியாகிய உமாதேவியோடு அப்பூக்கள் நிரம்பிய காடு மகிழுமாறு அங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளான். பலரும் அத்திருக் கோயிலுக்கு வந்து வணங்கினர். பிறகு திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்ற அடியவர் மூவரும் வேதக் கருத்தை விழுமிய தமிழில் உரைத்த திருப்பாடல்களை அப்பெருமான் செவி மடுத்தான். கணிகையர் குலத்தில் தோன்றினும் பண்பினால் மேம்பட்ட அழகிய பொம்மை போல் வாளாய்ப் பலவகைக் கலைகளையும் கற்று நல்லவர் புகழும் பெண்மணியாய் மிகுந்த கண்ணோட்டத்-தோடு தன் வாழ்க்கையை நடத்திய பொன்னனை-யாள் என்பவள் தன் செல்வங்களை எல்லாம் சிவபெருமானுக்கே உரியதாக அளித்து மறுமையில் நல்ல பிறவியை அடைய உதவிய நகரமாய்க் கீழ்

மக்கள் உள்ளமும் வெட்கப்படுமாறு இத் தலத்தில் ஓடும் ஆற்றில் இடப்பட்ட இறந்தவர்கள் எலும்புகள் எல்லாம் பூக்களாக மாறிக் காட்சியளிப்பதாய் அவ்வாற்றினால் சூழப்பட்ட திருத்தலம் திருப்பூவணமாகும்.

அ.பொ: நாகரிகம் - தாட்சணியம், கலர் - கீழ் மக்கள், என்பு - எலும்பு.

### 16. வானரவீர மதுரை நகர மாண்பு

வானவரு மேனையரு நெஞ்சங்க லங்கவே
மண்ணிடையி லங்கை யரசாய்
வருமிரா வணனொடு போர்புரிந் தரியபணி
மனுகுலத் திராக வற்கே
மானமொடு முன்புபுரி வானரக் கணமெலாம்
வளமிக்க தமிழ்நாட் டிலே
வையையின் கரையிலே சோமநாதச் சிவமும்
மங்கையர்க் கரசி யாக
ஆனன மலர்ந்தருளு மானந்த வல்லியும்
அழகுபெற வீற்றி ருக்கும்
ஆலயம் கண்டுவழி பாடுபுரிபெ ருமைகொளும்
அரவகர மாகு மதனைக்
கானமலி வானரர்கள் பணிபூண்ட மதுரையாக்
கலைஞரே புகழு கின்றார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தேவர்களும் மற்ற மனிதர் முதலியோரும் உள்ளம் கலங்குமாறு நிலவுலகில் இலங்கை மாநகர அரசனாய்த் தோன்றித் துயர் விளைத்து வந்த இராவணனோடு போர்புரிந்து அரிய செயல் செய்த, மனு என்ற வேந்தன் மரபில் அவதரித்த இராமபிரானுக்கே பெருமையொடு தம் வலிமையை விரும்பி வெளிப்படுத்திய குரங்குக் கூட்டம் எல்லாம் வளம் மிக்க தமிழ்நாட்டில் வையையாற்றின் கரையிலே சோமநாதர் என்ற பெயரில் சிவபெருமானும் ஆனந்தவல்லி என்ற பெயரில் முகமலர்ச்சியோடு அமைந்திருக்கும் பெண்களுக்கு அரசியாம் உமாதேவியும் அழகாக வீற்றிருக்கும் திருக்கோயிலை அமைத்து அக்கோயில்கள் வழிபாடு செய்த பெருமையை உடைய சிவனடியார்

தங்கும் அக்கிரகாரமாக அமைந்த திருத்தலத்தைக் காட்டிலே மிகுதியாகத் தங்கும் குரங்குகள் திருப்பணி செய்த மதுரை நகரம் என்று கலையில் வல்லவர்கள் புகழ்கின்றார்கள்.

அ.பொ: வானரவீர மதுரை - வானர வீரர் கோயிலமைத்து வழிபட்ட மதுரை என்ற திருத்தலம், முன்பு - வலிமை; ஆனனம் - முகம்; வீறு - வேறொன்றிற்கு இல்லாத அழகு, வீற்றிருத்தல் - பெருமிதத்தோடு உகந்தருளியிருத்தல், கானம் - காடு, அர - சிவபெருமான், அகரம் - அந்தணர் குடியிருப்பு.

## 17. திருவாலவாய்ச் சிறப்பு

அறுபத்து நான்குதிரு விளையாடல் முக்கணான்
ஆலவாய் அகமா டினான்
அரிமர்த்தனப் பெயர்கொள் பாண்டியனை வாதவூர்
அடிகளே தேற்ற விட்டான்
உறுபத்தி யுள்ளத்தர் தண்டமிழ்ச் செல்வமிகும்
ஒன்பதொடு நாற்ப தின்மர்
உறவாக அவரிடையில் வீற்றிருந்து யர்தமிழை
ஓர்ந்தவர லாறு முளதே
மறுவற்ற நெஞ்சமுள நக்கீரர் உரைகூற
வகுத்தனன் களவி யலையே
மதிகுலத் துக்கிரப் பெருவழுதி போற்றவே
வந்தகன மாப்ப லகைமேல்
கறுவற்ற நெஞ்சமொடு புலவர்குலம் அதிலாண்ட
காட்சியது மதுரை நகரே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: முக்கண் மூர்த்தியாகிய சிவபெருமான் திரு ஆலவாய் என்ற திருத்தலத்திலே அறுபத்து நான்கு திருவிளையாடல்களை நிகழ்த்தினார். அரிமர்த்தனன் என்ற பெயருடைய பாண்டிய மன்னனுக்கு வாதவூர் அடிகள் என்ற மாணிக்க வாசகர் உண்மையைத் தெரிவித்து உபதேசம் செய்யுமாறு செய்தார். மேம்பட்ட இறைபக்தி உடையவரும் இனிய தமிழாகிய செல்வத்தால் மிக்கிருப்பவரும் ஆகிய சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மரோடு ஆலவாய்ப் பெருமான் நட்புப் பூண்டு அவரிடையே வீற்றிருந்து தமிழை ஆராய்ந்தார் என்ற வரலாற்றுச் செய்தியும் உண்டு. அப் பெருமான் பழுதற்ற

உள்ளமுடைய நக்கீரர் நல்லுரை கூறுமாறு 'களவியல்' என்ற நூலை இயற்றினார். உக்கிரப் பெருவழுதி என்ற பாண்டிய மன்னன் போற்றுமாறு தோன்றிய சங்கப் பலகையில் வஞ்சனையற்ற நெஞ்சத்தோடு புலவர் குழாம் அமர்ந்து தமிழ் ஆராய்ந்த சிறப்பினை உடையது ஆலவாய் என்ற பெயருடைய மதுரைமா நகரமாகும்.

அ.பொ: ஆலவாய் - மதுரைத்தலம், திருக்கோயிலுக்குப் பெயர், அரிமர்த்தன பாண்டியன் - மாணிக்க வாசகர் காலப் பாண்டிய மன்னன், களவியல் - இறையனார் களவியல் என்னும் அகப்பொருள் நூல், கனமாப் பலகை - மேம்பட்ட சங்கப் பலகை.

## 18. திரிசிராப்பள்ளிச் செல்வம்

முத்தலைச் சிகரியாய் முக்கண்ண னிறைவியொடு
முடுகும்சி ராப்பள் ளியை
மூவரும் போற்றினார் உளமுருக உயிர்க்குலம்
முழுமையின் வாழ்வு பெறவே
சத்தனை சித்தனைப் பிற்றைநாட் புலவரே
தம்மளவி லேபோற் றினார்
தாயுமா னவனென்ற பெயரையவ னெய்தியது
சரித்திர விளக்க மன்றோ?
அத்தனையி முந்தமகள் காவிரித் தென்கரைக்கு
அன்னைவரு முன்ன மீன்றாள்
ஆறுபெரு கக்கண்ட தாயுமன மறுகினாள்
அங்கணன் தாயா யினான்
கத்தனெனு முண்மையை விளக்கினான் நகர்நடுக்
கண்டமலை யுச்சி வாழ்வான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: மூன்று தலைகளை உடைய மலையாய் சிவபெருமான் உமாதேவியோடு உகந்தருளியிருக்கும் திருச்சிராப் பள்ளியை, உயிரினங்கள் நல்வாழ்வு பெறுமாறு மனம் உருகத் தேவாரம் பாடிய மூவரும் போற்றி னார்கள். என்றும் உள்ளவனாய் அறிவு வடிவான அப்பெருமானைப் பிற்காலப் புலவர்களும் தம் பத்தி வெளிப்படப் பாடலால் போற்றினார்கள். அப் பெருமான் தாயுமானவன் என்ற பெயர்பெற்ற நிகழ்ச்சி வரலாறு கண்ட விளக்கமாகும். தன்

கணவனைப் பிரிந்திருந்த பெண் ஒருத்தி தன்தாய் காவரியின் வட கரையிலிருந்து தென்கரையிலுள்ள திருச்சிராப்பள்ளிக்கு வருமுன்னரே மகவைப் பயந்தாள். தான் தென்கரை வருவதற்கு இடை-யூறாகக் காவிரியில் வெள்ளம் ஓடியதனைக் கண்டு அப்பெண்ணின் தாய் தன் மகளின் மகப்பேறு பற்றிக் கவலைப்பட, சிவபெருமானே அப் பெண்ணுக்குத் தாய் உருவில் வந்து மருத்துவம் செய்து தானே எல்லா உயிர்களையும் காக்கும் தலைவன் என்ற உண்மையை உலகுக்கு உணர்த்தினார். அப்பெருமான் அத்திருத்தலத்தின் நடுவில் அமைந்திருக்கும் மலையின் உச்சியில் உகந்தருளியுள்ளார்.

அ.பொ: சிகரி - மலை, திரிசிரா - மூன்று முகடுகள், முடுகும் - விரும்பி வீற்றிருக்கும், மூவர் - திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்ற மூவர், சத்தன் - உண்மை வடிவானவன், சித்தன் - அறிவு வடிவானவன், அத்தன் - தலைவன் ( கணவன் ), கத்தன் - எல்லோருக்கும் தலைவன்.

## 19. தஞ்சாவூர்த் தலமகிமை

தஞ்சைமா நகரென்று தண்டமிழ்த் திருநாடு
தாங்குமொரு பெருந கரிலே
சங்கரன் கோயிலே வீதிதோறு முளவாய
தாமோ தரன்கோ யிலும்
நெஞ்சமுற மெய்யன்பர் போற்றினர் வலம்வர
நிலைபெற்று நிற்ப துண்டே
நேசமன மன்னர்பலர் நிருமித்த கோயில்களை
நேரலாம் வீதி தோறும்
வஞ்சமில் மனத்தினார் தெருக்களும் முடுக்கரும்
வைத்துளார் கோயில் பலவே
மாதேவி சொன்னகா மாட்சியும் வாயுவின்
மைந்தனும் கோயில் கொண்டார்
கஞ்சனருள் சிற்பக்கலை மாட்சிகளை யிந்நகர்
கவின்மலிய நாட்டு மன்றே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தஞ்சை மாநகரம் என்று மேம்பட்ட தமிழ்த் திருநாடு பெற்றிருக்கும் பேரூரிலே சிவபெருமான் திருக்கோயில்கள் வீதி தோறும் உள்ளன. திருமால்

திருக்கோயில்களும் மனமார மெய்யன்பர்கள் வழிபட்டுப் பிரதட்சிணம் செய்யுமாறு பலவாக அப்பேரூரில் நிலைபெற்றுள்ளன. தெய்வப் பற்றுடைய அரசர் பலரும் எடுப்பித்த திருக் கோயில்களை ஆங்குத் தெருத்தோறும் காணலாம். வஞ்சனையற்ற தூய உள்ளத்தவர் தெருக்களிலும் சந்துகளிலும் பல கோயில்கள் கட்டியுள்ளனர். பொன்னாலாகிய காமாட்சியும் வாயுவின் மகனான அநுமனும் மேலை வீதியில் அடுத்தடுத்துக் கோயில் கொண்டுள்ளனர். பிரமன் படைத்த சிற்பக் கலையின் மாண்புகளை இப்பேரூர் அழகு புலப்பட எல்லோரும் காணுமாறு அமைந்துள்ளது.

அ.பொ: சங்கரன் - நன்மை செய்யும் தெய்வமாகிய சிவபெருமான், தாமோதரன் - வயிற்றில் கயிறு கட்டப்பட்டவனாகிய கண்ணன்; தாமம் - கயிறு, உதரம் - வயிறு, தாம + உதரன் - தாமோதரன், நிருமித்த - எடுப்பித்த, முடுக்கர் - அகலக் குறைவான சந்து, சொன்னம் - பொன், வாயுமைந்தன் - அநுமன், உளவாய - இருக்கின்றன, கவின்மலிய - அழகு மிகுதியாகப் புலப்பட.

## 20. திருக்குடந்தைப் பெருமை

காவிரித்தண் ணீரினாற் பேறுபெறு நகர்களுட்
கவின்மிக்க கும்ப கோணம்
கலையினாற் கல்வியாற் கடவுளெறி காட்டியருள்
காலடிக் குரும ரபினாற்
நாவிரியும் அறிஞராற் செல்வமிகும் வணிகரால்
நற்புலமை வாய்த்த பலரால்
ஞானமலி துறவரசர் வாழ்ந்திடு மடங்களால்
நாகரிகம் மிக்க தெனினும்
தூவிரியு மாலயம் கும்பலிங் கத்தோடு
தோன்றிவளர் சார்ங்க பாணி
துணைபூண்ட சக்கரத் தாழ்வான் திருத்தளிகள்
சூழ்ந்துவளர் அழகென் னையே!
காவிரியு மாமகத் தீர்த்த மும் பெறநல்கு
கருணைப்பெ ருக்கென் னையே!
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காவிரியாற்றின் நீரினால் நற்பயன் பெறும் பேரூர்களில் அழகுமிக்க கும்பகோணம் என்ற

திருத்தலம், கலைகளாலும் கல்வியாலும் தெய்வீக வழியை உலகுக்கு அறிவித்து அருளும் ஆதி சங்கரர் மரபில் வந்த துறவிகளாலும், பேச்சாற்றல் சிறந்த அறிஞராலும் செல்வ வளம் மிக்க வணிகராலும் நல்ல புலமை வாய்ந்த அறிஞர் பலராலும், ஆன்ம ஞானம் மேம்பட்ட துறவறக் குருமார்கள் வாழ்ந்திடும் அத்துவைத, துவைத, வீர சைவ மடங்களாலும் பேருருக்கு உரிய எல்லா நலன்களாலும் மேம்பட்டது எனினும், மக்களுக்குப் பற்றுக் கோடாகப் பெரும் பரப்பில் எடுப்பிக்கப் பட்ட கும்பேசுவரர் ஆலயம், அதனை ஒட்டி உயர்ந்து காணப்படும் சார்ங்க பாணி ஆலயம், இக்கோயில்களுக்கு இணையாக அமைந்துள்ள சக்கரபாணி ஆலயம் என்பனவற்றின் அழகு அத்திருத்தலத்துக்கு வருவோர் உள்ளங்களைக் கொள்ளை கொள்வன. காவிரியும் மகாமகக் குளமும் தம்மிடையே நீராடுவாருக்கு வழங்கும் கருணைப் பெருக்காகிய பேறு வியக்கத்தக்கது.

அ.பொ: காலடிக் குரு - ஆதிசங்கரர், துறவரசர் - மடாதி-பதிகளான துறவியர், தூ - பற்றுக்கோடு, விரிதல் - பெரும்பரப்பில் அமைக்கப்பட்டிருத்தல், சார்ங்க-பாணி - வில்லைக் கையிலேந்திய திருமால், சாரங்க பாணி - மானைக் கையிலேந்திய சிவபெருமான் திருத்தளி - திருக்கோயில்.

## 21. திருவாவடுதுறை மாண்பு

நாமுத்தி யெய்துவோம் ஞானசம் பந்தமே
நண்ணுவோம் உலகத் திலே
நந்திதிரு மரபிலே ஞானவமு தத்தினை
நல்கவே வந்த மரபாம்
கோமுத்தி யென்றதல வாழ்வினேம், ஆயினேம்
கோகழியு ணர்ந்த நெறியேம்
குலநெறி வழக்கமும் புலநெறி வழக்கமும்
கொள்கையெ னவேபூண் டுளேம்
தேமுத்தி வேறில்லை சிவமயம் தெளிகென்று
தேற்றுதிரு வாவ டுதுறை
திருமூல நாயனார் தவச்சிறப் போடுபெறு
சீர்மையை யளத்த லெளிதோ
காமுத்தி மார்க்கத்தை வேதாக மத்தினோடு
கதிதேடி யென்று ரைப்போம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: இவ்வுலகில் நந்திதேவர் மரபிலே ஞானமாகிய அமுதத்தினை மக்களுக்கு விரும்பி அளிப்பதற்காக நிறுவப்பட்ட திருமடத்தினை உடையதாய்ப் பசுவுக்கு வீடுபேறு அளித்ததால் கோமுத்திபுரி என்ற பெயருடைய திருத்தலத்தில் யாம் வாழ்ந்து வருகிறோம். ஆன்மாவின் நல்வினை தீவினைகள் நீங்குதற்குரிய திறத்தை உணர்ந்த வழியில் வாழ்கிறோம். மரபு பற்றி வந்த குல ஒழுக்கத்தையும் வேதம் குறிப்பிடும் நெறியையும் பின்பற்றுதற்கு உரிய கொள்கைகளாகக் கொண்டுள்ளோம். உலகம் முழுதும் சிவமாகிய பரம்பொருள் பரவியிருப்பதனைத் தெளிதலே அத்தெய்வ நிலைக்கு உயர்த்தும் முத்திநிலை எனத் தெளியச் செய்யும் திரு ஆவடு துறையாகிய தலச்சிறப்பையும் அங்கு தங்கித் திருமூல நாயனார் பெற்ற சிறப்பையும் எடுத்துரைத்தல் எளிய செயலோ? வேத ஆகம நெறிகளை மேற்கொண்டு ஆராய்ந்து அறிந்து விரும்பி மேற்கொள்ளத் தக்க முத்தி வழியையே இவ்வான்மா மேற்கொள்ளற்குரிய வழி என்று கூறுகிறோம். இச்செயல்களால் சீவான்மா, பரமான்மா பற்றிய ஞானத்தொடர்பை அடைவோம். அதனால் நாம் முத்தி எய்துவோம். இது திருவாவடுதுறைத் திருத்தலத்தில் உறையும் முமுட்சு ஒருவர் கூற்றாக அமைந்திருக்கிறது.

அ.பொ: நந்திமரபு - திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை மடத்து மரபு, கோ - பசு, கோகழி - ஆன்மாவின் வினைகளைப் போக்கும் திருத்தலம் என்று திருவாவடுதுறைக்கு ஒரு பெயர், தேமுத்தி - இறைவனை அணுகி அடையும் முத்தி நிலை, காமுத்தி - விரும்பும் முத்தி நிலை, காம் - காமம், உறும் - விரும்பும், திருமூல நாயனார் - 10ஆம் திருமுறையாகிய திருமந்திர மாலையை அருளியவர்.

## 22. தருமபுர மாண்பு

குமரகுரு பரரென்ற முனிவரரை யுலகுறக்
கொடுத்தபெரு மாண்பு பூண்ட
குலமாய தலமரபு மாயூர நகரருகு
குலவுகிற தரும புரமே

அமரரொடு முனிவரரும் அனுகிவரம் வேண்டவே
அம்மையொடு மப்பன் அரசும்
அமுதத்த மிழ்ச்செல்வி அரசும்பொ ருந்தியுள
ஆலயம் அஃதென் னலாம்
தமரமொடு சைவமறை தேவமறை முப்பொழுதுந்
தக்கவர் ஒலிக்க வளரும்
தவநிலையம் இஃதென்று தமிழ்நூற் பெருந்திருத்
தழைப்புறும் தேயம் என்றே
கமழுமல ரிலைபுல்லை யங்கணற் கிடுகின்ற
கணநன்க றிந்து புகழும்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: குமரகுருபரர் என்ற முனிவரை உலகுக்கு வழங்கிய மேம்பட்ட பெருமை பூண்ட திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர மடாலயம், மயிலாடுதுறை என்ற திருத்தலத்தின் அருகில் அழகாக விளங்கிக் கொண்டிருக்கின்ற தருமபுரத் திருத்தலமாகும். தேவர்களும் முனிவர்களும் இத்தலத்தைத் தரிசித்து வரம் வேண்டிப் பெற, அமுதம் போன்று இனிய தமிழ்த்தாயின் ஆட்சியும் பொருந்தியுள்ள ஞானபுரீசுவரர் கோயில் அமைந்துள்ள திருத்தலம் அது. நறுமணம் கமழும் மலர்களையும் வில்வ இலைகளையும் அறுகம் புல்லையும் அழகிய கண்களை உடைய சிவபெருமானுக்கு அர்ச்சிக்கும் சிவகணங்கள் நன்கு அறிந்து போற்றும் திருத்தலம். தமிழ் மறையையும் வடமொழி மறையையும் ஓதத்தக்க தகுதி படைத்தவர்கள் முப்பொழுதும் ஓதிக் கொண்டிருக்கத் தவம் வளரும் இருப்பிட-மாய்த் தமிழ் இலக்கணப் பெருஞ் செல்வம் தழைத்து விளங்கும் பிரதேசம் என்று போற்றப்படுவதாகும்.

அ.பொ: குமரகுருபரர் - திருப்பனந்தாள் காசிமடத்தின் ஆதிகுரவர், தமரம் - ஒலி, சைவ மறை - திருமுறைகள், தேவமறை - நால்வேதம், நூல் - இலக்கணம், இலை - வில்வம், புல் - அறுகம்புல்.

## 23. திருப்பனந்தாள் சிறப்பு

காசிமா நகரிலே நிலையான வாழ்வுபெறு
கவிப்புலமை மிக்க துறவி
கண்மூன்று கொண்டபெரு நாயகனை யேத்தியே
கடுந்தவம் புரிபு கழினார்

மாசில்மா நெறியிலே வாழவே நாட்டியருள்
மடம்வாழ் திருப்ப னந்தாள்
மகியிலே பெருமகிமை வாய்த்ததென் றோதுவது
வாய்மைபெறு பேறென் னலாம்
ஆசில்மன முள்ளபலர் தமிழறிவு பெறுமாறு
அளித்தநி திஎத்து ணையவோ
அறம்பெருக் கற்கென்று கட்டளைகள் ஆங்காங்கே
அமைந்துள்ள எத்து ணையவோ
காசின்மனம் வையாதம டத்தலைவர் வாழ்வதைக்
கண்டருள்க தேவே சனே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காசிமா நகரிலே நிலையான வாழ்வான முத்தி நிலையை எய்திய, பாடல் இயற்றும் புலமை மிக்க துறவியான குமரகுருபரர் முக்கண் மூர்த்தி ஆகிய சிவபெருமானைப் போற்றிக் கடிய தவத்தை மேற்கொள்ளும் புகழை உடைய நன்மக்கள் குற்றமற்ற நல்லற நெறியிலே வாழ்வதற்கு வழி காட்டியாக நிறுவியுள்ள காசிமடம் அமைந்திருக்கும் திருத்தலம் திருப்பனந்தாள் ஆகும். அஃது இவ் வுலகிலே மேம்பட்ட சிறப்பு வாய்ந்தது என்று கூறுவது உண்மை உரையே. குற்றமற்ற உள்ளத்தவர் பலர் தமிழ்மொழியில் புலமை பெறுவதற்காக அம்மடம் பலநிதிக் கொடைகளை வழங்கியுள்ளது. அறத்தை வளர்ப்பதற்காகப் பல திருத்தலங்களிலும் அத்திருமடம் அமைந்துள்ள அறக்கட்டளைகள் பலப்பல. தேவர் தலைவனாகிய சிவபெருமானே! பொருட்பற்றில்லாத அம்மடத் தலைவர்கள் பல்லாண்டு நல்வாழ்வு வாழ அருள்வாயாக! - என்று அடியவர் ஒருவர் திருப்பனந்தாள் மடத்துச் சிறப்புக்களை எடுத்தோதி அம்மடத்து அதிபருக்கு இறைவன் எல்லா நலனும் அருளுமாறு வேண்டும் பாடல் இது.

அ.பொ: கவிப்புலமை - புலமை தோன்றச் செய்யுள் இயற்றும் ஆற்றல், மகி - உலகம், தேவேசன் தேவர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமான்.

## 24. திருவிடை மருதூர்ப் பெருமை

மகாலிங்க மூர்த்தியாய்ச் சோதிமய லிங்கமாய்
மாதேவன் வீற்றி ருக்கும்
மாதவ வழக்கரிடை யிடைமருதின் மிக்கபுகழ்
மற்றைநகர் பெறவில் லையே

புகலாந்த மெய்யன்பர் வேண்டுதவ வாழ்வெலாம்
புராரியே யருளு கின்றான்
புகலுற்ற குறைகளும் பாவமும் போக்கியே
போக்கிலா நிலைநல் குவான்
மிகாநின்ற நாத்திகக் கும்பலும் சிவபக்தி
மேவுமித் தலமெய் தியே
வேதமோ தியமுனிவர் ஆலயத் தகம்வந்து
மெய்ப்பொருளை யுணர முயல்வார்
ககாரங்கம் இல்லாத புண்ணியத் தலமென்று
காதுகு ளிரக்கேட் கிறோம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பெரிய தவத்தில் ஈடுபடும் அடியவர்களிடையே மகாலிங்க மூர்த்தி என்ற பெயரோடு ஒளிமயமான இலிங்க வ்டிவில் தேவதேவனாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திரு இடை மருதூர் என்ற திருத்தலத்தின் சிறப்பு வேறு எந்தத் திருத்தலமும் பெற இயலவில்லை. தன்னைப் பற்றுக் கோடாகக் கொண்ட உண்மை அன்பர்கள் விரும்பும் தவ வாழ்வினை எல்லாம் முப்புரங்களையும் அழித்த சிவபெருமானே அருளும் திருத்தலம் அது. சொல்லப்படும் குறைகளையும் பாவங்களையும் போக்கிக் குற்றமற்ற வீட்டு நிலையை அப்பெருமான் விரும்பி வழங்குவான். இத்தலத்தை அடைந்தால், மிகுதியாக உள்ள நாத்திகக் கும்பலுக்கும் சிவபக்தி ஏற்படும். வேதங்களை ஓதும் அந்தணர் இத் திருக்கோயிலுக்குள் வந்து வழிபட்டு உண்மைப் பொருள்களை உணர முயல்வார்கள். ககரத்துக்குக் காகி கீகுகூ முதலியன இனமாக அமைவது போலத் தனக்கு இனமாக, இணையாகப் பிறிதொரு திருத்தலம் இல்லாதபடி மேம்பட்ட புண்ணியத் தலம் திருவிடை மருதூர் என்று சான்றோர் கூறுவதனைக் காது குளிரக் கேட்கிறோம்.

அ.பொ: இடைமருது - மருதமரம் தலவிருட்சமாக உள்ள மூன்று தலங்களுள் நடுவிலுள்ளது, ஏனைய, மல்லிகார்ச்சுனம் எனப்படும் திருப்பருப்பதமாகிய ஸ்ரீசைலமும், புரோடார்ச்சுனம் எனப்படும் திருப்புடை மருதூருமாகும், தவவழக்கர் - தவம் செய்வதனையே தம் இயல்பாக உடையவர், புகல் - எதுகை நோக்கிப் புகால் என நீண்டது, புகல் - பற்றுக்கோடு, சொல்லுதல். நாத்திகன் - வேதக்

கொள்கைகளை நம்பாதவன், போக்கிலா நிலை - அழிதல் இல்லாத வீடு பேற்று நிலை, மெய்ப்பொருள் - பதிபசுபாசம் ஆகிய உண்மைப் பொருள்கள், ககாரங்கம் - ககரத்துக்கு இனமான காகிகீ போன்ற இன்மான பொருள்கள்.

குறிப்பு: சோழ நாட்டில் சிவபெருமானுடைய திருத்தலமான திருவிடை மருதூரை நடுவில் கொண்டு பரிவார தேவதைகள் முதலியவற்றிற்குச் சிறப்பான கோயில்களை உடைய திருத்தலங்கள் அதனைச் சூழ உள்ளன. நந்திகேசுவரர், தட்சிணாமூர்த்தி, விநாயகர், முருகன், துர்க்கை, சண்டேசுவரர், பைரவர், நவக்கிரகங்கள் என்ற தெய்வத் திருக்கோயில்கள் சிறப்பாக உள்ள திருத்தலங்கள் பின்வருமாறு.

நந்திகேசுவரர் திருத்தலம் - திருவாவடுதுறை
தட்சிணாமூர்த்தி திருத்தலம் - திரு ஆலங்குடி
விநாயகர் திருத்தலம் - திருவலஞ்சுழி
முருகன் திருத்தலம் - சுவாமிமலை
துர்க்கை திருத்தலம் - திருப்பட்டீசுவரம்
சண்டிகேசுவரர் திருத்தலம் - திருச்சேய்ஞலூர்
பைரவர் திருத்தலம் - சீகாழி
நவக்கிரக திருத்தலம் - சூரியனார் கோயில் என்பன.

## 25. திருவியலூர்ப் பெருமை

காவிரிக டந்துசென் றக்கரையி லுள்ளதொரு
கண்ணுதல் திருக்கோ யிலைக்
காணவே வேண்டுமென நிலைகொண்ட சீதரர்
கலைமலியும் வேங்க டேசர்
நாவிரியு நூலினும் வடமொழிக் கவிதையுளும்
நற்சிறப் பெய்து புலவர்
நம்பரொரு நாள்வெள்ள மிக்ககா விரியூடு
நடந்துசெல அவர்மு யல்வதை
ஓவிரியும் நீர்காட்டி அன்பனே நின்பொருட்
டுனதுநகர் கோயில் கொள்வேன்
ஒருகணமு நியதிபிழை யாயென்ன வருளியதை
உலகறியும் திருவி யலினூர்
காவிரியி னருகுள்ள தின்றுமலர் புகழோடு
கலந்துபுகழ் பூண்ப தலவோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: நாவினால் விரித்து உரைக்கப்படும் இலக்கணத்திலும் வடமொழியில் கவிதைகள் இயற்றுவதிலும் சிறப்புற்ற புலவரான கலையறிவு மிக்க சீதர வேங்கடேசர் என்ற பெரியவர் காவிரியின் வடகரையிலமைந்த தம் தலமாகிய திருவியலூரை விடுத்துக் காவிரியைக் கடந்து காவிரியின் தென்கரையிலுள்ள சிவபெருமானுடைய திருவிடைமருதூர்க் கோயிலை நாள்தோறும் தரிசித்துவரும் வழக்கமுடையவர். ஒருநாள் காவிரியில் பெருவெள்ளம் ஏற்பட வேங்கடேசர் அதனைக் கடந்து திருவிடைமருதூர் செல்ல முயன்றபோது சிவபெருமான் 'ஓ' என்ற ஒலியுடன் பெருக்கெடுத்து ஓடும் வெள்ளத்தைக் காட்டி அதனைக் கடந்து வரவேண்டாதபடி உன் வழக்கத்தை நீ மாற்றிக்கொள்ள வேண்டாத வகையில் நீ நாள்தோறும் இடையூறின்றி என்னை வழிபட உன் தலத்திலேயே கோயில் கொள்வேன் என்று அருளிக் கோயில் கொண்ட பரவிய புகழை உடைய திருவியலூர் இன்றும் சீதர வேங்கடேசர் பெயரால் புகழ் பூண்டு விளங்கும் திருத்தலமாகும்.

அ.பொ: அக்கரைக் கோயில் - தென்கரையிலுள்ள திருவிடைமருதூர், நம்பர் - நம்மால் விரும்பப்படும் வேங்கடேசர், ஓ - வெள்ளப் பெருக்கின் ஓசை, நியதி - பின்பற்றும் வழக்கமான செயல்

குறிப்பு: சீதர வேங்கடேசரால் இன்றும் திருவியலூருக்குப் பெருமை உள்ளது.

## 26. திருவாரூர் கமலாலயம்

அமலால யங்களிடை ஆரூர்ப்பெ ருந்தலம்
அமைந்தபெ ருமாண் புள்ளதே
ஆரூரின் வீதிகள் அரண்பெருமை வுலகறிய
அங்குநிகழ் சாறு கூறும்
விமலால யத்தையன் வன்மீக நாதனாய்
விளங்குகின் றானன் றியும்
வீதியி லுலாவரும் விடங்கனாய்த் தியாகேச
வேடமும் பூணு கின்றான்
கமலால யத்தீர்த்த மகிமையே தலமகிமை
காதலாற் கேட்க வுரிய
கமலைத் தியாகேச லீலையே வடமொழி
கணித்தமுந் நூற்ற றுபதாம்

கமலால யத்திருத் தலமகிமை சுந்தரர்
கனிந்தவாக் காவி சைத்தார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: களங்கமற்ற ஆலயங்களை உடைய திருத்தலங்களிடையே திருவாரூர்ப் பெருந்தலத்துக்கு அமைந்துள்ள பெருஞ்சிறப்பு குறிப்பிடத்தக்கது. ஆரூரின் வீதிகளின் அழகையும் மதில்களின் அழகையும் உலக மக்கள் நன்கு அறியுமாறு அங்கு நிகழும் திருவிழாக்கள் தெரிவிக்கின்றன. தூய ஆலயத்தில் சிவபெருமான் புற்றிடங் கொண்ட பெருமானாய் விளங்குவதோடு வீதியில் உலாவரும் உற்சவ மூர்த்தியாகிய விடங்கனாகவும் தியாகேச வடிவினனாகவும் காட்சி வழங்குகின்றான். அங்குள்ள திருக்குளமாகிய கமலாலயத்தின் சிறப்பும் திருத்தலத்தின் சிறப்பும் விருப்போடு கேட்கத்தக்க பெருமை உடையன. திருவாரூர்த் தியாகராசப் பெருமானின் திருவிளையாடல்கள் வடமொழி நூல்களில் முந்நூற்றறுபதாக விரித்துக் கூறப்பட்டுள்ளன. இத் திருவாரூர்த் திருத்தலத்தின் பெருமையைச் சுந்தரர் இனிய பாடல்களில் பாடியுள்ளார்.

அ.பொ: கமலாலயம் - திருமகள் இருப்பிடமாகிய திருவாரூர், கோயிலின் பெயர் - பூங்கோயில், திருக்குளத்தின் பெயர் - கமலாலயம், வன்மீக நாதர் - புற்றிடம் கொண்ட பெருமான் - சுயம்புமூர்த்தி, விடங்கன் - அழகன், கமலை - திருவாரூர், சுந்தரர் பாடியவை - ஏழாம் திருமுறை

குறிப்பு: தேவாரத் திருத்தலங்களுள் 71 பதிகம் பெற்ற சீகாழியை அடுத்து 37 திருப்பதிகங்கள் பெற்ற திருவாரூரே இரண்டாவதாக உள்ளது. இத் திருத்தலத்துக்குத் திருஞான சம்பந்தர் அருளியவை 5 பதிகங்கள். திருநாவுக்கரசர் அருளியவை 23 பதிகங்கள். சுந்தரர் அருளியவை 9 பதிகங்கள். கூடுதல் 37 பதிகங்கள்.

## 27. மாயூர மகிமை

கேயூர குண்டலமும் வாகுவல யாதிகளும்
கேவல சிவத்துக் கிலை
கிரிதேவ வருள்கவென வேண்டவே கோயிலிடை
கிரிசையொடு வீற்றி ருக்கும்

மாயூர நாதனை வேண்டுமுறை பிறநாட்டும்
மாதேவன் முன்பு நிகழும்
மயிலாக வந்துவழி பாடுபுரி தேவியை
மணந்தபெரு மான்ம கிமையை
சேயூரு மயிலோடு மாலூரு முவணமும்
தேர்ந்துதமிழ் தெளிந்து செப்பும்
திருஞான சம்பந்தர் திருநாவி னுக்கரசர்
திருநாவ லூரர் அறிவார்
காயூரு மரமீது கனிகள்மிக் கோங்கவே
கரைமரந் தான ருளுமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவசு வேச சிவமே.

பொழிப்: ஞானமே வடிவமான சிவபெருமானுக்குக் காதில் அணியும் குண்டலமோ, புயங்களில் அணியும் வாகுவலயம் போன்ற அணிகளோ கிடையா. எனினும் அடியார்கள் விருப்பத்தை நிறைவேற்றவே அவர் உருவம் தாங்கி அணிகலன்களை அணிகிறார். கமலாலயத்தில் உள்ள தெய்வமே! எங்களுக்கு அருள் செய்வாயாக! என்று அடியார்கள் வேண்டுவதற்-காகவே அப்பெருமான் திருக்கோயில்களில் அடியார்கள் செய்யும் வழிபாட்டுச் செயல்களை ஏற்றுக்கொண்டு அழகுபெற அமர்ந்திருக்கிறார். அத்தகைய மாயூரநாதன் எனப்படும் திருமயிலாடு-துறை இறைவனை அடியார்கள் வேண்டும் ஆகமவழிப் பூசனை பிற இடங்களிலுள்ள திருக்கோயில்களிலும் இறைவன் முன் நிகழ்கின்றன. ஆனால் உமாதேவி மயில் வடிவில் வந்து இறைவனை வழிபாடு புரிந்த சிறப்பு இத் தலத்திற்கே உண்டு. தன்னை வழிபட்ட உமா தேவியைத் திருமணம் செய்துகொண்ட இறைவன் பெருமையை, மயிலைச் செலுத்தும் முருகனும் கருடனைச் செலுத்தும் திருமாலும் தெளிவாக அறிய, தமிழின் இனிமையைத் தெளிவாக உணர்ந்துள்ள திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரராகிய சுந்தரர் என்ற தேவார முதலிகள் மூவரும் அறிவர். காய்கள் உலாவும் மரங்களின் மேற்புறங்களில் கனிகள் மிகுதியாகக் காணப்பட அத்திருத்தலத்தில் ஓடும் காவிரிக் கரையிலுள்ள மரங்கள் அவற்றை மக்களுக்கு வழங்கும் இயற்கை வளம் சான்ற திருத்தலம் மயிலாடுதுறை என்று வழங்கப்படும் மாயூரமாகும்.

அ.பொ: கேயூர வாகுவலம் - கேயூரம் எனப்படும் தோள்வளை, கேவலசிவம் - உருவமற்ற சிவ பரம்பொருள், கிரி - கயிலாயமலை, கிரிசை - சடங்குகள், மயில் ஊரும் சேய், உவணம் ஊரும் மால் என மாற்றிப் பொருள் கொள்க. திருந்ாவலூரர் - திருநாவலூரில் அவதரித்த சுந்தரர்.

## 28. புள்ளிருக்கு வேளூர்ப் புகழ்

வாழ்வுளே யெண்ணிலா நோய்களால் மாழ்கியே
வந்திரந் தேநிற் பவர்
மனவமைதி பெறுமாறு புற்றுமண் ணருள்கின்ற
வைத்தியர் பிரான் கோயிலை
யாழ்பயிலு மன்பரொடு ஞானசம் பந்தரும்
இணையில்நா வுக்க ரசரும்
ஏனையரு மன்புருக இசைகலந் தோதியதை
யாவரே அறிகி லாதார்
தாழ்வகல முருகவேள் வேதம்ச டாயுவே
தவம் பூண்ட தலமீ தரோ
சம்புநல் கியதிரு மருந்தினாற் பிறவிநோய்
தானேய கன்றொ ழியுமே
காழ்படு வினைத்தொடர்பு கைவிட்டு மாறவே
கண்ணுதலை வேண்டு கின்றோம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: மனிதராய்ப் பிறந்து உயிர்வாழும் வாழ்நாளிலே கணக்கில்லாத நோய்களால் நொந்து, இத்திருத் தலத்திற்கு வந்து இங்கு உகந்தருளியிருக்கும் வைத்தியநாத சுவாமியிடம் வேண்டி நிற்கும் அடியவர்கள் மன அமைதி பெறுமாறு புற்று மண்ணினை மருந்தாக அருளும் அப்பெருமானு டைய திருக்கோயிலைத் திருநீலகண்ட யாழ்ப்பாணரோடு திருஞான சம்பந்தரும், தமக்கு ஒப்பார் இலாத திருநாவுக்கரசரும் சான்றோருள் ஏனையோரும் இசைகலந்த தமிழால் பாடியுள்ள பாசுரங்களை அறியாதார் யாவர்? தம் குறைபாடுகள் நீங்க முருகப்பெருமானும், வேதங்களும், சடாயு என்ற கழுகின் மன்னனும் தவம் செய்த திருத்தலம் இது. ஈண்டுச் சிவபெருமான் அருளும் ஒப்பற்ற மருந்தினால் பிறவிப்பிணி அடியார்களை விடுவித்துத் தானே விலகி ஒழியும். வயிரம் பாய்ந்து

உறுதியாக இருக்கின்ற இருவினைத் தொடர்பும் நம்மை விடுத்து ஒழிவதற்காகவே நாம், நெற்றியில் கண்ணுடைய சிவபெருமானை வழிபடுகிறோம்.

அ.பொ: யாழ் பயிலும் அன்பர் - திருநீலகண்ட யாழ்ப்பாணர், சம்பு - நன்மையை அருளும் சிவபெருமான், கண்ணுதல் - நெற்றியில் கண் உடைய சிவபெருமான்.

## 29. சீகாழிப் பெருமை

கண்ணுதற் கடவுளே தீர்த்தத்தின் முன்வந்து
கரைநின்ற சிறுகு ழவியின்
கண்கலுழி மாற்றவே தேவிதிரு வருள்நல்கு
கலசவ முதம்தந் ததை
எண்ணுதற் கெளியதோ ஞானசம் பந்தராய்
இசையோடு பாடு திறமும்
எவ்வாற்றி னாலன்று கவுணியர் குலக்குழவி
எய்தினார் என்று மறிவோம்
மண்ணுறப் பிறவிபெற் றவருளே இத்தகைய
வாக்கமுது பெற்ற வரிலை
வானவரும் எம்மிறைவி தருமமுது பெற்றகதை
வடமொழியு மோத விலையோ
கண்ணுதற் கரியபல காட்சியவர் கண்டதும்
காயமொடு சிவமா யினார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: நெற்றிக்கண் கடவுளாகிய சிவபெருமானே தன் தீர்த்த குளக்கரைக்கு எழுந்தருளி, கரையில் நின்று அழுதுகொண்டிருந்த சிறுவனுடைய கண்ணீர்ப் பெருக்கை நிறுத்துவதற்காக, தம் தேவியாகிய பார்வதி திருவருளோடு கிண்ணத்தில் அச் சிறுவனுக்குத் தன் முலைப்பாலாகிய அமுதத்தை வழங்கச்செய்த செயல் நம்மனோர் நினைப்பதற்கும் அரியதொன்றாகும். ஞானசம்பந்தர் என்ற பெயரைப் பெற்றுத் தமிழ்ப் பாடலை இசையோடு பாடும் ஆற்றல் அக்கவுணியர் குலச் சிறுவர் பெற்றார் என்பதனையும் நாம் அறிவோம். இவ்வுலகில் பிறப்பெடுத்த சான்றோருள் இத்தகைய அமுதமயமான பாடலியற்றும் நாவன்மை பெற்றவர் பிறர் ஒருவரும் இல்லை. ஞானசம்பந்தர் எம் இறைவியாகிய பார்வதி வழங்கிய அமுதத்தைப்

பெற்ற வரலாற்றைத் தேவர்களும் வடமொழி வல்லவர்களும் கூடக் குறிப்பிட்டுள்ளனர். நினைத்தற்கு அரிய பல தெய்விகக் காட்சிகளைத் திருஞான சம்பந்தர் கண்டபின் இவ்வுடம்போடு சிவபெருமானுடன் சோதியில் கலந்துவிட்டார்.

அ.பொ: கண்கலுழி - கண்ணீர்ப் பெருக்கு, கலசம் - கலசம் போன்ற நகில்கள், கவுணியர் - கௌண்டின்னிய கோத்திரத்துப் பிறந்த அந்தணர், வாக்கமுது - அமுதம் போன்று இனிமையாகப் பாடும் திறன், வடமொழி - சௌந்தர்ய லகரியின் 75ஆம் சுலோகம், கண்ணுதல் - நினைத்தல்.

## 30. திருவெண்காட்டுப் பெருமை

பட்டினத்துப் பிள்ளையென்ற திருவெண் காடற்
பாடுமெய்ப் பாட்டி னிடையே
பக்தியிற் பெரியவர் குணதேவர் பயில்வதைப்
பார்த்துமன முருகு கின்றோம்
பட்டினத்துக் கருகில் உள்ளதிரு வெண்காடு
பரமன்தி ருக்கோ யிலே
பத்திரகிரி யோடங்குப் பட்டினப் பிள்ளையார்
பலநாள்த வம்பு ரிந்தார்
கட்டிமுத் தந்தந்த காதலியை நீங்கினார்
கனகமணி நிதிது றந்தார்
கரமேந்து கடிஞையில் வீடுதோறு மையமே
கருத்தழிந் தேற்று வந்தார்
கட்டிகற் கண்டினோடு நெய்தேன்பு கும்பொங்கல்
கைப்புறக் கண்டு ணர்ந்தார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பட்டினத்துப் பிள்ளையார் என்று அழைக்கப்படும் திருவெண்காடரைப் பற்றித் தாம் பாடிய பாடல்களிடையே பக்தியின் மிக்க குணதேவர் என்ற பெரியவர் ஈடுபடுவதனைப் பார்த்து மனம் உருகு கின்றோம். காவிரிப்பூம்பட்டினத்து அருகில் உள்ள திருவெண்காடு என்ற திருத்தலத்திலே சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திருக்கோயிலிலே பத்திரகிரியார் என்ற அரசரோடு பட்டினத்துப் பிள்ளையார் பல காலம் தவம் செய்து கொண்டிருந்தார். தம்மைத் தழுவித் தமக்கு முத்தம் தந்த தம் காதலியையும் துறந்தார். கையையே ஓடுபோலக் குவித்துப் பழைய

செல்வம் பற்றிய எண்ணம் நீங்கி வீடுதோறும் பிச்சையேற்று உண்டு வந்தார். பண்டு கற்கண்டு கட்டியோடு நெய்யும் தேனும் கலந்து செய்யப்பட்ட கற்கண்டுப் பொங்கல் தம் துறவு வாழ்க்கையில் கசப்புச் சுவையாக இருப்பதனைக் கண்டறிந்தார். அதுபோலப் பேய்க் கரும்பு தித்திப்பதனைக் கண்ட ஒற்றியூரில் இறைவனோடு கலந்தார் என்பது குறிப்பெச்சம்.

அ.பொ: திருவெண்காடர் - இயற்பெயர், பட்டினத்துப் பிள்ளையார் - சிறப்புப் பெயர், பத்திரகிரியார் - பட்டினத்துப் பிள்ளையார் சீடரான மன்னர் ஒருவர், குணதேவர்-தாயுமானவரைக் குறிப்பது போலும், கடிஞை - பிச்சைப் பாத்திரம். இவருக்குக் குவித்த கைகளே பிச்சைப் பாத்திரம் ஆயின.

குறிப்பு: இறுதியில் பேய்க்கரும்பு தமக்குத் தித்தித்த திருவொற்றியூரில் சிவகதி அடைந்தார் என்பது வரலாறு.

## 31. திருமறைக்காட்டுப் பெருமை

கடல்பொங்கி யெழுமெனிற் கடவுள்வாழ் கோயிலும்
கடலினில் மூழ்க லுளதே
காடுகளி லுள்ளபல கைதையின் பெருமரம்
காய்கனி யுதிர்ப்ப துளதே
உடல்கின்ற திரிபுரத் தசுரரைச் சிரித்தொழித்
துலகுகாத் தருள்சி வபிரான்
ஒருசிலவர் வேதமோ தியநெறியில் உள்ளகுறை
உளம்பொறா தேகத வுகள்
அடல்மிகும் காற்றால்அ டைத்ததால் வேறுவழி
ஆக்கிவைத் தார்அ டியவர்
ஆங்குவரு மப்பரும் சம்பந்த மூர்த்தியும்
அடிமுகத் திருவா யிலைக்
கடலருகி ருந்தவிறை திறந்தருள வேண்டினார்
கருணைசெய் தான்இ றைவனே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: கடல் பொங்கி எழுந்தால் கடல் அருகில் எடுப்பிக்கப் பட்ட இறைவன் உகந்தருளியிருக்கும் திருக் கோயிலும் கடலில் முழுகிவிடுமோ? அக்கடற்கரைக் காடுகளில் உள்ள பெரிய தாழை மரங்கள் பல காய்கனிகளை உதிர்க்கும் இயற்கை வளமுடைய

திருத்தலம் திருமறைக்காடு. நேர்மைக்கு மாறுபட்டுச் செயல்புரிந்த முப்புரத்து அசுரர்களைத் தம் சிரிப்பினால் முப்புரங்களோடு எரித்து ஒழித்து உலகைப் பாதுகாத்தருளிய சிவபெருமான், ஒருசிலர் அந்தணன் வேதம் ஓதியபோது அம்முறையில் ஏற்பட்ட குறைகளைப் பொறுக்க இயலாமல் காற்றுத் தேவனைக் கொண்டு தம் கோயில் முகவாயிற் கதவுகளை அடைப்பிக்கவே, அடியவர்கள் வேறொரு வழியை உண்டாக்கி அவ்வழியே சென்று இறைவனைத் தரிசித்து வரலாயினர். அத்தலத்துக்கு வந்த அப்பரும் ஞான சம்பந்தரும் நேர்முகத் திருவாயிலைக் கடலருகே கோயில் கொண்டிருக்கும் அப்பெருமான் திறந்தருள வேண்டினர். எம்பெருமான் கருணை செய்து அவர்கள் விருப்பிற்கு ஏற்பத் திறந்தருளவே, அவ்வழியே சென்று வழிபட்டுப் பின் பதிகம் பாடிக் கதவுகளை அடைத்தனர் என்பது வரலாறு.

அ.பொ: கைதை - தாழை, திரபுரம் - மூன்று கோட்டைகள், அப்பர் நேர்வாயில் கதவு திறக்கவும் சம்பந்தர் அடைக்கவும் பாடினர், உடலுதல் - மாறுபடுதல் அடல் - ஆற்றல், கடலருகு இருந்த இறை · திருமறைக்காட்டுப் பெருமான்.

## 32. திருவாலங்காட்டுத் திருவருள்

கயிலைவரை சென்றிறைவன் அருளினா லன்னையே
காணவந் தனையென் னவே
கருணையாற் கூறவே புனிதவதி யென்றபெயர்
கழன்றொரு பேயுரு வினார்
மயிலைநிகர் முன்னையுரு மதியாது முதல்வனே
மகிழ்வுறக் கயிலை யுற்றார்
மனமகிழ்ந் தானந்த வாரிதி யில் மூழ்கினார்
வானவர் புகழ்ந்து போற்ற
எயிலையிரு கோயிலிற் சிற்றம்ப லத்திலே
எம்பிரான் ஆடு கூத்தை
யான்காண அருள்கவீங் கென்னவா லங்காட்டில்
எதிர்நின்று நோக்கி மகிழ்வார்
கயிலையிடை காண்கிலாக் காட்சிகண் டுருகினார்
காரைக்கால் அம்மை யாரே
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: புனிதவதி என்ற பெயருடைய அடியவள் தன் கணவனால் புறக்கணிக்கப்பட, ஆண் மயிலை ஒத்த தன் வடிவினை விரும்பாது, சிவபெருமானை வேண்டிப் பேய் உருவம் பெற்றுக் கயிலை மலைக்குச் சென்று, இறைவன் 'அன்னையே என்னைக் காண வந்தனையா?' என்று கருணையால் கூறுமாறு, இறைவனே கண்டு மகிழுமாறு தலையால் நடந்து சென்று கயிலைமலையை அடைந்தவளாவாள். அங்கு அப்பேயுருவப் பெருமாட்டியார் மனம் மகிழ்ந்து ஆனந்தக் கடலில் மூழ்கினார். தேவர்களும் புகழ்ந்து போற்றுமாறு மதில்களை உடைய பெரிய சிதம்பரக் கோயிலிலே சிற்றம்பல மாகிய ஞானசபையிலே எம்பெருமான் ஆடும் கூத்தினைத் தாம் இடையறாது காணுமாறு அருள் செய்ய அம்மையார் வேண்டவே, அந்தத் திருக் கூத்தினைத் திருவாலங்காடு என்ற திருத்தலத்தில் இறைவனுக்கு எதிரே இருந்துகொண்டு என்றும் நோக்கி மகிழ்வாராய்க் கயிலையில் கூடக் காண முடியாத ஊர்த்துவத் தாண்டவத்தைக் கண்டு காரைக்கால் அம்மையார் என்று போற்றப்படும் புனிதவதியார் உளம் உருகிக் கொண்டிருக்கிறார்.

அ.பொ: வரை - மலை, மயில் - ஆண்மயில், ஆனந்த வாரிதி -மகிழ்ச்சிக்கடல், எயில-மதில்களை உடைய. எதுகை நோக்கி எயிலை எனத் திரிந்தது, இரு - பெரிய, சிற்றம்பலம் - சித் + அம்பலம் - ஞானசபை; திரு ஆலங்காடு - இரத்தின சபை உடைய திருத்தலம்.

குறிப்பு: சிதம்பரம் - பொன்மன்றம், மதுரை - வெள்ளிமன்றம், திருநெல்வேலி - தாமிரமன்றம் திருக்குற்றாலம் - சித்திரமன்றம், திருவாலங்காடு - இரத்தின மன்றம் - இங்கு ஊர்த்துவ தாண்டவம்.

## 33. சிதம்பரம் பெரிய கோயில்

சிதம்பர மடைந்ததென விருமுனிவர் காணவே
திருநடன மாடு பரமன்
சிற்சபையின் நாயகன் நடனக்கலை நாயகன்
வேதகணம் வாழ்த்துத் தலைவன்
சிதம்பர மெனத் துணிந் தெய்துமூ வாயிரவர்
இயற்றும்வ ழிபாடேற் றவன்
எண்ணற்ற மக்களுக் கன்னம்ப டைத்தருளும்
இயவுளாய் உள்ள உண்மை

பதம்பரவ வந்ததிரு வாதவூ ரடிகளார்
பார்த்துணர்ந் தோத வைத்தான்
பௌத்தர்வா தம்புரிய வந்தநாள் ஈழவமான்
பார்த்திபன் மகள் மூகையை
கதம்பரவ விடையிறுத் தறிவுநாம் பெறவருள
கருணையை மறப்ப தெளிதோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவசு வேச சிவமே.

பொழிப்: ஞான ஆகாசமே இங்கு வந்து சேர்ந்தது என்னுமாறு வியாக்கிரபாதர், பதஞ்சலி என்ற முனிவர் இருவர் தரிசிக்குமாறு ஞானச் செல்வம் வழங்கும் நடன மாடும் பெருமான், ஞானசபைத் தலைவனாய் நடனக்கலை நாயகனாய், வேதக்கூட்டம் வாழ்த்தும் தலைவனாய் இவ்விடம் ஞான ஆகாயம் என்று உறுதிகொண்டு வந்தடைந்ததில்லை மூவாயிரவராம் அந்தணர் நிகழ்த்தும் வழி பாடுகளை ஏற்ற பெருமானாய்க் கணக்கற்ற மக்களுக்கு உணவு படைத்தருளும் கடவுளாய் உள்ள உண்மை நிலையை அவர் திருவடிகளை வழிபட வந்த திருவாதவூர் அடிகளாகிய மாணிக்கவாசகர் நேரில் பார்த்து உணர்ந்து பாடுமாறு வாய்ப்பளித்தான். மாணிக்கவாசகரோடு பௌத்தர்கள் வாதம் புரிய வந்த காலத்தில் ஈழநாட்டை ஆண்ட மன்னவன் மகளாகிய ஊமையைச் சைவ சமய உண்மை விரைவில் வெளிப்படுமாறு பௌத்தர்கள் வினாவிய வினாக்களுக்கெல்லாம் விடை இறுக்கச் செய்து நாம் உண்மை அறிவு பெறுமாறு அருள்செய்த கருணையை நாம் மறப்பது எளிய செயல் ஆகுமோ?

அ.பொ: சிதம்பரம் - ஞான ஆகாயம், சிற்சபை - ஞான சபை, இயவுள் - தலைவன், இறைவன்.

"அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்" - அப்பர் தேவாரம் V-I-1.5240.

"செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே" - சம்பந்தர் தேவாரம் I-80.869

திரு - இறைவன் திருவடிகளைப் போற்றும் செல்வம் ஊமைப்பெண் விடை இறுத்தமை - திருச்சாழல் என்ற திருவாசகப் பதிகம், கதம் பரவ - சைவசமய உண்மை விரைவில் பரவுமாறு

குறிப்பு: இறைவன், முனிவர் இருவருக்காக நடனம் ஆடின நாள் ஒரு தைப்பூச நாளாகும்.

## 34. திருவரங்கம் பெரிய கோயில்

குடதிசையில் முடிவைத்த னந்தபுர நாயகன்
கோயில்யாம் தொழவே வியே
குணதிசையிற் பதநீட்டித் திருமெய்ய மாதியின்
கோயிலும்தொழ வேவியே
வடதிசை புறங்காட்டி மாமேரு வளவுநாம்
வணங்குவது வேண்டு மென்பான்
மனந்தூய வீடணன் வாழ்கின்ற தென்றிசைய
வளநாடு நோக்கு தேவன்
குடமுனிவன் ஆண்டதமிழ் வடமொழி யிசைத்துலவு
கூட்டத்தை வாழ வைக்கும்
கொள்கையே கொளுமழக மணவாள னாயிரம்
கொண்டையுள அரவின் அதன்மேற்
கடபடமு ருட்டுபவர் காணாத காட்சியைக்
கருணையொடு நல்கு கின்றான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: கும்ப முனிவன் என்னும் அகத்திய முனிவன் வளர்த்த தமிழ், வடமொழி இவற்றால் தன்னைத் தோத்திரம் செய்து சஞ்சரிக்கும் அடியார் கூட்டத்தை வாழவைக்கும் காரணம் பற்றாத கருணையையே தன் கோட்பாடாகக் கொள்ளும் அழகிய மணவாளனாம் அரங்கநாதன் மேற்றிசையில் முடியை வைத்துத் திருவனந்தபுரத்துப் பெருமாள் கோயிலை வழிபடுமாறு நமக்கு ஆணையிட்டு, கீழ்த்திசையில் திருவடிகளை நீட்டித் திருமெய்யத்து எம்பெருமான் கோயிலையும் வழிபடுமாறு நமக்கு ஆணையிட்டு, வடதிசையில் முதுகைக் காட்டி வடக்கே மேருமலை வரை உள்ள விண்ணகரங்களை நாம் வணங்க வேண்டும் என்று விரும்பும் அப்பெருமான் தூயமனமுடைய வீடணன் வாழ்கின்ற தென்திசையிலுள்ள வளநாடாகிய ஈழத்தை நோக்கிக் கொண்டிருக்கும் தெய்வமாய் ஆயிரம் தலைகளை உடைய திரு அனந்தாழ்வான் மீது உண்மை பத்தியில்லாது ஆரவாரம் செய்யும் வேடதாரிகள் காணமுடியாத தன் கிடந்த திருக்கோல அழகை அடியவர்களுக்கு எல்லாம் தரிசிக்க அருள் செய்து கொண்டுள்ளான்.

அ.பொ: குடதிசை - மேற்குத் திசை, குணதிசை - கிழக்குத் திசை, தென்திசைய - தெற்குத் திசையில் உள்ள, வளநாடு - வளமுடைய ஈழநாடு, குடமுனிவன் -

கும்ப சம்பவன் ஆகிய அகத்தியன், அழகிய மணவாளன் - திருவரங்க உற்சவ மூர்த்தியின் பெயர், கடபடம் உருட்டுபவர் - வெளி ஆடம்பர முடையவர்.

## 35. திருவனந்தபுரத் தெய்வம்

சேரகுல மாண்டிலகு திருநாட்டின் நகரமாய்த்
தேவரொடு முனிவர் போற்றும்
திருவமரு மார்பமுள பதுமநாபன் வளரு
திவ்வியத் தலமு மாகிச்
சாரவரு கடலோதை மறையோசை தமிழோசை
தாங்கலந் தேகொ ழிக்கும்
தருமநில மானபுண் ணியபூமி தன்னிலே
தனக்கடிமை யாகு மன்னன்
பாரமில தாயினும் பக்திகுறை யாமலே
பரிவோடு நானா ளுமே
பதுமநா பன்தாசன் அன்றிவே றொருபெயர்
பற்றிலே னென்றோ தவே
காரணத் திருமூர்த்தி யாகவே காட்சிதரு
கடவுளைப் போற்று கின்றோம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சேரமன்னர் குலம் ஆண்டு விளங்கும் நாஞ்சில் நாட்டின் பேரூராய்த் தேவர்களோடு முனிவர்கள் போற்றும் திருவமர் மார்பனாகிய பதுமநாபப் பெருமான் கிடந்த திருக்கோலத்தில் உகந்தருளி-யிருக்கும் தெய்வமணம் கமழும் திருத்தலமாய், அருகில் உள்ள கடல் ஓசை வேத ஒலி தமிழ்ப்பாசுர ஒலி என்பன கலந்தே ஒலிக்கும் அறம் வளரும் நிலமாகிய புண்ணிய பூமியிலே, அப்பெருமானுக்கு அடிமையாக வாழும் மன்னவன் மற்ற பெயர்களையும் வைத்துக் கொள்ளுதல் தனக்கு ஒரு சுமையாக இராது ஆயினும் எம்பெருமானிடம் தான் கொண்டுள்ள பக்தி குறையாமல் அன்போடு எக்காலத்தும் பதுமநாபதாசன் என்ற பெயரன்றி வேறு பெயர்களைக் கொள்ள மாட்டேன் என்று கூறுமாறு உலகிற்கு முதல், துணை, நிமித்தம் என்ற முக்காரணங்களாகவும் இருக்கும் பதுமநாபப் பெருமானுக்குப் பல்லாண்டு பாடுகின்றோம்.

அ.பொ: இலகுதல் - விளங்குதல், தமிழ் ஓசை - தமிழ்ப் பாசுரங்கள் பாடும் ஒலி, பாரம் - சுமை, நாள்நாளும் - எப்போதும், காரணம் - முதல் துணை நிமித்த காரணங்கள், 'காரணம் துத்யேய' என்பது வேதத்தின் மந்திரம், காரணப்பொருள் வணங்கத் தக்கது என்பது பொருள்.

## 36. கூடலழகன் திருக்கோயில்

கூடலே பிரிதலே போதலே வருதலே
கொண்டவுயிர் வகைய னைத்தும்
கோனாட்சி நிலைபெற்று நெடுநாள் விளங்குவன
கூடலா மதுரை நகரில்
ஆடலே புரிந்தருளும் வெள்ளியம் பலவனொடும்
அங்கயற் கண்ணி யரசில்
அழகுமலி கோயிலொன் றெய்திம துரவல்லி
அன்புபூண் டமரு மண்ணல்
பாடவே தமிழினாற் செவி சாரு நோக்கினாற்
பத்தகணம் வரவேற் பவன்
பண்டுபெரி யாழ்வாரை யரசுதரு பொற்கிழி
பறித்தேக வேவு பெருமான்
காடமரு முரிமையா னாயினும் திருநாடு
கண்டருளின் வீற்றி ருப்பான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: கூடலும் பிரிதலும் இறத்தலும் பிறத்தலும் உடைய உயிர் வகைகள் யாவும் பாண்டிய மன்னன் ஆட்சியில் நெடுங்காலம் நிலைபெற்று விளங்கிய கூடல் என்ற மறுபெயருடைய மதுரைமா நகரிலே ஆடலை நிகழ்த்தும் வெள்ளியம்பலத்தவனாகிய சோமசுந்தரப் பெருமானோடு அங்கயற்கண் அம்மை ஆட்சி செய்யும் நிலப்பரப்பிலே அழகுமிக்க கோயில் ஒன்றை உகந்தருளி மதுரவல்லி என்ற தாயாரோடு விரும்பித் தங்கி யிருக்கும் தலைமையுடைய கூடல் அழகர்பிரான் தமிழினால் பாடும் அடியார் குழாங்களைக் காது அளவும் நீண்ட கடைக்கண் பார்வையால் வரவேற்பவனாய் உள்ளான். முன்னொரு காலத்தில், பெரியாழ்வார் என்று போற்றப்பெறும் விட்டுசித்தர் பரத்துவ நிர்ணயம் பண்ணி அரசன் கட்டி வைத்த பொற்கிழியைத் தான் பெற்றுச் செல்லுமாறு அவரை ஏவிய பெருமான், அவன் 'மாயோன் மேய காடுறை

உலகமும்' என்பதனால் காடே அவனுக்குச் சிறப்பான இடம். ஆனாலும் மருதநிலத்துத் திருத்தலமாகிய மதுரையைக் கண்டு அங்கு அருளினால் அழகுற அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி வழங்கிக் கொண்டு இருக்கிறான்.

அ.பொ: போதல் வருதல் - இறத்தல் பிறத்தல், கோன் ஆட்சி - முடியாட்சி. மதுரையில் உள்ளது வெள்ளியம்பலம், அங்கயற்கண்ணி - மீனாட்சி, மதுரவல்லி - கூடல் அழகர் கோயில் தாயாரின் பெயர்.

## 37. திருமாலிருஞ்சோலை

திருமாலி ருஞ்சோலை மலையென்ற பெயரோடு
திகழ்கள்ள அழகர் கோயில்
திருவால வாயினொடு கலியுகம் தோன்றுமுன்
சேர்ந்ததொடர் புடைய தாகும்
உருமால் அணிந்துவரு கள்ளவேடத் தலைவன்
ஓங்கார மூர்த்தி யழகன்
உவரிபோற் பெருகுபுனல் வையையரு கேசென்று
உயரன்பர் மண்ட பத்தே
அருமாலை யாபரண சாலமொடு மேவுவனால்
அவதாரம் ஒரு பத்துமே
அன்பரின மின்பமுற அன்றுமுத லின்றளவும்
அழகுறவி ளங்கு கின்றான்
கருமாலை போக்கியுயிர் காப்பதே கடனாய
கடவுளென் றோது கின்றோம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திருமாலிருஞ்சோலை மலை என்ற பெயரோடு சிறப்புற்று விளங்குகின்ற கள்ள அழகர் கோயில் கலியுகம் தோன்று முன்னரே தோன்றிய திருவால-வாய் என்ற பெயருடைய சோமசுந்தரப் பெருமாள் கோயிலோடு தொடர்புடையதாகும். கட்டங்கள் அமைந்த மேலாடையாகிய உருமால் என்ற பட்டினை அணிந்து கள்ளர் தலைவன் வேடத்தோடு ஓங்காரத்தால் குறிப்பிடப்படும் பெருமானாகிய அழகன் கடல் போல வெள்ளம் பெருகும் வையை நதிக்கரை அருகே சென்று மேம்பட்ட அடியார்களோடு மண்டபத்தில் மேம்பட்ட மாலை அணிகலன்கள் பல என்பனவற்றை அணிந்து சித்திரைத் திரு விழாவில் விரும்பித் தங்கியிருப்பான். தான் எடுத்த பத்து அவதாரங்களையும் அன்பர் குமரம் கண்டு

களிக்குமாறு அக்காலம் முதல் இக்காலம் வரை அழகுறச் சிலை வடிவில் அமைக்கப்பட்டு அக் கோயிலில் காட்சி வழங்குகின்றான். பிறவி வரிசையைப் போக்கி உயிர்களைக் காப்பதே தன் கடமையாகக் கொண்ட கடவுள் என்று அப்பெருமான் சிறப்பினை நாம் எடுத்து உரைக்கின்றோம்.

அ.பொ: திருவாலவாய் - மதுரையில் உள்ள சிவபெருமான் கோயில், உருமால் - கட்டம் போட்ட பட்டு மேல் வேட்டி, உவரி - கடல், மண்டபம் - திருவிழாவில் பெருமான் வீற்றிருக்கும் மண்டபம், ஆபரண சாலம் - அணிகலக் குவியல், அவதாரம் பத்து - மீன், ஆமை, பன்றி, நரசிம்மம், வாமனன், பரசுராமன், சீராமன், பலராமன், கண்ணன் என்ற ஒன்பதனோடு இனி எடுக்கப்பட வேண்டிய கல்கி அவதாரம், இச்சிற்பங்கள் அக்கோயிலில் தசாவதார மண்டபத்தில் உள்ளன. கருமாலை - பிறவி வரிசை - மக்கள், தேவர், நரகர், விலங்கு, பறப்பன, நீர்வாழ்வன, தாவரம் என்ற எழுவகைப் பிறப்பு. முட்டை, வியர்வை, விதை, கருப்பை இவற்றிலிருந்து வெளிப்படும் பிறவிகளுமாம்.

### 38. அத்திகிரி அருளாளன்

அத்திகிரி வரதனென ஆழ்வாரும் அன்பர்களும்
அருள்வேண்டி யேத்து மரசே
ஆரணத் துள்ளுறை யரும்பொருள் விளக்கியே
அழகுமலி கோயி லகமே
பத்திமிக வருகின்ற பாகவத கோட்டியும்
பாமர ரும்எதிர் நிற்கவே
பரமகலி யாணகுண மூர்த்தியாய்ப் பாயவிற்
பள்ளிகொண் டருள்நல் குவான்
சித்திபெற வேண்டியே தவநெறி புகுந்துபுகழ்
சித்தத்தி னுட்செ றிந்தே
தேவர்பெற லரிதாய பேரின்ப வமுதமே
சீலருக் கருளும் இறைவன்
கத்திசங் காழிசிலை கதையினொடு காட்சிதரு
காஞ்சியை மறப்ப தரிதே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அத்திகிரி வரதன் என்று ஆழ்வாரும் அன்பர்களும் அருள் வேண்டித் துதிக்கும் அரசனே, தான்

வேதத்தின் உட்பொருளாய் விளங்கும் அரிய பரம்பொருள் என்பதனை விளக்கியே, அழகு நிரம்பிய கோயிலினுள் பக்தி மிகுமாறு வருகின்ற அடியார் கூட்டத்துடன் சாமானிய மக்களும் தன் எதிரே நின்று வழிபட, மேம்பட்ட நற்குண இறைவனாய்த் திரு அனந்தாழ்வானாகிய படுக்கையில் கிடந்த திருக்கோலத்திலிருந்து அருள் செய்யும் அப்பெருமான், சித்திகள் பெறுவதற்காகத் தவநெறியில் ஈடுபட்டுத் தன்னைத் தியானிக்கும் உள்ளத்தில் பொருந்தித் தேவர்களும் பெறுதற்கரிய பேரின்ப அமுதத்தை அந்நல்லொழுக்கமுடைய சான்றோருக்கு அருளும் இறைவனாய் வாள், சங்கு, சக்கரம், வில், கதை என்ற ஐந்து படைக்கலன் களோடும் நின்ற திருக்கோலத்தில் வரதராசனாய்க் காட்சியளிக்கும் திருக்கோயிலை உடைய காஞ்சிமா நகரை மறத்தல் அரிய செயலாகும். கிடந்த திருக் கோலத்திலிருக்கும் மூர்த்தி இக்கோயிலில் நின்ற திருக்கோலத்திலிருந்து அனைவருக்கும் அருள் பாலிக்கின்றான் என்பது கருத்து.

அ.பொ: அத்திகிரி - சின்ன காஞ்சீபுரப் பெருமான் கோயில், ஆரணம் - வேதம், பாகவதர் - திருமால் அடியார், பாயல் - ஆதிசேடனாகிய படுக்கை, சித்தி - உறுதியாகப் பெறுதல், சீலர் - நல்லொழுக்கமுடையார்.

குறிப்பு: பாஞ்ச சன்னியம் என்ற சங்கு, சுதர்சனம் என்ற சக்கரம், சார்ங்கம் என்ற வில், நந்தகம் என்ற வாள், கௌமோதகி என்ற கதை - இவை ஐம்படைகள்.

## 39. உலகளந்த பெருமாள்

காஞ்சிமா நகரமே மூன்றுலகும் வேண்டியே
கலைக்கோயி லாக நிற்கும்
கலைகளுட் சிற்பக்கலை காஞ்சியிற் பெறுமாண்பு
கலைஞரே புகழ வேண்டும்
நாஞ்சில்நா டாதியா நடுநாடு வடநாடு
நன்குவளர் சிற்பக் கலையில்
நம்பிரான் உலகளந் தருள்செய்ய நிற்கின்ற
நற்காட்சி யொப்ப துளதோ
ஆஞ்சியில் மனத்தோடு சிறுவர்களு நோக்கியே
அரியதிரி விக்கி ரமனாய்
அடியொன்று வானேற முடியதன் கீழ்நிற்கும்
அழகினுக் கிலைஉ வமையே

காஞ்சிமொழி நிலையாமை கூறுமே யாயினும்
கடவுளருள் உருநிற் குமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காஞ்சிமா நகரம் மேல், கீழ், நடு என்ற மூன்று உலகங்களும் விரும்பிய சிற்பக் கலைக்கு இருப்பிடமாக நிற்கிறது. கலைகளுக்குள் சிற்பக் கலை பெற்றுள்ள மாட்சியினை அச்சிற்பக் கலைஞர் புகழ்தலே ஏற்புடையது. திருவாங்கூர்ப் பகுதியாகிய தெற்கில் உள்ள நாஞ்சில் நாடு முதலாக நடுநாடுகள் இடையளவாக இவற்றிற்கு மேலே உள்ள வட நாடுகள் வரை நன்கு வளர்ந்துள்ள சிற்பக்கலைகளுள் திருமால் உலகை அளந்து நல்லவர்களுக்கு அருள் செய்வதற்காக நிற்கின்ற மேம்பட்ட சிற்பத்தை ஒத்த மேம்பட்ட சிற்பம் வேறு உளதோ? அச்சமில்லாத மனத்தோடு சிறுவர்களும் தரிசித்து மகிழும் மேம்பட்ட திரிவிக்கிரம மூர்த்தியாய் ஓரடி வானத்தை நோக்கி உயரத் திருமுடி அத்தூக்கிய திருவடியின் கீழே இருக்கும் அழகுக்கு உவமமாகப் பிறிதொரு சிற்பத்தின் அழகைக் கூறுதல் இயலாது. காஞ்சி என்ற சொல் நிலையாமை என்ற பொருளுடையது. ஆயினும் காஞ்சியில் இறைவன் அருளால் கொண்ட அர்ச்சை வடிவம் என்றும் நிலைத்திருப்பதாகும்.

அ.பொ: நம்பிரான் - திருமால், நற்காட்சி - உயரிய சிற்பத்தின் தோற்றம், காஞ்சி - நிலையாமை, அருள்உரு - அர்ச்சை வடிவம்.

குறிப்பு: திருமாலுடைய பர வியூக விபவ அந்தர் யாமித்வ அர்ச்சை என்ற ஐந்து நிலைகளில் அர்ச்சா மூர்த்தியே எல்லாக் காலத்தும் எல்லா நிலையிலும் உள்ள எல்லோருக்கும் அருள் பாலிக்கும் நிலை ஆகும்.

## 40. திருவெஃகாவும் ஓரிரவிருக்கையும்

காரிரவில் அரவணைப் பாயலொடு திருமழிசை
கழிபக்தி சார முனிவர்
கணிகண்ண னென்றவொரு சீடன்பொ ருட்டினாற்
கருணையுற வெஃகா விலே
ஆரியம றைத்துதியும் அருந்தமிழ்ப் பாசுரமும்
அன்பினொடு கேட்ட செவியான்
அரசனே வினனென்ற நிலைமையே வேண்டாமல்
அப்புறம்செல் கம்வரு கென்ன

ஓரிரவி ருக்கைக்கு வந்துபின் வந்தருளும்
உத்தமனை வாழ்த்தல் வேண்டும்
உயரன்பர் சொன்னவண் ணம்செய்த பெருமாளை
உணர்ந்துருக மனம்வேண் டுவேம்
காரிய மகாரியம் அறிந்திலா மாக்களைக்
காப்பதே கடவுள் செயலாம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திருவெஃகா என்ற திருக்கோயிலிலே வடமொழி வேத கோஷத்தையும் இனிய தமிழ்ப் பாசுரங்களை-யும் அன்போடு திருச்செவி மடுத்த பெருமான், 'அரசன் ஆணையிட்டு விட்டான்' என்று அதற்கு மாறாக இத்தலத்தில் தங்கியிருக்கும் நிலையை விரும்பாமல் மேம்பட்ட திருமழிசை ஆழ்வார் என்ற பத்திசார முனிவர் தம் சீடனாகிய கணிகண்ணன் பொருட்டுக் கரிய இரவு இருளில் 'உன் பாம்புப் படுக்கையோடு வேற்றூர் சென்று விடுவோம் வருக' என்று திரு வெஃகாப் பெருமானை அழைக்க, ஆழ்வார் கணிகண்ணன் என்ற இருவருடன் புறப்பட்டு வந்து, பின் அவர்கள் விரும்பியபடியே தன் பழைய திருக்கோயிலுக்கு மீண்டு வந்தருளிய உத்தமனாகிய பெருமானை நாம் வாழ்த்த வேண்டும். மேம்பட்ட அன்பர் சொல்லிய வண்ணம் செயற்பட்ட பெருமானை உள்ளவாறு உணர்ந்து உருகுதற்குப் பத்தியால் நெகிழ்ந்த உள்ளத்தை நாம் அப்பெருமானிடம் வேண்டிப் பெறல் வேண்டும். செய்யத் தக்கது இது, செய்யத் தகாதது இது என்பதை அறிந்து செயல்படாத மக்களையும் காப்பதே இறைவனுடைய அருட்செயலாகும்.

அ.பொ: பக்தி சாரர் - திருமழிசை ஆழ்வாரின் பெயர், கணிகண்ணன் - ஆழ்வாரின் சீடன், ஓர் இரவு இருக்கை - ஓர் இரவு மாத்திரம் தங்கி இருந்த இடம், சொன்ன வண்ணம் செய்த பெருமான் - திருவெஃகா இறைவனின் பெயர், அகாரியம் - செய்யத்தகாத செயல்.

## 41. திருச்சித்திர கூடம்

சிதம்பர தலத்தினுள் சிற்றம்பலத் தாடி
திருக்கூத்து மகிமை மதியாத்
தில்லைவாழ் காளியும் கூத்தாட நின்றது

தெளிந்துசித் திரகூ டமாம்
சிதம்பர தலத்திலே திருப்பள்ளி கொண்டருளு
தேவகோ விந்த ராசன்
தில்லைநட னத்திடையி லூர்த்துவ தாண்டவமாடு
சிவபரம் பொருளை நாணிப்
பதம்பெயர மாட்டாது நகரப்பு றத்திலே
பணிவொடு காளி யோடப்
பார்த்தருளு மாயனைப் பரிவோடு பாடாத
பத்தியாற் பயனு முளதோ
கதம்பெற வெழுந்து வருகாளியை மடக்கியருள்
கருணையை மறக்க மாட்டோம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவசு வேச சிவமே.

பொழிப்: சிதம்பரம் என்னும் தில்லைத் திருநகரிலே சிற்றம்பலத்தில் ஆடும் நடராசனின் திருக்கூடத்தின் பெருமையை மதியாது தில்லைவாழ் காளியும் அவருக்குப் போட்டியாகக் கூத்து நிகழ்த்தத் தீர்மானித்ததனைத் தெளிவாக உணர்ந்து, திருச் சித்திரகூடம் எனும் அச் சிதம்பர தலத்திலே திருப்பள்ளி கொண்டு கிடந்த திருக்கோலத்தை உகந்தருளியிருக்கும் தெய்வமாம் கோவிந்தராசப் பெருமான், இருவரும் நிகழ்த்திய போட்டி நாட்டியத்திடையே சிவபெருமான் தன் திருவடி ஒன்றனை உயர்த்தி ஊர்த்தவ நடனமாட, தான் அவ்வாறு தன் பெண்மையால் நடனமாட இயலாதவளான காளி சிவபெருமானாகிய அப் பரம்பொருளைக் கண்டு நாணிக் காலைப் பெயர்த்து வைக்க இயலாதவளாகித் தில்லையின் வெளிப்புறம் நோக்கிப் புறமுதுகிட்டுப் பணிவோடு ஓட, அக்காட்சியைப் பரிதாபத்தோடு திருக்கண் சாத்திய திருமாலை அன்போடு பாடாத பக்தியினால் யாதாவது பயன் கிட்டுமோ? வெகுளி தோன்றப் புறப்பட்டு வந்த காளியைத் தோற்கடித்துத் திரும்பச் செய்த நடராசனின் கருணையை அவன் அடியவராகிய நாம் மறக்கமாட்டோம்.

அ.பொ: சிற்றம்பலத்து ஆடி - நடராசன், சித்திரகூடம் - தில்லைக் கோயிலின் உட்கோயிலாகிய திருமால் கோயில், பதம் பெயர்தல் - அடிகளைப் பெயர்த்து வைத்து நடனமாடுதல், மாயன் - ஆச்சரியமான குணங்களை உடைய திருமால், கதம் - வெகுளி.

## 42. திருவல்லிக்கேணி

பார்த்தசா ரதிவேட மேற்றருளி யன்புருகி
பாண்டவர் குலப்பொ ருட்டே
பாவியரை வீட்டியற நெஞ்சினரை வாழ்வித்த
பச்சைப்ப சுங்கொண் டலாம்
தீர்த்தனுயர் வேதாந்த சிகரத்தி லேறியே
தெளிவுறா மெய்ப்பொ ருளினைத்
தெளிவாக நாம்பெறத் தருகுரு மூர்த்தியைத்
தென்றமிழர் நாட்ட கத்தே
ஆர்த்தகீழ் கடலெதிரில் அர்ச்சுனன் தோழனாய்
அழகொளி மறைத்தி ருக்கும்
அண்ணலைப் போலவோ ராசாரி யன்றனை
அவனிமகள் பெறுவ துளதோ
கார்த்தருமம் உயிர்கட்கு வேண்டுமென் றெண்ணியே
கடற்கரையில் நின்ற ருளுவான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அருச்சுனனுடைய தேரோட்டி வேடத்தை மேற்கொண்டு அன்பினால் மனம் இளகிப் பாண்டவர் குலம் உய்த்த பொருட்டாகத் தீவினையாளரான துரியோதனன் முதலியோரை அழித்துத் தருமத்தில் சென்ற நெஞ்சினை உடைய பாண்டவரை வாழச் செய்த பச்சை மேகத்தின் நிறத்தினனான தூயவனாய கண்ணனாய் வேதாந்தமான உச்சியில் அமர்ந்து நன்மக்கள் தெளிவாக உணரமுடியாத உண்மைப் பொருளைத் தெளிவாகப் பிற்பட்ட காலத்தில் தோன்றிய நாம் உணருமாறு ஸ்ரீகீதையை அருளிச் செய்த குருமூர்த்தியாய், தமிழர் வாழும் அழகிய தமிழ்நாட்டிலே ஒலிக்கும் கீழ்க்கடலின் அருகில் அருச்சுனன் தோழனாய்த் தன் அழகிய ஒளியை நம் கண்கள் கூறுகின்ற அளவினதாக மறைத்துக் கொண்டு திரு அல்லிக்கேணி என்ற திருக்கோயிலில் உகந்தருளியிருக்கும் மேம்பட்ட வனான திருமாலைப் போல்வான். பிறன் ஓர் ஆசாரியனை இந்நிலமகள் இனிப் பெறுதல் இயலுமா? கார் மேகங்களால் உயிர்களுக்கு நீர் வழங்கும் அறத்தைச் செய்ய வேண்டும் என்று எண்ணியே அப்பெருமான் கீழ்க் கடற்கரையில் நின்ற திருக்கோலத்தில் உயிர்களுக்கு அருள்பாலிக்கின்றான்.

அ.பொ: சாரதி - தேர் ஓட்டி, பாவியர் - துரியோதனன் முதலியோர், கொண்டல் - மேகம், தீர்த்தன் - தூயவன், அவனி - பூமி, கார்த்தருமம் - கார்மேகத் தால் மழைபெய்விக்கும் அறச்செயல்.

## 43. திருவேங்கடத் திருப்பதி

பணிபவர் புரந்தபல பாவமும் பறையவே
பருவதத் துச்சி நின்றான்
பனம்பார னார்தமிழ் நாட்டுக்கு வடவெல்லை
பழமைபொலி வேங்க டமெனத்
துணிவோடு மிசைத்தமொழி மறவாம லின்றளவுந்
தொண்டைத்த மிழ்க்கு ருகுவான்
சுவைமலியும் ஆரியமும் இசைமலியும் வடுகுமே
துதிபுரிய வேட்ட ருளுவான்
மணிகனக மயமான மாலைகளி னின்றுதனை
வாழ்த்தவரு மன்பர் முன்னு
மங்களா சாசனம் கேட்கவே விழைவுற்ற
மனமோடு நின்ற பரமன்
கணிகள்பிற கலைவல்ல கலைஞரொடு சூழவே
காட்சிதரும் வேங்க டேசன்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவசு வேச சிவமே.

பொழிப்: எம்பெருமான் தன்னைப் பணிபவருடைய பல தீங்குகளும் நீங்குமாறு வேங்கடமலையின் உச்சியிலே நின்ற திருக்கோலத்தை உகந்தருளியிருக்கிறான். தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் இயற்றிய பனம்பாரனார் என்ற புலவர் தமிழ்நாட்டுக்கு வடஎல்லை பழமை நிரம்பிய திருவேங்கடமலை என்று துணிந்து உரைத்த சொல்லை மறவாமல் இன்றுவரை தொண்டைத் திருநாட்டின் தமிழ் இனிமைக்கு உருகிக் கொண்டிருக்கிறான். சுவை மிக்க வடமொழியும் இசை இனிமை மிக்க தெலுங்கு மொழியும் தன்னைப் பாடல்களால் புகழ்ந்து கூற அவற்றை விரும்புகின்றான். இரத்தினங்களும் பொன்னும் இணைத்துச் செய்யப்பட்ட அணிகல வரிசைகளோடு நின்று தன்னை வாழ்த்தவரும் அன்பர்கள் கருதி வாழ்த்தும் பல்லாண்டைத் திருச்செவி சாத்தவே விரும்பும் மனத்தோடு, நின்ற திருக்கோலத்தில் உள்ள அத்திரு வேங்கடப் பெருமான் சோதிடர்கள் பிற கலைஞர் பலரும் தன்னைச் சுற்றி நிற்குமாறு அவர்களுக்குத் தன் வடிவழகினைக் காணும் பேற்றினை அருளுகின்றான்.

அ.பொ: பறைய - விட்டு நீங்க, பனம்பரனார் - தொல்காப்பியரின் ஒரு சாலை மாணாக்கர் - தொல்காப்பியத்துக்குச் சிறப்புப் பாயிரம் வழங்கியவர், தொண்டைத் தமிழ் - சான்றோர்

வாழும் தொண்டை நாட்டில் வழங்கும் தமிழ், கனகம் - பொன், மாலை - வரிசை, மங்களா சாசனம் - பல்லாண்டு பாடுதல், விழைவு - விருப்பம், கணிகன் - சோதிடர்.

## 44. திருப்புல்லணைத் தலம்

இராவணனை வென்றுமெய்க் கற்பினுக் கரசியினை
இருஞ்சிறையின் மீட்கு நோக்கால்
இளையபெரு மாளுதவி ஆதித்தன் மகனுதவி
எய்திவரு மிராம மூர்த்தி
கராமொடு திமிங்கலம் விளையாடு கடலினைக்
கவிகள்ப டையொடு தாண்டவே
கைப்பற்று சிலையோடு புல்லணையின் மீதிலொரு
கைவைத்து நீள்க ரையிலே
மராமரம் ஓரேழ்து ளைத்தகணைத் தூணியுடை
வள்ளல்மண லோர நின்று
வருணனைக் கடலரசை யிரந்துவழி காணவே
வலியிலான் போற்கி டந்து
கராசலம் பூச்சொரி பதம்பெறும் காகுத்தன்
கருணைபொ ழிதல மீதரோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: இராவணனை வென்று உண்மையான கற்பினுக்கு அரசியான சீதையைப் பெரிய சிறையில் இருந்து மீட்கும் நோக்கத்தோடு இலக்குவன் உதவியையும் சுக்கிரீவன் உதவியையும் துணைவலியாகப் பெற்று வந்த இராமபிரான் ஆகிய, மராமரம் ஏழையும் துளைத்த அம்பறாத் தூணி உடைய வள்ளல், முதலைகளும் திமிங்கலங்களும் விளையாடும் கடலினை வானரவீரர்கள் தங்கள் படையோடு தாண்டுமாறு, தான் கையில் கொண்ட வில்லோடு புல்லால் ஆன படுக்கையில் ஒரு கையினைத் தலையணையாகக் கொண்டு கடற்கரை மணல் ஓரத்தில் இருந்து வருணனாகிய கடல் அரசினை வேண்டிக் கடலைத் தாண்டும் வழியினை அறிய வலிமையற்றவன் போல் கிடந்து, கயேந்திரனால் பூக்கள் தூவி வழிபட்ட திருவடிகளை உடைய காகுத்தன் என்னும் பெயரோடு, கருணை பொழியும் திருத்தலம் திருப் புல்லணையாகும்.

அ.பொ: இளையபெருமாள் - இலக்குவன், ஆதித்தன் மகன் - சூரியன் மகனான சுக்கிரீவன், கராம் - முதலை, திமிங்கலம் - முதலையையும் விழுங்கும் கடல்வாழ் உயிரினம், கவிகள் - குரங்குத் தலைவர்கள், சிலை - சிலை மரத்தால் செய்யப்படும் வில், கணை - அம்பு, தூணி - அம்புப் புட்டில், கராசலம் - கைகளை உடைய மலை போன்ற யானை - கயேந்திரன், பதம் - திருவடி, காகுத்தன் - ககுத்தன் என்ற அரசன் மரபில் வந்த இராமன்.

## 45. திருவுத்தரகோச மங்கை

சேதுநாட் டரசரின் தருமமே தாங்கிவரு
திருவுத்ர கோச மங்கை
சிவமயம் விளக்குபெரு நகரமென்று பக்திமலி
திருவாத வூரார் புகல்வார்
பாதுகாத் தடியர்குறை போக்கியருள் பரமனும்
பரிபூர ணானந் தமாய்ப்
பஞ்சக்ருத் தியநடனம் ஆடுகின் றானிங்கு
பற்பல நூற்றாண் டாகவே
மாதுபாற் கொண்டவரு ளொளியோடு மாணிக்க
மயமான திருமே னியான்
மறைதேடு பதமலரை அழகுறக் காட்டியே
மறையோரை வாழ வைப்பான்
காதுபோர்த் திரிபுரரை நகையினால் மாய்த்தவன்
காத்ததிரு நகர மிதுவே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சேது நாட்டை ஆண்ட மன்னர்களின் அறக்-கொடைகளையே பெற்றுச் சிறப்பாக இருந்து வருகின்ற திரு உத்தரகோச மங்கை என்ற திருத்-தலம் உலகமெல்லாம் சிவபெருமான் வடிவங்களே என்பதனை விளக்கும் பெரிய திருத்தலம் என்று பக்தி மேம்பட்ட திருவாதவூரர் எனப்படும் மாணிக்கவாசகர் குறிப்பிடுகின்றார். பலப்பல நூற்றாண்டுகளாகவே அடியவர்களைக் காப்பாற்றி அவர்கள் குறைகளைப் போக்கி அருள் செய்யும் சிவபெருமானும் முழுமையாக ஆனந்தம் நிரம்பிய-வனாய் உலகைப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐஞ் செயல்களையும் நிகழ்த்தும் திருக்கூத்தினை இத்தலத்தில் ஆடுகிறான். பார்வதியிடத்துக் கொண்ட அருள் ஒளி

திகழ இங்கு மாணிக்கமாக ஒளி விளங்கும் திரு-மேனியுடன் உள்ளான். வேதங்களும் தேடுதற்குரிய தன் திருவடித் தாமரைகளை அழகு விளங்கத் தரிசிக்கச் செய்தே அந்தணர்கள் நல்வாழ்வு வாழச் செய்கிறான். பகைவரை மோதுகின்ற போர்த் தொழிலில் வல்ல திரிபுர அசுரர்களைத் தன் புன்சிரிப்பினால் அக்கோட்டைகளோடு அழித்த சிவபெருமான் எழுந்தருளியிருந்து அடியார்களை நிலைபெறுத்திய திருத்தலம் இது.

அ.பொ: சேது நாடு - இராமநாதபுர மாவட்டம், சிவமயம்-சிவபெருமான் எங்கும் பரவியுள்ள நிலை, வாதவூரர்- மாணிக்கவாசகர், பரிபூரணம் - நிறைவு, பஞ்சகிருத்தியம் - ஐந்தொழில் 'தோற்றம் துடியதனில் காண்க' ( உண்மை விளக்கம் காண்க ) பதமலர் - திருவடித் தாமரை, திரிபுரர் - மும்மதில் களை உடைய அசுரர் ( வித்துன்மாலி, கமலாட்சன், தாரகாட்சன் ), மாய்த்தவன் - அழித்தவன்.

## 46. திருவெவ்வுளூர்த் தெய்வம்

அவ்வுளே உவ்வுளே மவ்வுளே ஐக்கியம்
அமைத்தனன் அகம்பு குந்தான்
அடியவர்கள் துயர்தீர்க்கு நோக்கினால் தயரதன்
அருந்தவப் பேறா யினான்
எவ்வுளூர் வைகுந்த மென்னவேற் றருளினால்
இறைவியாம் கனக வல்லி
இனியபணி பூணவே வீரரா கவனாகி
இதயமென் பள்ளி கொண்டான்
வவ்வுவார் களவுசெய் தயலார்தம் வாழ்விலே
மாறுசெய முயலு மாக்கள்
வந்துதாண் மலர்மீது மனநொந்து வீழ்வரேல்
மகிழ்வோடு வரவேற் பனே
கவ்வுவா யுளகழுகு மெய்ப்பணி யியற்றவே
கருமாதி காரி யானான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அகார உகார மகாரச் சேர்க்கையாகிய ஓம் என்ற மந்திர ஒலியை ஆதிக்கண் அமைத்து அவ்வொலி-யிடத்துத் தான் கலந்துள்ள பரம்பொருளானவன், அடியார்கள் துயரைப் போக்கும் கருத்தோடு தயரதனுடைய அருந்தவத்தின் பேறாக அவதரித்த

பின்; திரு எவ்வுளூர் என்ற திருத்தலத்தை வைகுந்தத்துக்கு இணையாக மனங்கொண்டு தன் தேவியாம் கனகவல்லித் தாயார் தனக்கு வழுவிலாத இனிய அடிமைத் தொழில் செய்ய வீரராகவன் என்ற அர்ச்சாவதாரம் பூண்டு அவள் இதயம் என்னும் இருப்பிடத்தை ஏற்று, பிறர் பொருள்களை வலியக் கவர்தலாகிய களவுத் தொழிலைச் செய்து மற்றவர் வாழ்விலே தீங்கு செய்ய முயலும் கீழ் மக்கள் தம் செயலுக்கு வருந்தி வந்து தன் திருவடித் தாமரைகளின்மீது விழுந்து வழிபடுவாராயின் அவர்களையும் மகிழ்வோடு அவ்விறைவன் வரவேற்பான். பிற பொருள்களை வலிமையாகப் பற்றும் வாயினை உடைய கழுகாகிய சடாயு, தேவியை இராவணனிடமிருந்து மீட்டலாகிய உண்மைப் பணியில் ஈடுபட்டு உயிரிழக்கவே, அதற்கு பிர்மமேத சமஸ்காரம் செய்து நீர்க்கடன்களைச் செய்யும் தொழிலை மேற்கொண்டவன் அப்பெருமான்.

அ.பொ: இனிய பணி - தன்னலம் கருதாத வழுவிலா அடிமை, வவ்வுதல் - வலியக் கவர்தல், மாக்கள் - மன அறிவு இல்லாதவர், வீழ்தல் - தரையில் விழுந்து வழிபடுதல், கழுகு - சடாயு, கருமாதிகாரி - நீர்க்கடன் செய்யும் உரிமை உடையவன்.

## 47. அலர்மேல் மங்கைபுரம்

மலர்மகளிர் இருவருளு மாமியென மருகியை
வாழ்த்துநிலை யுடைய திருமான்
மண்தலத் துயர்வுமிகு திருவேங்க டத்திலே
மாயவன் வருதல் தேர்ந்தே
அலரின்மேல் மங்கையாம் பெயரோடு தோன்றியே
ஆண்டவனை வேண்டி யடையும்
அரியகுண மாண்பெலா மொருங்கமை தலத்தரசி
அடியவரை வாழ்விக் கவே
அலர்செய்ய விழிகளொடு முயிரினம் தனைநோக்கி
ஆலயத் தமர்பெ ருமகள்
ஆனந்தமூர்த்திதிரு விழாவகைகள் நோக்கியே
அவனிமகள் முகநோக் குவாள்
கலர்வந்து பணியினும் வேண்டுவன நல்கியே
காத்தருள் கடப்பா டுளாள்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசுவேச சிவமே.

பொழிப்: செந்தாமரை வெண்டாமரை என்ற இருநிறத் தாமரை மலர்களில் முறையே வீற்றிருக்கும் திருமகள் கலைமகள் என்ற இருவருள் தான் மாமியாக இருந்து கலைமகளாகிய மருமகளை வாழ்த்தும் நிலையினை உடைய திருமகள் இவ்வுலகினுள் மேம்பாடு மிக்க திருவேங்கட மலையிலே திருமால் அர்ச்சா மூர்த்தியாய் உகந்தருளி வரப்போகும் செயலை உணர்ந்து அலர்மேல் மங்கை என்ற பெயரோடு அவதரித்துத் திருமாலை விரும்பி அடையும் மேம்பட்ட குணச்சிறப்பெலாம் ஒருங்கு அமைந்த, அலர்மேல் மங்கைபுரத்து அரசியாய் அடியவர்களை வாழச் செய்யவே, மலரும் அன்பினால் கடையில் சிவந்த விழிகளோடு உயிரினங்களைக் குளிர நோக்கிய வண்ணம் அத்தலத்தில் அமைந்த ஆலயத்தில் விரும்பி வீற்றிருக்கும் அர்ச்சா மூர்த்தியாகிய பெருமகனாசி, ஆனந்த மூர்த்தியாகிய வேங்கடேசன் திருவிழா வகைகளைக் கீழ் இருந்தவாறே நோக்கியபடி பூமாதேவியின் முகத்தையும் நோக்குகிறாள். கீழ்மக்கள் வந்து தன்னை வணங்கினாலும் அவர்களும் வேண்டுகின்றவற்றை வழங்கி அவர்களையும் அவரவர் நல்வினை - தீவினைகளுக்கு ஏற்பக் காத்து அருளும் முறைமையை உடையவளாய் உள்ளாள்.

அ.பொ: மலர் - செந்தாமரையும் வெண்டாமரையும், திருமகள் மாமி, கலைமகள் மருமகள், மண்தலம் - நில உலகு, ஆண்டவன் - திருமால், செம்மை - தாய் அன்பினால் உண்டான சிவப்பு, ஆனந்தமூர்த்தி - சத்துவச் சொரூபனான திருமால், அவனிமகள் - பூமாதேவி, கடப்பாடு - முறைமை, நேரிய கடமை.

## 48. திருவண்ணாமலை

கருணையது திருவுருவ மெனவன்பர் கூட்டமே
கருதுமுள மருள்பு ரிபிரான்
கனலுருவ மாகவே வானுலகு நாகர்தலம்
காணெல்லை யிலவென் னவே
அருணகிரி மயமான பரமசிவ மூர்த்திதான்
அன்றுநிலை நின்ற பொழுதில்
அரியொரு வராகமாய் அயனொரோ திமமாக
அதலத்தும் வானத் துமே

தருணமிஃ தென்னவே தாண்மலரும் வேணியும்
தக்கநெறி தேடி யேகித்
தம்வலியி னியலாமை கூறுகையில் நான்முகன்
தாழைபொய்ச் சான்று தரவே
கருணரச மொழியினாற் கண்டுவந் தேனென்று
கழறியொரு நிலையி ழந்தான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தீத் தம்பத்தின் வடிவாக வானுலகம் மேல் எல்லை அன்று நாகர் உலகம் கீழ் உலகம் அன்று என்று கூறும்படி, வானுலகின்மேல் உயர்ந்தும் கீழ் உலகின் கீழ்த் தாழ்ந்தும் ஒளிவீசும் மலையாகப் பரமசிவன் நிலை நின்ற பொழுதில் திருமால் வெண்பன்றி யாகவும் பிரமன் அன்னமாகவும் முறையே கீழ் உலகும் மேல் உலகும் தாம் அடிமுடி தேடுதற்கு இதுவே தக்க வாய்ப்பு என்று தக்க வழியைத் தேடி, அகழ்ந்தும் பறந்தும் முயன்று சென்றுதம் ஆற்றலால் அடி முடிதனைக் காண இயலாமையைக் கூறுகையில், பிரமனிடத்துக் கொண்ட இரக்கத்தால் அவன் முடியைக் கண்டான் என்று தாழை மலர் பொய்ச்சான்று கூறிய சொற்களால்தான் அந்தத் தீத்தம்பத்தின் முடியைக் கண்டு வந்ததாகக் கூறித் தன் பொய்ச் சொற்களால் தன் ஒப்பற்ற உயர் நிலையை இழந்தான். அத்தகைய அடிமுடி காண முடியாத பெருமான் கருணையது திருவுருவமாக உள்ளான் என்று அடியார் கூட்டத்தவர் கருதுகின்றனர். அவனும் தன் திருவுளத்தால் அவர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டுள்ளான்.

அ.பொ: கனல் உருவம் - தீ வடிவம், நாகர் தலம் - பாதல உலகம், அருணகிரி - ஒளி வீசும் மலை, வராகம் - பன்றி, ஓதிமம் - அன்னம், தருணம் - சந்தர்ப்பம் வேணி - சடைமுடி, கருணைரசம் - இரக்கம் என்ற சுவை உணர்வு.

## 49. திருத்தணிகை

உருத்திருவு முள்ளத்தி னொளிருபிர ணவமுமாய்
ஓங்கல்தொ றுமோங்கு முருகன்
ஓங்கார மெய்ப்பொருளை யோதுகென நான்முகனை
உரிமையொடு சோதித் தபின்

திருத்திகழு நாடெலாம் குன்றங்கள் தேடியே
திருமயிலி னூர்தி யுடனே
சிவாயநம வென்றுமன முருகவே யோதிவளர்
திருத்தணிகை முடியி லேறிக்
கருத்துருகு மெழில்வள்ளி தெய்வானை யெனுமிருவர்
காதலிடை மூழ்கு கோலம்
காட்டியே வீற்றிருந் தடியவரை யாள்கின்ற
காட்சியை மறக்க வசமோ
கருத்தழகு வேண்டியே கவிவேட்ட முருகனைக்
கண்டிரு கரம் குவிப்போம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: வடிவழகாகிய .செல்வமும் உள்ளத்தில் ஒளிவீசும் பிரணவத்தின் தியானமும் உடையவனாய் மலைகள் தோறும் சிறப்பாகப் போற்றப்படும் முருகன் ஓங்காரமாகிய பிரணவத்தின் உண்மைப் பொருளைச் சொல்லுமாறு நான்முகனாகிய பிரமனுடைய அறிவினை உரிமையோடு சோதித்த பிறகு அழகு விளங்கும் எல்லா நாடுகளிலும் தான் உகந்தருளியிருத்தற்குரிய குன்றுகளைத் தேடியவாறு தன் அழகிய மயில்வாகனத்தோடு சிவாய நம என மனம் உருகுமாறு திருவைந்து எழுத்தை ஓதச் சிறப்பு வளர்கின்ற திருத்தணிகை மலையின் முடியில் ஏறி, மனம் உருகுகின்ற அழகிய வள்ளி தெய்வானை என்னும் இருவருடைய உண்மை அன்பிலும் தான் முழுகிக் கொண்டிருக்கும் வடிவத்தைக் காட்டியே கம்பீரமாக அமர்ந்தவாறு அடியவர்களை ஆட்கொள்ளும் காட்சியினை அடியார்கள் மறத்தல் இயலுமோ. அழகிய கருத்துக்கள் அமைந்த கவிகளை விரும்பி ஏற்கும் முருகனைத் தரிசித்து நம் இரு கைகளையும் குவித்து வணங்குவோம்.

அ.பொ: உருத்திரு - அழகிய வடிவமாகிய செல்வம், ஒளிர்தல்- விளங்குதல், நான்முகன் - பிரமன், ஊர்தி - வாகனம், கருத்தழகு - சிறந்த செய்திகள் பொதிந்திருக்கும் அழகு.

## 50. திருச்சீரலைவாய்

செந்திலெனு மொருபெயர் சிறப்புற விளங்கவே
சிவகுமரன் இருமை யுருவம்
திருமாலு மனமுருக வேற்றசீ ரலைவாயின்
சிறப்பினை யளப்ப தரிதே

அந்திலவன் ஆர்கலியை நோக்கியே ஏகனாய்
அருள்ஞானக் கந்த னாகி
அருள்பெற்ற போற்றிகள் வழிபாடு கொண்டிலையில்
அடல்முதிரு நீறு தருவான்
பந்திவஞ் சனையின்றி நால்வருண முறவோடு
பாற்பாய சம்த ருவனே
பனவர்க்கு நீர்தந்த பின்னரே நிவேதனப்
பாத்திரம் பார்த்த ருளுவான்
கந்தில்வரு கடவுளவன் இருவரொடு கூடுநிலை
கண்டுருகல் வேண்டு மன்றே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திருச்செந்தூர் என்னும் ஒப்பற்ற திருத்தலத்தின் பெயர் உலகில் பிரசித்தமாக விளங்குமாறு சிவகுமாரனாகிய முருகப்பிரான் மேம்பட்ட வடிவத்தைக் கண்டு திருமாலும் மனம் உருகுமாறு மேற்கொண்டுள்ள திருச்சீரலைவாய் என்ற ஆலயத்தின் சிறப்பினைச் சொற்களால் அளந்து கூறுதல் அரிய செயலாகும். அக்கோயிலில் அப்பெருமான் கடலை நோக்கியே ஒரே மூர்த்தியாய், அடியார்க்கு அருள் புரியும் ஞானஸ்கந்தன் என்ற பெயரினனாய், அவன் அருளைப் பெற்றுள்ள போத்திகள் எனப்படும் அர்ச்சகர்களால் வழிபாடு செய்யப்பட்டு பன்னீர் இலையில் ஆற்றல் மிக்க திருநீற்றை அடியாருக்கு வழங்கினான். பந்தி வஞ்சனை இல்லாமல் நான்கு வருணத்தாருக்கும் நட்புளத்தோடு பால் பாயசம் வழங்குகிறான். அந்தணர்களுக்குத் தீர்த்த பிரசாதம் வழங்கப்பட்ட பின்னரே தன்னுடைய நிவேதனப் பாத்திரத்தில் திருக்கண் சாத்துவான். அடியார்களுக்குப் பற்றுக்கோடாக அருளும் அப்பெருமான் வள்ளி தெய்வயானை என்ற இருவரொடும் கூடியிருக்கும் காட்சியைக் கண்டு எல்லோரும் மனம் உருகித் துதிக்க வேண்டும்.

அ.பொ: இருமை உருவம் - மேம்பட்ட நிலை, ஞானஸ்கந்தனாகிய தனித்த நிலை, தேவியரோடு இணைந்துள்ள நிலை என்ற இருவகை நிலை, திருச்செந்தூர் - தலத்தின் பெயர், திருச்சீரலைவாய் - ஆலயத்தின் பெயர், அந்தில் - அவ்விடத்தில், ஆர்கலி - கடல், ஏகன் - தனியாக இருப்பவன், போற்றிகள் - முருகனுக்கு ஆராதனை செய்யும் அந்தணர் இனத்தார், பனவர் - பார்ப்பனர்; கந்து-பற்றுக்கோடு.

## 51. சுவாமிமலை

சாமிநா தப்பெயரை வேண்டியே தனியனாய்ச்
சாமிமலை வந்த முருகன்
தண்டபா ணிக்குரிய வெழிலோடு வேலோடு
தண்டமேந் தாது நின்றே
காமியோ கோபியோ நானில்லை யெதிர்வந்து
காண்மினோ வென்ற ழைப்பான்
கமலபவன் ஓங்கார உட்பொருள் தெளிந்திலாக்
காரணத் தாற்குட் டியே
ஓமிரா முழுதுமவன் ஓதவே சிறையிட்டும்
உயிர்படைப் பேற்ற தலைவன்
ஓங்கார மயமான தந்தைக்கு முறையினால்
உட்பொருள் விளக்கு குரவன்
காமினோ மனமென்று சாமிநா தாரியன்
காட்சிதரு மழகென் னையே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சிவபெருமானுக்கும் குரு என்று புகழப்படும் பெயரை விரும்பியே தன்னந் தனியனாய்ச் சுவாமிமலைக்கு வந்த முருகப்பெருமான் கையில் கோலை வைத்திருக்கும் தண்டபாணி பெருமானுக்கு உரிய அழகோடு, கோலை ஏந்தாது வேலை ஏந்தி நின்று, 'நான் காமம் மிக்கவனோ கோபம் உடையவனோ அல்லேன். என்னை நேரில் வந்து காணுங்கள்' என்று அடியவர்களை அழைத்துக் கொண்டிருக்கிறான். திருமாலுடைய உந்தித் தாமரையில் தோன்றிய பிரமன் ஓங்காரத்தின் உள் ஆர்ந்த பொருளைத் தெளிவாக அறியாத காரணத்தால் அவன் தலையில் குட்டித் தன் வாழ் நாளின் ஓர் இரவு முழுதும் அப்பிரணவத்தை அவன் ஓதுமாறு செய்து அவனைச் சிறையிலிட்டு உயிர்களைப் படைத்தற்குரிய பிரமனுடைய செயலைத் தானே ஏற்றுக்கொண்ட தலைவன் முருகன் ஆவான். ஓங்கார வடிவினனான தன் தந்தையாம் சிவபெருமானுக்கு அவன் குரு என்ற நிலையில் அமர்ந்து முறைப்படி ஓங்காரத்தின் உட்பொருளை உபதேசித்த குரு அவன். எல்லோரும் மனத்தைத் தீய வழியில் செல்லாது அடக்க வேண்டும் என்று தன் வடிவினால் எல்லோருக்கும் விளக்கியருளும் சுவாமிநாதனாகிய அவ்வணங்கத்தக்க பெருமானுடைய அழகு சொல்லுக்கு அடங்காதது.

அ.பொ: சாமிநாதன் - சிவபெருமானுக்கும் தலைவன், தண்டம் - கோல், பாணி - கை, காமி - பெருவிருப்பு உடையவன், கோபி - சினமுடையவன், கமலபவன்- செந்தாமரையில் தோன்றிய பிரமன், ஓங்காரமயன் - ஓங்கார வடிவினன், ஆரியன் - பூசிக்கத்தக்கவன்.

## 52. திருவேரகம்

பாரத்துவாச குலம்வந்து குலபதி போன்று
பழமைபொலி வேத மோதிப்
பச்சைப்ப சுந்தமிழி னாழமெல் லாம்கண்ட
பண்போடு முறையெ ழுதியே
சாரத்தி னாசிரியம் அவையென்று காட்டுமொரு
தமிழ்ச்செல்வி தவமா மகள்
தமக்கொப்பில் நச்சினார்க்கி னியர்மன மாரவே
சார்ந்தஆ ராய்ச்சி யாலே
ஈரத்தின் மிக்கமுரு கேரகப்ப தியின்கண்
இருப்பனெனு மாற்றுப் படைக்கு
எழுதுமுரை யடியிலே ஈதுமலை நாட்டினுளது
எனவெழுதி வைத்த தாலே
காரத்தை வேண்டாத வேரகத் தையனைக்
காணநாம் மலையே றுவோம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பரத்துவாச முனிவர் கோத்திரத்தில் வந்து அவதரித்துப் பலருக்கும் போதிக்கும் குலபதி போல விளங்கிப் பழமை விளங்கும் வேதாத்தியனம் செய்து, என்றும் இளமை மணம் கமழும் தமிழ் மொழியின் ஆழத்தை எல்லாம் ஆராய்ந்து அறிந்த அறிவாற்றலோடு பத்துப்பாட்டுக்கு உரை வரைந்து பொருட்சிறப்புடைய ஆசிரியப்பாக்கள் சுவை என்று நன் மக்களுக்கு அறிவிக்கும், தமிழணங்கின் தவப் புதல்வனாய்த் தமக்குப் பிறர் ஒப்பாவார் இல்லாத நச்சினார்க்கினியர் மனம் நிறையச் செய்த ஆராய்ச்சியாலே இரக்க உள்ளத்தால் மேம்பட்ட முருகப்பிரான் திரு ஏரகத் தலத்தில் உகந்தருளி யிருக்கிறான் என்று குறிப்பிடும் திருமுருகாற்றுப் படைக்குத் தாம் எழுதிய உரையில் ஏரகம் மலை நாட்டில் உள்ளதொரு திருப்பதி என்று குறிப்பு எழுதி வைத்ததனாலே பொன் முதலிய செல்வங்களை விரும்பாத திரு ஏரகத்து முருகனைத் தரிசிக்க அவன் உகந்தருளியிருக்கும் சிறிய குன்றின் மீது ஏறி அவன் ஆலயத்துக்குச் செல்வோமாக.

அ.பொ: பரத்துவாசர் - இராமாயண காலத்து முனிவருள் ஒருவர், ஆசிரியம் - பத்துப்பாட்டின் பத்துப் பாடல்களும், ஈரம் - உயிர் இரக்கம், ஏரகம் - கன்னியாகுமரி மாவட்டத்தில் தக்கலை என்ற ஊரை அடுத்துள்ள கந்தன் கோயில். குமார கோவில் என்று வழங்கப்படுகிறது, காரம் - பொன்.

குறிப்பு: ஏரகம் மலைநாட்டகத்தொரு திருப்பதி என்றார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

## 53. திருப்பரங்குன்றம்

திருமுருக னடிமலர்க் காற்றுப் படுத்தவே
சிந்தைபுரி நக்கீ ரனார்
திருப்பரங் குன்றமே முருகனது கோயிலாச்
செப்புமுள நோக்கி னாலே
பெருமைபொலி பத்தாய பாட்டுளே முதனின்ற
பீடுமலி பாட்டி யற்றிப்
பிறதலமும் முருகுபுக வுளதென்று கூறினார்
பிற்றைநாள் மெய்யன் பரோ
முருகனது தலமாறு படைவீடு மாட்சிமிகு
முத்திநெறி யாகு மென்றார்
முறைமையி ஃதாகுமென நுட்பமொடு செப்பமுள
முதுபுலவர் தலைவர் சொற்றார்
கருகும்வினை யாளராய்க் கந்தனைவ ணங்கியே
காண்பமே பேரின் பமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அழகியனான முருகப்பெருமான் திருவடித்-தாமரைகளில் முருகன்பால் வீடு பெற்றான் ஒருவன் வீடு பெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை ஆற்றுப்படுப்பதாகப் பாடல் இயற்ற உள்ளம் கொண்ட நக்கீரனார் என்ற தமிழ்ச் சங்கப் புலவர் திருப்பரங்குன்றமே முருகப்பெருமானுடைய ஆலயம் அமைந்த தலம் என்று முதற்கண் குறிப்பிடும் அவருடைய உள்ளக் கருத்தை நோக்கினாலே பெருமை பொருந்திய பத்துப்பாட்டுள் முதல் பாடலாகத் தொகுக்கப்பட்டிருக்கின்ற திருமுருகாற்றுப் படையுள் அவர் திருப்பரங்குன்றை அடுத்தே பிற தலங்களிலும் முருகன் கோயில் கொண்டருளியுள்ள செய்தியைக் குறிப்பிட்டுள்ளார் என்பது பெறப்படும். ஆனால் பிற்காலத்தில் தோன்றிய மெய்யன்பர் களோ மாண்புமிகு முத்தி நெறியை வழங்கும் முருகனுடைய தலைநகரங்கள் ஆறுபடை வீடு

என்று கணக்கிடுகின்றனர். ஆனால் ஆற்றுப்படை குறிப்பிடும் முருகனுடைய தலைநகரங்கள் சிறப்பாகத் திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாய், திரு ஆவினன்குடி, திரு ஏரகம் என்ற நான்கே. ஏனைய குன்றுகளும் மலைகளும் அவன் பொதுவாக விரும்பி அமரும் இடங்களே என நுட்பமும் செம்மையுமுடைய பேரறிஞரான புலவர் தலைவர்கள் ஆறுபடை வீடுகள் என்ற கருத்து ஏற்புடையதன்று என்று குறிப்பிட்டுள்ளனர். நாம் நம் வினைகள் அழிந்தொழிய முருகப்பெருமானை வணங்கிப் பேரின்பத்தை நுகர்வோமாக.

அ.பொ: ஆற்றுப்படுத்தல் - வழியில் செலுத்துதல், பத்தாய பாட்டு - பத்துப்பாட்டு என்ற பத்துப் பாடல்களின் தொகுதி, பீடு - பெருமை, பாட்டு - திருமுருகாற்றுப் படை, முருகு புகல்-முருகன் விரும்பித் தங்கியிருத்தல், படைவீடு - தலைநகர், முதுமை - மூதறிவு, கருகும்- செயலற்று ஒழியும், கந்தன் - ஆறு உருவமும் ஒருருவமாகப் பார்வதியால் சேர்க்கப்பட்டவன்,
"கையால் எடுத்தணைத்துக் கந்தன் எனப்பேர்
புனைந்து மெய்
ஆறும் ஒன்றாக மேவுவித்து" (கந்தர் கலிவெண்பா. 84)

## 54. சங்கரநயினார் கோயில்

சங்கரனு நாரணனு மொருபடிவ மாகவே
தம்முருவு நல்க நிற்கும்
தலமொன்று தமிழகத் துள்ளதங் குறைகின்ற
சக்திகோ மதியா குமே
சங்கர விலிங்கமுள தம்பிகை யிருக்கிறாள்
தாள்பணிந் தார்க்க ருளவே
சங்கரன் வெண்மையுற நாரணன் கருமையுறும்
தன்மையொரு சிலைகாட் டுமே
மங்கள மிகுந்தநல் வாழ்வுபெற வேண்டுவோர்
வழிதேடி வந்து போற்ற
மந்திரச் சித்திபெற வருவோரும் நேர்நிற்கும்
வழக்கமொன் றிங்குள் ளதே
கங்கண கரத்திகோ மதிமுன்பு காணாத
காட்சியிலை கற்ப னையிலை
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: உலகிற்கு நன்மை புரிபவனாகிய சிவனும் உலகைக் காப்பவனாகிய நாராயணனும் ஒரே வடிவத்தில் தம் உருவத்தை, அடியார்கள் விரும்பி வழிபடுமாறு

கோயில் கொண்டருளியிருக்கும் திருத்தலம் ஒன்று சங்கர நயினார் கோயில் என்ற பெயரில் நம் தமிழகத்தில் நிலவுகின்றது. அங்கு உகந்தருளி-யிருக்கும் அம்பிகை கோமதி என்ற பெயரினள். தம் திருவடிகளை வழிபடுபவருக்கு அருள் புரியவே, சங்கரலிங்க இறைவனும் அம்பிகையும் அங்கு அர்ச்சா வடிவில் எழுந்தருளியுள்ளனர். அங்குள்ள சங்கர நாராயணர் சிலையின் வலப்புறம் சிவபெருமானுக்கு உரிய வெண்ணிறத்ததாயும் இடப்புறம் திருமாலுக்கு உரிய கரு நிறத்ததாயும் காட்சி வழங்குகிறது. நன்மை மிகுந்த நல்வாழ்வு பெறவேண்டும் மக்கள் அதற்கு உரிய வழியைத் தேடியவராய் இத்தலத்துக்கு வந்து இவ்விறைவனைப் புகழ்ந்து வழிபடுகின்றனர். தாம் பயிலும் மந்திரங்கள் பயன் தருதலை வேண்டுவோர் இவ்விறைவன் எதிரே நின்று மந்திரங்களைப் பலகாலும் உச்சரித்து மந்திர சித்தி பெறும் வழக்கம் இத்தலத்தில் உள்ளது. கையில் வளையல்கள் அணிந்த கோமதியம்மன் சந்நிதியில் கற்பனையில் காணக்கூடிய அழகுகள் எல்லாவற்றையும் காணலாம்.

அ.பொ: சங்கரன் - நன்மை தருகின்றவனாகிய சிவபெருமான், படிவம் - வடிவம், நல்குதல் - விரும்புதல், சக்தி - இறைவி, சிலை - கல் வடிவம், மந்திர சித்தி - மந்திரம் முழு ஆற்றலையும் உற்றுப் பயன் தருதல்.

## 55. திருக்கானப்பேர் என்ற காளையார் கோயில் அமைப்பு

மும்மையுரு வெய்தியே பரமன்மெய் யருள்காட்டு
முதுபெருந் தலமா மென
முக்கணெம் பெருமானார் மூன்றுதனிக் கண்ணோடு
முளைத்தமா தவமென் னவே
இம்மைநல மறுமைநல மீந்தருளி வீட்டினையும்
எளித ருளுகாளை யரசும்
இணையிலா இறைவியும் கோயில்கொண்
டருள்தலம்
இஃதென்று கூற வேண்டும்
செம்மைபொலி மேனிகொள் சிவத்தினைத் தேடியே
திருத்தொண்டர் இங்கு வந்தார்
தேவார மும்பாடி வாழ்த்தினார் சிவனருட்
செல்வமும் கொண்டே கினார்

கைம்மலியும் அரசுமுன் வாழ்ந்தபெரு நகரான
கானப்பேர் ஈதென் பரே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பிரமன், திருமால், உருத்திரன் என்ற மூன்று வடிவங்களும் பொருந்திய பரம்பொருள் உண்மையான அருளினை உயிரினங்களுக்கு வாரி வழங்கும் பழய பெரிய திருத்தலம் கானப்பேர் என்னும் காளையார் கோயில். முக்கட்பெருமானாகிய சிவபெருமான் தன் மூன்று கண்களோடு அடியவர் களுடைய தவப்பயனே வெளிப்பட்டாற் போல, இம்மை நலன்களும் மறுமை நலன்களும் அடியவர் களுக்கு அருள் செய்து வழங்கி எளிமையாக வீடு பேற்றையும் நல்கும் காளை வடிவில் சுந்தரர் கனவில் வந்து அருள்செய்த அரசனாகிய சிவபெருமானும் ஒப்பற்ற பார்வதியும் திருக்கோயில் கொண்டு அருள் பாலிக்கும் திருத்தலம் இஃது என்று கூறவேண்டும். செம்மை நிறம் விளங்கும் திரு மேனியைக் கொண்ட சிவபெருமானைத் தரிசிக்க வேண்டி இத்தலத்துக்கு வந்த தேவார முதலிகள் இப்பெருமானைத் தேவாரப் பாடல்களால் வாழ்த்தி அவன் அருட்செல்வத்தைப் பெற்றுச் சென்றனர். கைகளுக்கு உரிய செயலாகிய கொடைத் தொழிலில் மேம்பட்ட பாண்டிய அரசர்கள் பண்டு வாழ்ந்த பெருநகரான திருக்கானப்பேர் என்பதே இப்பொழுது காளையார் கோயில் என்ற பெயராக மாறி வழங்குகினறது.

அ.பொ: மும்மை உரு - இலிங்கத்தின் அடிப்பாகமாகத் தரையில் மறைந்திருப்பது பிரமபாகம், இடைப் பாகமாக ஆவுடையாருள் மறைந்திருப்பது விஷ்ணு பாகம், வெளியே அடியார்கள் தரிசிக்கக் காட்சி வழங்கும் தலைப்பாகம் உருத்திர பாகமாகும். எனவே ஒவ்வோரிலிங்கமும் மும்மூர்த்தி வடிவினது. காளை அரசு - சுந்தரருக்கு அவருடைய கனவில் ஒரு காளை வடிவில் காட்சியளித்துத் தம் திருத்தலத்துக்கு வரவழைத்து, அவரைப் பதிகம் பாடுவித்த இறைவன், இத்தலத்துக்குச் சம்பந்தர் பதிகம் ஒன்றும் சுந்தரர் பதிகம் ஒன்றும் உள்ளன, அரசு - பாண்டிய அரசு.

## 56. திருவேடகம்

காழிமா நகர்பெற்ற மாதவப் பேறாய்க்
கடவுட்பெ ருஞ்செல் வனார்
கைதவனை யாண்டருள மதுரையம் பதிவந்து
கையிலமை மந்தி ரத்தால்
வாழியென நோய்வெப்பு மாற்றிய பினமணரொடு
வாதமிகு கோலத் திலே
வையையிடை தேவாரப் பதிகமொன் றுளவேடு
வாரிசெல் வழியெ திர்த்தே
கோழிகொடி கொண்டமுரு கவதார சம்பந்தர்
கொண்டகொள் கையை விளக்கக்
குறிப்பின்வழி தமிழேடு சென்றுநிலை பெற்றதலம்
கோயில்திரு வேடக மெனாக்
காழிவரு பிள்ளைதிரு வாக்கினொடு தொடர்புபெறு
காமாரி தேய மலவோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சீகாழிப் பெருந்தலம் செய்த பெரிய தவத்தின் பயனாக அவதரித்த தெய்வ அருளாகிய பெரிய செல்வத்தை உடைய திருஞானசம்பந்தர் கோழிக் கொடியினை உடைய முருகப்பெருமானுடைய அவதாரமாவார். அவர் பாண்டியனை அடிமை கொள்ள மதுரை மாநகருக்கு வந்து தம்மிடத்துச் சித்தி பெற்றிருந்த மந்திரத்தினாலே அவன் வாழுமாறு அவனுடைய காய்ச்சல் நோயினை மாற்றிய பின்னர் அமணரோடு வாது செய்த செயலிலே தேவாரப் பதிகம் எழுதப்பட்ட பனை ஓலை ஒன்றனை வையை நதியிலே நீரோட்டம் செல்லும் வழியில் இட்டாராக, அவ்வேடு நீரோட்டத்தை எதிர்த்துச் சென்று அவர் கொண்ட கொள்கையை விளக்கும் வகையில் அவர் கருத்துப் படி, மேல் கடவாமல் தங்கிய இடம் திரு ஏடகக் கோயில் என்று சீகாழியில் அவதரித்த திருஞான சம்பந்தப் பிள்ளையின் திருவாக்கினோடு தொடர்பு பெற்ற, மன்மதனை அழித்த சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திருத்தலம் அன்றோ?

அ.பொ: கைதவன் - பாண்டியன், வெப்பு - காய்ச்சல் நோய், அமணர் - சமணர்கள், வாரி - நீர் வெள்ளம், கோழி கொடி - கோழியை வடிவாக எழுதப்பெற்ற கொடி, காமாரி - காமனை அழித்த சிவபெருமான். முராரி, புராரி, வலாரி என்பன முறையே திருமால், சிவன், இந்திரன் என்பவரைக் குறிப்பன.காழிவரு பிள்ளை- திருஞானசம்பந்தர், ஏடகம் - நீரோட்டத்தை எதிர்த்து நீந்திய ஏடு தங்கிய இடம்.

## 57. நாகர்கோயில்

ஆகமொரு பாதியினை மலைமங்கை பெறவீந்த
அண்ணலார் அன்பர் காண
அருள்விளங்கும் பெரிய மூர்த்தியாய் நீர்நிலையில்
அன்பொட முந்த தலமாம்
நாகமாயி ரம்வந்து நாடோறும் பணிபூண்ட
நற்றிருப் பெற்ற கோயில்
நாடெலாம் காணவே யின்றுதென் தமிழ்நாடு
நண்ணுறு பெரும்பே றெனா
ஏகமாய் யாவுமாய் யாவும்வல இறைவனை
இறைஞ்சவுள தேவ குலமாம்
இன்றளவு மெம்பிரான் திருமுடியி னிழல்தர
எழும்பியவி மான மில்லை
காகமாதிய வரினும் வாழ்வுபெற வமைகூரை
காணுவதை எவரும் அறிவார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தன் உடம்பின் இடப்பாதியை இமவான் மகளான பார்வதி கொள்ளுமாறு வழங்கிய தலைவராம் சிவபெருமான் அன்பர்கள் தரிசிக்குமாறு அருளால் வடிவெடுத்த பெரிய உருவினராய் நீர் நிலையி-லிருந்து வெளிப்பட்ட திருத்தலம் நாகர்கோயில். நாகம் பல எண்ணிக்கையில் வந்து நாள்தோறும் தொண்டு செய்யும் பெரிய செல்வத்ததைப் பெற்ற கோயிலாய், மக்கள் எல்லோரும் கூறுமாறு இன்று அழகிய தமிழ்நாட்டில் பொருந்தியுள்ள பெரிய செல்வம் என்று கருத, ஒருவனாய் எல்லாமாய் யாவும் செய்ய வல்லவனாகிய இறைவனை வழிபடுதற்குரிய திருக்கோயிலை உடையது அத்தலம். இன்று வரை தமிழ்நாட்டிலுள்ள அக்கோயிலில் உகந்தருளி யிருக்கும் இறைவனுக்குத் திருமுடியில் நிழல் வழங்கும் வகையில் கருவறையில் எழுப்பப்பட்ட விமானம் இல்லை. காகங்கள் முதலியன வந்தாலும் வந்து தங்கி மகிழுமாறு அமைந்த கூரையே கருவறையின்மீது காணப்படு-வதனை யாவரும் அறிவார்கள்.

அ.பொ: ஆகம் - உடம்பு, மலைமங்கை - பார்வதி, ஆயிரம் - மிகுதிக்கு ஓர் எண், நற்றிரு - பெரிய செல்வம்; "நன்று பெரிதாகும்" ( தொல்.சொல்.உரி: 343 ) பெரும்பேறு - மேம்பட்ட செல்வம், தேவகுலம் - கோயில்.

## 58. சுசீந்திரம்

இராமகதை தெளிவிக்கும் ஓவியம் சிற்பம்
எழுந்தோங்கு மான முளதாய்
எழில்மலியும் அகலிகையின் அறக்கற்ப ழிக்கவரும்
இந்திரன் சாப மொழிய
மராமர மழித்தபெரு வள்ளலே மனமார
வாழ்த்தியருள் பெருமை பெற்ற
மாதேவ தலமின்று சுசீந்திரப் பெயரோடு
மான்மிய மிகுந்துள் ளதே
தராதலம் வணங்கவே தாணுமா லயனென்ற
சாமியே கோயில் கொண்டான்
தவச்செல்வி அகலிகை சிறப்புலக மறியவே
தன்னருள் விளக்கு கின்றான்
கராசல முகத்தவனு மறுமுகனும் அனுமனும்
கைகூப்பி வாழ்வு பெறுவர்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: இராமனுடைய வரலாற்றைத் தெளிவாகக் குறிப்பிடும் ஓவியங்களும் சிற்பங்களும் சிறப்பாகக் காணப்படும் விமானத்தை உடையதாய் அழகுமிக்க அகலிகையின் அறக்கற்பினை அழிக்க வந்த இந்திரனுக்கு, அகலிகையின் கணவனான கௌதம முனிவனால் இடப்பட்ட சாபம் நீங்குமாறு மராமரம் ஏழனையும் உருவுமாறு ஓரம்பினை செலுத்திய வள்ளலாகிய இராமபிரானே இங்குள்ள சிவபெருமானை வாழ்த்த வேண்டிய பெருமை பெற்ற சிவபெருமானுடைய திருத்தலம், இக்காலத்தில் சுசீந்திரம் என்ற பெயரோடு பெருமை மிகுந்துள்ள திருத்தலமாகும். உலகமெல்லாம் விளங்க இங்குள்ள இறைவன் மும்மூர்த்தி உருவினனாய்த் தாணுமாலயன் என்ற பெயரில் உகந்தருளித் தங்கியுள்ளான். தவத்தையே செல்வமாக உடைய அகலிகையுடைய சிறப்பினை உலகம் அறியுமாறு தன் அருளினாலே அதனை விளக்கிக் கொண்டிருக்கிறான். இத்தலத்தில் யானை முகத்தவனாகிய விநாயகனும் அறுமுகனாகிய முருகனும் அநுமனும் இறைவனை வணங்கி நல்வாழ்வு பெற்றுள்ளனர்.

அ.பொ: மானம் - கருவறையின் மீது எழுப்பப்படும் விமானம், அறக்கற்பு - பிறருக்குத் தீங்கு தாராத அமைதியான கற்பு, மாதேவன் - மகாதேவனாகிய சிவபெருமான், மான்மியம் - பெருமை, தராதலம் - பூமி, தாணு - நடு தறி வடிவினனாய சிவபெருமான், கராசலம் - கையை உடைய மலை போன்ற யானை.

## 59. கன்னியாகுமரி

உன்னியார் வேண்டுபே றெல்லா முவந்தருளும்
ஓங்கார பரிபூ ரணி
ஒப்பற்ற கன்னியா குமரியாம் வடதிசையின்
உள்ளவி றைவனை யெண்ணியே
மன்னியார் மாதவத் துருவாக நின்றருளும்
மலைவல்லி வாரி தியிலே
வருகலம் பல்லாண்டு திரைகளாற் புயல்களாற்
மாயாது காத்த தேவி
பன்னியா யொருவற்கு மமையாது கன்னியாய்ப்
பாரகம் காத்த நற்றாய்
பண்பாடு வாய்ப்புலவர் பெண்பாலின் மென்மையைப்
பாடவென நின்ற செல்வி
கன்னியா குமரியென மாதவப் பெயர்பூண்ட
காட்சியினை நல்கு கின்றாள்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

**பொழிப்:** வேண்டியவர் வேண்டிய பாக்கியங்களை எல்லாம் விருப்பொடு அருள் செய்யும் பிரணவத்தின் வடிவினளாய் எல்லா நற்பண்புகளும் செல்வங்களும் நிறைந்தவளாய், ஒப்பற்ற மணமாகாத குமரியாய், வடதிசையில் கயிலையில் உகந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தியானித்தவாறே நிலைபெற்றுப் பொருந்திய பெருந்தவத்தின் வடிவாக நின்ற திருக்கோலத்திலிருந்து உலகுக்கு அருள்புரியும் மலைப்பெண்ணாகிக் கடலிலே வருகின்ற மரக்கலம் பல்லாண்டுக் காலம் அலைகளாலும் புயல் காற்றுக்களாலும், மழைகளாலும் அழியாதவாறு காத்த தேவியாவாள். ஒருவருக்கும் மனைவியாக வாழ்க்கைப்படாமல் கன்னியாக இருந்தே உலகங்களைக் காக்கும் மேம்பட்ட தாயாவாள். பண்ணோடு பாடல்களை இயற்றும் வாயை உடைய புலவர்கள் பெண்பாலின் மென்மைத் தன்மையை எடுத்துப்பாட எடுத்துக்காட்டாக அமைந்திருக்கும் திருமணமாகாத கன்னியாவாள். அவள் கன்னியாகுமரி என்ற பெயர் பூண்டு தான் செய்யும் தவக்காட்சியைக் காணும் வாய்ப்பினை நமக்கு விரும்பி வழங்கிக் கொண்டிருக்கின்றாள்.

**அ.பொ:** உன்னியார் - கருதியவர்கள், பேறு - பாக்கியம். மன்னி ஆர் - நிலைபெற்றுப் பொருந்திய, கலம் -

மரக்கலம், புயல் - மழை, பெருங்காற்று. திரை - கடல் அலை, பன்னி - பத்னி - மனைவி, பெண்மை - கட்புலனாயதோர் அமைதித் தன்மை.

## 60. திருநெல்வேலி

திருமிக்க நெல்வேலி தென்றமிழ்த் திருநாடு
செய்ததவ வுருவ மென்ப
திறமோடு பெருமக்கள் குலமக்கள் குடிமக்கள்
சிவபக்தி யுருவ மானார்
பெருமைக்கும் அருமைக்கும் இயைபண்பு பூண்டுள்ள
பெண்மக்கள் வாழ்வு ளதாம்
பிறங்கொளிகொள் காந்திமதி தேவியொடு பரமேசன்
பேரின்பம் நல்கு நகரம்
தருமிக்க நாணமுறு நல்வாழ்வு தன்னையுறு
தமர்க்கவன் தருவ னென்றே
சான்றோர்கள் போற்றுநகர் தமிழ்ப்புலமை தலைதூக்கு
சாலிவா டீசு வரமாம்
கருவுக்குள் வீழாது மீளாத வாழ்வுதரும்
கருணையொளி தழுவு நகரம்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: செல்வம் மிக்க திருநெல்வேலித் தலம் அழகிய தமிழ்த் திருநாடு செய்த தவத்தின் பயனாக உருவெடுத்த தலம் என்பார்கள். பலவகைகளில் வாழும் பெருமக்களும், நாற்குல மக்களும், அத்தலத்தில் குடியிருந்து வாழும் ஏனை மக்களும் சிவபக்தியே உருவமாக இருக்கின்றார்கள். பெருமைக்கும் அருமைக்கும் பொருத்தமான நற்பண்புகளை உடைய பெண்மக்கள் நல்வாழ்வு வாழும் தலமாக அஃது அமைந்துள்ளது. விளங்குகின்ற ஒளியை உடைய காந்திமதி என்ற இறைவியோடு சிவபெருமான் ஆன்மாக்களுக்குப் பேரின்பம் நல்கும் பேரூர் அது. கற்பக மரங்களும் மிகவும் வெட்கப்படுமாறு, தன்னை வந்தடையும் அடியார்களுக்கு நல்வாழ்வு இறைவன் நல்குவான் என்று சான்றோர்கள் போற்றும் கோயில் தமிழ்ப் புலமை மேம்பட்டு ஓங்கும் சாலிவாடீசுவரம் என்ற பெயரையும் உடையது. மீண்டும் கருப்பைக்குள்ளிருந்து பிறப்பு எடுக்காதவாறு மீண்டும் திரும்பி வாராத வீடுபேற்று வாழ்வினை நல்கும் கருணைப் பிரகாசம் பரவிய திருத்தலம் அது.

அ.பொ: திறம் - பலவகை, பிறங்கு - விளங்கும், தரு- கற்பக மரங்கள், தமர் - தன் அடியார்கள், சாலிவாடி - திருநெல்வேலி, ஈச்சுரம் - சிவன் கோயில், கருவுக்குள் வீழ்தல் - பிறப்பெடுத்தல்.

## 61. ஆழ்வார் திருநகரி

சங்கங்கள் நெறிகொண்டு சென்றதா மிரபருணி
தன்பெருமை நாட்டு குருகூர்
தமிழ்வாழ மறைவாழ அவதரித்த ருள்செய்த
சடகோபர் புளியி னிழல்
அங்கமாற னோடுமறை யாய்ந்தறிந் தவர்காண
அரியபொருள் தமிழில் வரவே
அமுதமய வேதமாம் திருவாயின் மொழியினொடும்
ஆசிரியம் அருளு மூதூர்
சங்கமும் சக்கரமும் ஏந்துமொரு தெய்வமே
சரணமென வுணரு மறையோர்
தமிழ்மதுர கவிவந்து போற்றியெ ழுதித் தந்த
தமிழ்வேத மோதி மகிழ்வார்
கங்கைபொரு நதியருகு தோன்றுதிரு நகரியைக்
காண்பதோர் தவமா குமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சங்கங்கள் தன் வழியாக ஊர்ந்து செல்லும் தாமிரபருணியாற்றின் பெருமையை நன்றாக உறுதிப்படுத்தும் திருக்குருகூர், தமிழும் வேதமும் வாழுமாறு இந்நிலவுலகில் அவதரித்த சடகோபர் புளியமரத்தின் நிழலில் தங்கி ஆறு அங்கங்களோடு வேதத்தை ஆராய்ந்து அறிந்தவர்களும் காண இயலாத செய்திகள் தமிழ்மொழியில் அமையுமாறு அமுதமயமான திருவாய்மொழியோடு திருவாசிரியம் முதலிய பிரபந்தங்களை அருளிச் செய்த பழய தலமாகும். சங்கும் சக்கரமும் திருக் கைகளில் ஏந்தும் ஒப்பற்ற தெய்வமாகிய திருமாலே நமக்குப் பற்றுக்கோடு என்று உணரும் அந்தணர்கள், தமிழ் வல்ல மதுரகவியாழ்வார் சடகோபரிடம் வந்து அவரை வழிபட்டுப் பட்டோலை சாத்திய தமிழ் வேதங்களாகிய நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களையும் ஓதி மகிழ்கின்றனர். கங்கையை ஒத்த தாமிரபருணி நதிக்கரையில் அமைந்திருக்கும் திருக்குருகூராகிய ஆழ்வார் திருநகரியைத் தரிசிப்பதே ஒரு தவச்செயலாகும்.

அ.பொ: நம்மாழ்வார் அருளிய பிரபந்தங்கள்-திருவிருத்தம் - இருக்கு வேதசாரம் - 100 பாடல்கள்
திருஆசிரியம் - சாமவேதசாரம் - 7 பாடல்கள்

பெரியதிருவந்தாதி -
அதர்வவேதசாரம் - 87 பாடல்கள்

திருவாய்மொழி - சாமவேதசாரம் - 1102 பாடல்கள்

---------

1296 பாடல்கள்

---------

சடகோபர் - நம்மாழ்வார், குருகூர் - ஆழ்வார் திருநகரி, மதுரகவி - நம்மாழ்வார் சீடர், அவர் பிரபந்தங்களை ஏட்டில் பொறித்தவர், சரணம் - நமக்கு அடைக்கலம் வழங்கும் பொருள், பட்டோலை செய்தல் - பனை ஓலையில் எழுத்து வடிவில் பாசுரங்களைப் பொறித்தல்.

## 62. ஸ்ரீவைகுண்டம்

சிவபிரான் ஒருகோயில் சேர்ந்துதன் மெய்யன்பர்
தேடுநலம் அருள்பு ரியவே
திருமாலு மற்றொரு திருக்கோயில் புக்கங்கு
சிந்தையுரு கன்ப ருக்கே
நவமுலாம் வாழ்வெலாம் நல்கியருள் தலமாகி
நாவின்மலி புலவர் குலமும்
நான்குமறை யோதியவர் குலமுநல மெய்தவே
நன்கமைந் துள்ள நகரம்
திவமுளார் அறியாத மனவுறுதி யுள்ளபல
சிவபக்தர் விண்டு பக்தர்
சிறிதுமன மாறுபா டில்லாது வாழ்கின்ற
சீர்த்தவை குந்த நகரம்
கவருவார் இல்லாத செல்வமலி நன்மக்கள்
காதல்வளர் வைகுந் தமா
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சிவபெருமான் தனிப்பட்ட கோயில் ஒன்றிலே உகந்தருளியிருந்து தன்னுடைய உண்மையான அடியார்கள் தேடிக்கொண்டிருக்கும் நன்மைகளை எல்லாம் வழங்கி அருள் புரியவும், அவ்வாறே திருமாலும் தனக்கென தனிப்பட அமைந்த கோயிலில் எழுந்தருளியிருந்து உள்ளம் உருகும் அடியவர்களுக்குப் புதுமைகள் நிகழும் நல்வாழ்வை

எல்லாம் விரும்பி அளித்து அருள்செய்யும் திருத்தலமாகி, நாவன்மையால் மேம்பட்ட அறிஞர் கூட்டமும் நான்கு மறையையும் ஓதுவதில் வல்ல அந்தணர் கூட்டமும், எல்லா நலன்களையும் எய்துமாறு இருபெருந் தெய்வ அருளும் நன்கு அமைந்துள்ள திருத்தலம், தேவருலகில் உள்ளவரும் அறியமுடியாத உள்ள உறுதி உடைய சிவபக்தர் பலரும், திருமால் அடியவரும் சிறிதும் மனத்தில் மாறுபாடு இல்லாமல் கூடிவாழ்கின்ற மிகு புகழை உடைய வைகுந்தம் என்ற பேரூராகும். தம் செல்வத்தைக் களவினால் கைப்பற்றுவார் ஒருவரும் இல்லாதபடி செல்வம் மிக்க நன்மக்கள் விருப்போடு வாழ்ந்து கொண்டிருக்கும் திருத்தலம் அது.

அ.பொ: நவம் உலாம் - புதுமைகள் நிகழும், நாவின்மலி - சொல்லாற்றலில் மிக்க, புலவர் - அறிஞர், திவம் - மேல் உலகம், சீர்த்த - புகழுடைய, கவருவார் - வஞ்சனையில் வெளவுவார்.

## 63. திருமெய்யம்

மெய்யப்பன் என்றபெயர் விண்டுவும் சங்கரனும்
வேண்டியே பூண்ட நகரம்
வேதியரும் வணிகரும் குடைவரைக் கோயிலுள்
மெய்ப்பொருளை யெய்து நகரம்.
வையப்பன் மாயமும் மனத்தைவிட் டோடவே
மக்கள்பயில் சொக்க நகரம்
வாதமிடு நெஞ்சினார் கோயிலருண் மாண்பிலே
மனமாறி வாழு நகரம்
நெய்யப்பன் என்பதோ பாலப்பன் என்பதோ
நேயமலி மூர்த்தி தனையே
நெஞ்சம்பு குந்துறையும் உருவாய நாயகனை
நேராத மனித ருளரோ
கையப்பன் வாயப்பன் கருணைப்பெ ருக்கினாற்
கண்டதிரு மெய்ய நகரே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: மெய்யப்பன் என்ற பெயரைத் திருமாலும் சிவபெருமானும் விம்பி ஏற்றுக்கொண்ட தலம்; மறையவரும் வணிகர்களும் மலையைக் குடைந்து அமைக்கப்பட்ட கோயிலினுள் உகந்தருளியிருக்கும் இறைவனைத் தரிசிக்க வரும் தலம், இவ்வுலகில் நிகழும் பலவகைப்பட்ட வஞ்சனைகளும் மனத்தை

விட்டு ஓடுமாறு மக்கள் பழகுகின்ற அழகிய தலம். தத்தமக்குள் மாறுபாடு கொண்டு உரையாடும் மனத்தை உடையவர். திருக்கோயில் வழங்கும் மாட்சிமைப் பட்ட நற்பண்பினால் மனம் மாறி நட்புறவு கொண்டு வாழும் தலம்; இங்குள்ள பெருமானை நெய் போன்ற நேயம் மிக்க தலைவன் என்று கூறுவேமோ? பால் போன்ற தூய இனிய தலைவன் என்று கூறுவேமோ? தத்தம் நெஞ்சங்களி-னுள்ளே புகுந்து தங்கும் அழகிய இறைவனை ஏற்றுக் கொள்ளாத மனிதரினத்தாரும் உள்ளார்களோ? நம்முடைய கைகளின் கூப்புதலையும் வாயினால் அவனைத் தோத்திரம் செய்தலையும் தன் கருணைப் பெருக்கினால் நம்மிடத்தில் உண்டாக்கிய பெருமான் தனக்கு உகந்தருளியிருக்கும் தலமாகப் பொறுக்கி எடுத்துக்கொண்ட திருத்தலம் திருமெய்யமாகும்.

அ.பொ: மெய்யப்பன் - சத்தியமூர்த்தி, குடவரைக் கோயில்- மலையைக் குடைந்து உருவாக்கப்பட்ட கோயில், வையம் - உலகம், சொக்கம் - அழகு, அருள்மாண்பு- வழங்குகின்ற நற்பண்பு, நெய் - நேயம் கலந்த உறவு, பால் - தூய்மையும் இனிமையும், நேர்தல் - ஏற்றுக் கோடல், கையப்பன் - கைகளைக் கூப்பி வணங்கச் செய்யும் தலைவன், வாய் அப்பன் - வாய் தோத்திரம் செய்யச் செய்யும் தலைவன்.

## 64. கோகன்ன நாதன்

கங்கைநீர் செவியினாற் கொடுவந்து கயிலைநாதன்
கருத்தோடு பணிபூண் டதால்
கண்ணுதற் பெருமானை மெய்யன்பர் கோகன்ன
கருணைகாட் டாயென் பரே
மங்கைபாகன் துணைவி பெரியநா யகியினொடு
மங்களத் தீர்த்த முடனே
வருகங்கை நீர்பாய்ந்த கோகன்ன தீர்த்தமொடு
வாழ்திருத் தலமேத் துவோம்
சங்கையறு மறையவர்கள் சிவநிசியில் நணுகியே
தம்மையாண் டருள வேண்டும்
சக்தனாங் கோகன்ன மூர்த்தியும் மேற்கடற்
சார்பிலே கோயில் கொண்டார்
கங்கையறி யாதபேர் புயல்குளம் எய்தவே
காட்டுவது கோகன் னமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தலையிலணிந்திருக்கும் கங்கை நீரினைத் தன் காது வழியே கொண்டுவந்து கயிலை நாதனாகிய சிவபெருமான் செயற்பட்டதால் மெய் அடியார்கள் அந்நெற்றிக்கட் பெருமானை 'கோகன்னனே! எங்களிடம் கருணைக் காட்டுவாயாக' என்று வேண்டுகின்றனர். பார்வதிபாகனாகிய சிவபெருமான் தன் தேவியாகிய பெரியநாயகியோடு மங்கள தீர்த்தம், கங்கை நீர் பாய்ந்துள்ள கோகன்ன தீர்த்தம் என்ற இரண்டு தீர்த்தக் குளங்களையும் கொண்டு உகந்தருளியிருக்கும் அழகிய கோகன்னத் தலத்தைப் புகழ்ந்து வாழ்த்துவோம். வேதங்களில் ஐயப்பாடற்ற அந்தணர்கள் சிவராத்திரி நாள்களில் தம்மை ஆட்கொண்டு அருளுமாறு வேண்டும் ஆற்றலுடைய கோகன்ன மூர்த்தியாம் சிவபெருமான் மேல்கடலுக்கு அருகில் கோயில் கொண்டிருக்கும் தலம் இக்கோகன்னமாகும். கங்கையும் அறிய முடியாத பெருமையைக் கங்கை நீரைத் தம் காது வழியே செலுத்திச் சிவபெருமான் தூய்மைப் படுத்திய கோகன்ன தீர்த்தம் என்ற நீர் நிரம்பிய குளம் எய்துமாறு, அதன் பெருமையை இக் கோகன்னத் தலம் வெளிப்படுத்திக் கொண்டுள்ளது.

அ.பொ: கயிலைநாதன் - சிவபெருமான், பணிபூண்டது - தலையிலுள்ள கங்கை நீரைக் காது வழியே கொண்டு வந்து கலக்கச் செய்து, குளத்து நீரைத் தூய்மைப்படுத்தி அக்குளத்திற்குக் கோகன்ன தீர்த்தம் என்ற பெயர் வழங்கச் செய்தது, சிவநிசி- பட்ச சிவராத்திரி, மாத சிவராத்திரி, மாசி சிவராத்திரி என்பன, அசக்தன் - பேராற்றல் உடையவன், சங்கை - ஐயப்பாடு.

## 65. மல்லிகார்ச்சுன புரம்

பாதலக் கங்கையிடை நீராடி மெய்யன்பர்
பரம்பொருளை நாடி யேறும்
பரிவுள்ள மல்லிகார்ச் சுனபுரப் பெருமையைப்
பக்தரே பகர்தல் வேண்டும்
மீதலத் துள்ளவரு மேவாத பேரின்பம்
மெல்லியல் பிரம ராம்பிகை
வேண்டிவரு மன்பர்க்கு நல்கிய சிவதலம்
வேறில்லை யுலகத் திலே
காதலிற் சிவநாம மைந்தெழுத் தாலோது
கற்புடைய பெண்டிர் மக்கள்
கருணேச தவநேச காத்தருள் வென்னவே
கைதொழுவர் சிவநி சியிலே

காதமெத் துணையேனும் மதியாமல் வருமன்பர்
காண்பரிய பேறு முண்டோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பாதல கங்கை என்ற தீர்த்தத்தில் நீராடி உண்மையான அடியார்கள் பரம்பொருளான சிவபெருமானைத் தரிசிக்க மலைமீது ஏறும்படியான அன்புக்குரிய மல்லிகார்ச்சுனபுரத்தின் பெருமையை அடியார்களே எடுத்துக்கூறும் தகுதியுடையவர்கள். தேவர் உலகில் உள்ளவர்களும் அடைய முடியாத பேரின்பத்தை மெல்லியல் இறைவியாகிய பிரமராம்பிகை தன்னை நாடிவரும் அடியவர்களுக்கு விரும்பி வழங்கும் சிவதலம் இவ்வுலகில் வேறொன்றும் இல்லை எனலாம். அன்போடு சிவபெருமான் திருநாமங்களைத் திருவைந்-தெழுத்தோடு ஓதும் மெய்க்கல்வியுடைய மகளிரும் ஏனைய ஆடவரும் 'கருணையுடைய ஈசனே!, தவத்தை விரும்புபவனே! அடியேங்களைக் காத்தருள்க' என்று சிவராத்திரியில் கைகளால் தொழுது வேண்டுவர். தன் இருப்பிடம் மல்லிகார்ச்சுனம் என்ற கோயிலை உடைய சீசைலம் மலையிலிருந்து எவ்வளவு தொலைவு இருந்தாலும் அத்தொலைவைப் பொருட்படுத்தாது வரும் அடியார்கள் காணமுடியாத செல்வங்களும் உண்டோ?

அ.பொ: மல்லிகார்ச்சுனபுரம் - சீசைலத் திருத்தலம், பாதல கங்கை - சீசைலத்தின் கீழே ஓடும் புண்ணிய நதியாம் கிருஷ்ணையாறு, மீதலம் - மேல் உலகம், பிரமராம்பிகை - வண்டு நிலையினளாகிய இறைவி, பிரமபுரம் - வண்டு, கற்பு - கல்வி, ஈசன் - மற்றவரை அடக்கி ஆள்பவன், காதம் - பத்துக்கல் தொலைவு, பேறு - செல்வம், அர்ச்சுனம் - மருதமரம், மல்லிகை- வெண்மை.

குறிப்பு: சிவபெருமான் வெண்ணிற இலிங்கமாகவும் தலவிருட்சம் மருதமரமாகவும் உள்ளமையால் மல்லிகார்ச்சுனம் என்ற பெயர் ஏற்பட்டது.

## 66. திருக்கேதார மகிமை

இமயமலை முடிமீது கங்கையங் கரையிலே
எழுந்தபல பதிக ளிடையே

ஏற்றமும் தோற்றமும் இயைந்தகே தாரத்தை
இனியதமிழ் வாக்கி னாலே
சமயமுடி நன்குணரு நாவினுக் கரசரே
சாற்றினார் ஆத லாலே
சம்புமலை முடிநின்ற காட்சியை மனக்கோயில்
தாபிக்க நாமு யல்வமே
தமரமெழு மறையினொலி விண்ணகத் தேறவே
சாந்தமன முனிவர் கணமும்
சத்துசித் தானந்த மகத்துளே தேடிவரு
சாதுக ணமும்கூ டவே
கமலமலர் பூத்துள்ள மலைமீது காண்கின்ற
காட்சியை விரிப்ப தெளிதோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: இமயமலையின் உச்சியில் கங்கை நதியின் அழகிய கரையிலே தோன்றிய பல திருத்தலங்களிடையே மேம்பாடும் வனப்பும் ஒருங்கே பொருந்திய திருக்கேதாரத்தை இனிய தமிழ்ப் பாசுரங்களால் சமயத்தின் முடிந்த பொருளை நன்றாக உணர்ந்த திருநாவுக்கரசர் பெருமானே குறிப்பிட்டுள்ளார். ஆதலாலே எல்லோருக்கும் நன்மை பயக்கும் சிவபெருமான் மலைமுடிவில் உகந்தருளியிருக்கும் தோற்றத்தை நம் மனக்கண்முன் உறுதியாக நிறுவுவதற்கு நாம் முயல்வோமாக. ஓசை மிக்க வேத கோஷம் தேவருலகிற்கும் செல்லுமாறு, அமைதியான உள்ளமுடைய முனிவர் கூட்டமும் உண்மை அறிவு ஆனந்தங்களைத் தம் மனத்துள்ளே தேடி வருகின்ற நன்மக்கள் கூட்டமும், ஒன்று சேர்ந்து தாமரை மலர் பூத்துள்ள அம்மலைமீது காணும் தோற்றத்தை விரித்துரைப்பது எளிய செயலாகுமோ?

அ.பொ: ஏற்றம் - மேம்பாடு, தோற்றம் - அழகுப்பொலிவு சமயமுடி - மதத்தின் முடிவான செய்தி, தாபித்தல்- நிறுவுதல், சாது - தக்கோர்.

குறிப்பு: நாவுக்கரசர் கயிலைக்குச் சென்றவர். ஆதலின், கேதாரத்தை அவர் தரிசித்திருத்தலும் பாடி-யிருத்தலும் கூடும். ஆனால் இக்காலத்து அவர் பாடிய பாடல் கிட்டவில்லை. கேதாரத்தைப் பற்றித் திருஞானசம்பந்தரும் சுந்தரரும் பாடிய பதிகங்களே கிட்டியுள்ளன. சம்பந்தர் தேவா. II 114, சுந்தரர் தேவா. VII - 78.

## 67. திருக்கயிலாயச் சிறப்பு

மானத சரோவரத் தானந்த மயமான
மனமோடு நீரா டியே
மறைதேடு செல்வமே பொறைநாடும் வள்ளலே
வளையவரும் நியம முடையேம்
தானதரு மங்களோ தவத்துநிய மங்களோ
சார்ந்திலே மாயி னாலும்
சரணாக தர்க்கருளும் நியதியிற் பெரியனைச்
சார்பெனக் கண்ட ணுகுவோம்
பேணுமொரு நீர்நிலையில் வருகுளிர் பொறுக்கவே
பிறங்கும்வெந் நீரூற் றுளதாய்
பேதையேம் ஆயினும் அப்பரே தேடிவரும்
பெருநிலம் தேடி வந்தேம்
கானனத் திடைவந்து கயிலாய நாதனைக்
காண்பதே துணிவென் பரே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: மானசசரோவர் என்னும் வெப்ப நீரூற்றைக் கொண்ட ஏரியில் மகிழ்ச்சி மிக்க மனத்தோடு நீராடிய பின், 'வேதங்கள் தேடும் செல்வமே! பொறுமையை விரும்பி மேற்கொள்ளும் வள்ளலே' என்று இறைவனை விளித்த வண்ணம் அவன் உகந்தருளியிருக்கும் கயிலாய மலையை வலமாகச் சுற்றி வரும் மரபினைப் பின்பற்றும் நாம், தான தருமங்களைச் செய்யாதே மாயினும் தத்துவ முறைமைகளை அறியாதேம் ஆயினும் தன்னைப் புகலாகப் பற்றின அடியவர்களுக்கு அருள் செய்யும் முறைமையில் மேம்பட்ட சிவபெருமானை நமக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு தரிசிக்க நெருங்குவோம். அங்கு நீராட விரும்பும் நீர் நிலையாகிய மானசசரோவரில் வளருகின்ற குளிரைப் பொறுத்து நீராடும் வகையில் வெந்நீர் ஊற்று அவ்வேரியினுள் இருப்பதால் அதன் நீர் மிக்க குளிர்ச்சியாய் இராமல் நீராட ஏற்றதாய் உள்ளது. யாங்கள் ஒன்றும் அறியாதேம் ஆயினும் திருநாவுக்கரசர் பெருமானே தேடிவந்த அப்பெரு நிலப்பரப்பை யாங்களும் தேடிவந்தேம். காட்டு வழிகளைக் கடந்து மலை வழியே வந்து கயிலாய நாதனைத் தரிசிப்பதே ஒரு துணிவான செயல் என்று அனுபவமுடையோர் கூறுவர். - இப்பாடல் திருக்கயிலை யாத்திரையை மேற்கொண்ட அடியவர் ஒருவர் கூற்றாக அமைந்துள்ளது.

அ.பொ: மானச சரோவர் - கயிலையை அடுத்துள்ள, வெப்ப நீரூற்றுள்ள அழகிய ஏரி, வளையவருதல்- வலமாகச் சுற்றி வருதல், கயிலை மலையே இறைவனுடைய வடிவம், சரணாகதர் - அடைக்கலம் என்று வந்தடைந்தவர்.

## 68. கதிர்காமச் சிறப்பு

ஈழநாட் டிடையான்ற சிவதல மிருப்பினும்
எழில்முரு கன்ஆனந் தமாய்
ஏற்றருளு மாலயப் பெருமையினை அடியனேன்
இதயமே யுருகி யோதும்
சோழநாட் டிடையிலே பாண்டிநாட் டிடையிலே
தொல்புகழ்ச் சேர நாட்டில்
தோன்றுபல குன்றமுறை முருகனே கதிரகாமம்
அடரவே காதல் கொண்டான்
ஆழநாட் டியகடலி லங்கையி னகக் கோயில்
அதுவென்று போற்று கின்றோம்
ஆறுமுக மூர்த்தியோ ஏகமுக மூர்த்தியோ
ஆய்ந்துதேர்ந் தவரில் லையே
காழநாட் டத்தினார் காணாத காட்சியாய்க்
கதிர்காம முருக னருளும்
காசினியை வாழ்விக்கக வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: ஈழநாட்டிடையே புகழ் நிறைந்த சிவத்தலங்கள் இருந்தாலும் அழகு மிக்க முருகன் மகிழ்வோடு உகந்தருளியிருக்கும் ஆலயத்தின் பெருமையை, அடியேனுடைய மனம் உருகிக் கூறிக் கொண்டிருக்-கிறது. சோழநாடு, பாண்டிய நாடு, பழய புகழுடைய சேரநாடு இவற்றில் காணப்படும் பல குன்றுகளில் உறைகின்ற முருகப்பெருமானே, ஈழநாட்டுக் கதிர்காமத்தில் அணுகிவந்து கோயில் கொள்ளும் விருப்பம் கொண்டுள்ளான். ஆழமாகக் கடல் நாற்புறமும் சூழ்ந்து கூத்து நிகழ்த்தும் இலங்கையின் உட்புறத்துள்ள, முருகன் கோயில் கொண்ட திருத்தலம் அது என்று அதனைப் புகழ்ந்து வழிபடுகின்றோம். அங்குள்ள பெருமான் ஆறுமுக வடிவினனோ ஒற்றை முக வடிவினனோ என்று அவனைப் பற்றி ஆராய்ந்து தேர்ந்தவர் நம்மிடையே இல்லை. பொறாமை முதலிய தீய பண்புகளை உடையார் காணமுடியாத தோற்றத் தவனாய்க் கதிர்காம முருகன் நல்லவர்க்கே அருள் புரிபவன் ஆவான்.

அ.பொ: அடர - நெருக்கமாக, நாட்டியக்கடல் - அலைகள் கூத்தாடும் கடல், இறையவன் அடியவர் விருப்பப் படி ஆறு முகங்களுடனோ, ஒற்றை முகத்துடனோ தன் உருவத்தை வெளிப்படுத்துவான், காழ நாட்டத்தவர் - பொறாமை முதலியவற்றால் இளகுதல் இன்றி உறுதியான இரக்கமற்ற உள்ளம் உடையவர் கரிய உள்ளத்தவர் என்பதும் ஆம்.

## 69. திருக்கேதீச்சுரம்

கோள்கள்பூ சித்ததலம் சோணாட்டி லுண்டுகாண்
குமரனே பூசித் ததும்
குறைவற்ற பெருமையொடு சேய்ஞலூ ராகவே
குலவுவது தமிழ கத்தே
நாள்கள்வழி பட்டதலம் உள்ளதோ இல்லையோ
நன்கறி கிலோம்அ ருமையே
நலமிகு மிலங்கையிடை கேதுபூ சித்ததால்
நன்குவளர் கேதீச் சுரம்
வாள்கள்தொடு வீரரும் ஏர்கள்தொடு முழவரும்
மன்னவரும் முளமு ருகியே
வாழ்த்தவும் போற்றவும் வழுத்தவும் தக்கதாய்
மருவும்வர லாற றிவமே
கேள்விமதி நனிகாட்டி வருதலால் ஈசன்முன்
கருத்தோடு கூறி நிற்பார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: கிரக தேவதைகள் சிவபெருமானைப் பூசனை செய்த தலங்கள் சோழநாட்டில் பல உள. முருகப்பெருமானே சிவபெருமானைப் பூசித்த தவம் குறைவற்ற பெருமையோடு சேய்ஞலூர் என்ற பெயரில் தமிழ் நாட்டில் விளங்கிக்கொண்டிருக்கிறது. நட்சத்திர தேவதைகள் சிவபெருமானை வழிபட்ட திருத் தலங்கள் நம் நாட்டில் உள்ளனவோ இல்லனவோ என்பதனை நன்கு நாம் அறியமாட்டோம். அருமையாக ஒருசில இருக்கலாம். நன்மைகள் மிக்க ஈழநாட்டில் கேது பூசித்ததால் நல்வினைகளை வளரச் செய்யும் கேதீச்சுரம், வாள்களைப் பயன்-படுத்தும் வீரர்களும் ஏர்களைப் பயன்படுத்தும் உழவரும் மன்னர்களும் மனம் உருகி வாழ்த்தவும் வேண்டவும் புகழவும் தக்கதாய் விளங்கும் வரலாற்றை நாம் நன்கு அறிவோம். சான்றோர் உபதேசங்களை ஏற்ற அறிவு நன்கு வழிகாட்டி வருவதால் அடியார்கள் இத்தலத்தில் சிவபெருமான்

திருமுன்னர் உள்ளத்தோடு தம் தேவைகளை நிறைவேற்ற வேண்டும் என்ற வேண்டுகோளைக் கூறி நிற்பார்கள். 'கேள்விமதி நனிகாட்டி' - என்பது திருத்தப்பட்ட பாடம்.

அ.பொ: கோள்கள் - ஒன்பது கிரக தேவதைகள், நாள்கள்- நட்சத்திரத் தேவதைகள், கேது+ஈச்சுரம்- கேதீச்சுரம் -கேது வழிபட்ட கோயில், போற்றுதல்-வேண்டுதல், வழுத்துதல் - புகழ்தல், கேள்வி - சான்றோரிடம் பெறும் உபதேசம், நனிகாட்டி வருதலால் நன்கு வழிகாட்டி வரும் காரணத்தால்.

## 70. இமயமலை

இமயமலை யொப்பதொரு மலைத்தொட ருலகத்தில்
எந்நாட்ட கத்து மிலையே
இத்தகைய பருவதம் வடதிசைப் பேரரண்
எனத்தக்க மாண்புள் ளதே
இமமிகுந் தெஞ்ஞான்று மனிதர்வர லரிதாக
இம்மலை யிருந்த தேனும்
இழிகின்ற ஆறுபல நன்னீரை நாடெலாம்
ஈயவே செய்வ தெனலாம்
சமயமுடி தேறவே தவம்புரியு முனிவரர்
சாந்தமன மிக்க பெரியோர்
தமக்குரிய பேறுபெற இமயமுடி மீது செலல்
தவப்பேறெ னக்க ருதுவார்
கமமுகில் மிகுந்தோங்கு காட்சியொடு பனிவளர்
கலைக்காட்சி மிக்க திதுவே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: இமயமலைக்கு ஒப்பாகியதொரு மலைத்தொடர் இவ்வுலகில் வேறு எந்த நாட்டிலும் இல்லை. இத்தகைய மலை நம் பாரததேசத்துக்கு வட திசையில் பெரிய மதில் என்று கூறத்தக்க பெருமை-யுடையது. பனி மிகுந்து எப்பொழுதும் மனிதர் வடக்கிலிருந்து இம்மலையைக் கடந்து தெற்கு நோக்கி வருதல் இயலாததாக இம்மலை இருந்த போதிலும், இம்மலையில் தோன்றிச் சமவெளியை நோக்கி இறங்கி வருகின்ற ஆறுகள் பல, நல்ல நீரை நாடுகளுக்கெல்லாம் வழங்குமாறு இம்மலை செய்கிறது. சமயங்களின் முடிந்த முடிவை உணர்வ-தற்குத் தவம் புரியும் முனிவர்களும், அமைதியுற்ற மனத்தினால் மேம்பட்ட பெரியோரும் தாம் தாம்

விழைந்த நன்மைகளைப் பெற இமயத்தின் உச்சியை நோக்கிச் செல்லுதலைத் தம் தவத்தின் பயன் என்று கருதுவார்கள். இம்மலை நீர் நிறைந்த மேகங்கள் மிகுதியாக உயர்ந்து காணப்படும் தோற்றத்தோடு பனி பல வடிவங்களில் படிந்து ஓங்கிக் காணப்படும் கலைத் தோற்றங்களும் மிகுதியாகக் கொண்டு விளங்குகிறது.

அ.பொ: பருவதம் - மலை, அரண் - பாதுகாவலான மதில் இமம் - பனி, இழிதல் - மேட்டிலிருந்து இறங்கி வருதல், இமயமுடி - பனிமலையின் உச்சி, கமம் - (நீர்) நிறைவு. "கமம் நிறைந்தியலும்" (தொல். சொல். உரி. 355). கலைக்காட்சி - கலைநயம் தோன்ற விளங்கும் தோற்றம்.

## 71. விந்திய மலை

பாரதப் பெருநாடு வடநாடு வேறாய்ப்
பயின்றுதென் நாடு வேறாய்ப்
பயிரிலும் பொருளிலும் வேறுபா டெய்தவே
படர்ந்தவிந் தியம லையினைச்
சாரதத் துவமுண்டு மறிவுளார் பாரதத்
தலம்வாழு மிடைநி லத்தே
தானேயெ ழுந்ததொரு சுவராக வெண்ணுவது
சரித்திரம் தந்த பொருளே
மாரதத் தீரரொடு மதிரதரும் மேனையரும்
வடநாட்டில் மிக்க தறிவோம்
மற்றவர்கள் தென்னாடு வந்தவர லாறுண்டு
மாதவக் கும்ப முனிவர்
காரதர்க் கிடைவந்து காட்டினார் என்றகதை
காதுறக் கேட்டு ளோமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பாரதப் பெருந்தேயத்தில் வடநாடு வேறாகவும் தென்னாடு வேறாகவும் அமைந்து, ஆங்காங்குப் பயிர் செய்யும் பயிர்களிலும் காணப்படும் இயற்கை-யமைப்புப் பொருள்களிலும், வேறுபாடடையுமாறு பாரத தேயத்தில் நடுவில் பரவி அமைந்துள்ள விந்தியமலையினைக் கடந்து செல்ல உண்மை வழிகள் உண்டு என்றாலும் அறிவுடைய சான்றோர்கள் பாரததேயத்தின் இடைப்பகுதியில் இயற்கையாக எழுந்துள்ளதொரு சுவராகவே, விந்தியமலையைக் கருதுவது வரலாறு குறிப்பிடும்

பொருளாகும். மகாரதர் என்ற வீரர்களோடு அதிரதரும் ஏனைய சமரத அர்த்தரதர்களும் வடநாட்டில் மிகுதியாக இருந்தனர் என்பதனை பாரத இதிகாசத்தால் அறிகிறோம். அந்த வீரர்கள் தென்னாடு நோக்கி வந்த வரலாறும் உண்டு. மேம்பட்ட தவத்தை உடைய அகத்திய முனிவர் கரிய வழிகளுக்கிடையே விந்தியமலையைக் கடந்து தென்னாடு வந்து அவ்வாறு வருதற்கு வழிகாட்டி-னார் என்ற கதையையும் செவிமடுத்துள்ளோம்.

அ.பொ: பயிர் - பயிரிடப்படும் தானியங்கள், பொருள் - இயற்கையில் அமைந்த செல்வங்கள், சார - அணுகி வந்து கடக்க, தத்துவம் - உண்மைச் சூழ்நிலை, அதிரதர்-முதல் தரத்து வீரர், மாரதர்-இரண்டாம் தரத்து வீரர், சமரதர் - மூன்றாம் தரத்து வீரர், அர்த்த ரதர் - நான்காம் தரத்து வீரர், கார் அதர்-கடுமையான இருண்ட வழி.

## 72. ஆனைமலை

ஆனைமலை பாண்டியர் திருநாட்டி னருகிலே
அழகுமிக இன்று முளதே
அமணர்குல மம்மலையின் அடிவார மெங்குமே
அந்நாளில் வாழ்ந்த துளதே
தானைவலி மிக்கபாண் டியமன்னர் அமணராற்
சைவமும றந்தி ருந்தார்
தருகரக் கூன்பாண்டி யன்றனைப் பற்றுநோய்
சமணரால் ஒழியா மையால்
மானைநிகர் விழியுடைய மங்கையர்க் கரசியார்
வருவித்த சம்பந் தரே
மன்னனோய் போக்கியே சைவநிலை நிறுவினார்
வருபதிக மொன்றி லவரே
கானையுள மலைவாழு மமணர்கள் வரலாறு
கவிதையாற் கட்டு ரைத்தார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: ஆனைமலை பாண்டியர்களுடைய அழகிய நாட்டின் அருகிலே அழகுமிக்க தோற்றத்தோடு இன்றும் காணப்படுகின்றது. சமண மதச் சான்றோர்கள் அம் மலையின் அடிவாரம் எங்கும் அக்காலத்தில் (ஞானசம்பந்தர் காலத்தில்) வாழ்ந்தனர் என அறிகிறோம். படை வலிமை மிக்க பாண்டிய மன்னர்கள் சமணர்களுடைய ஆதிக்கத்தால் சைவ

சமயத்தை மறந்து ஞானசம்பந்தர் காலத்தில் சமணமதச் சார்புடையவர்களாக இருந்தனர். கற்பகமரம் போலக் கொடை வழங்கும் கைகளை உடைய பாண்டியனைப் பற்றிய காய்ச்சல் நோய் சமணர்களால் தீர்க்கப்பட முடியாமையால் மான் போன்ற பார்வையை உடைய அரசமா தேவியாகிய மங்கையர்க்கரசியால் அழைத்து வரப்பட்ட திருஞானசம்பந்தரே அரசனுக்கு ஏற்பட்ட காய்ச்சல் நோயைப் போக்கி, அந்நாட்டில் சைவசமயத்தை நிலை நிறுத்தினார். தாம் பாடியருளிய பதிகங்களுள் ஒன்றில் காடுகளை உடைய அந்த ஆனைமலையில் வாழும் அமணர்கள் வரலாற்றை, 'ஆனைமாமலை ஆதியாய இடங்களுள் பல அல்லல்சேர் ஈனர்' (சம்.தேவா. 3211) என்று குறிப்பிட்டுள்ளார்.

அ.பொ: அமணர் - சமணர், ஆடையற்றவர், தானை - காலாட்படை, தரு - கற்பகமரம், கானை உடைய - காடுகளைக் கொண்டுள்ள.

## 73. நார்த்தா மலை

நாரத்தம லையென்று மக்கள்புகல் குன்றத்தில்
நாகரிக வரலா றுள
நற்பெரும் பாறையில் அமணர்வாழ் குகைகளுள்
நரபதிகள் அன்று வாழ்ந்தார்
ஈரத்த மனமுள்ள சோழர்குல மன்னவர்
இயற்றுசி வன்கோ யிலுண்டு
இன்றளவு நன்றமையு மெழில்பொங்கு சிற்பமும்
எதிர்நின்று வரவேற் குமே
பாரத்தை நீக்கவரு சதாசிவப் பெருமுனிவர்
பண்டைநாள் ஈங்க டைந்தார்
பாவலரு நாவலரும் மாரியம்மன் பெருமை
பாடிப்பு கழ்ந்த துளதே
காரத்தை வென்றமன முனிவரரும் ஞானியரும்
கண்டமாண் புள்ள திதுவே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: நார்த்தாமலை என்று மக்கள் அழைக்கின்ற குன்றத்தை அடுத்த நகரத்தின் வரலாறுகளாகப் பல செய்திகள் உள. சமணர்கள் வாழ்ந்த குகைகளை உடைய அம் மலையின் மிகப்பெரிய பாறைகளில் அங்கு வாழ்ந்த

அரசர்களாகிய இரக்க குணமுடைய சோழர்குல மன்னர்கள் எடுப்பித்த சிவன்கோயில் உள்ளது. அக் கோயிலில் இன்றுவரை பண்டை வனப்புக் குறையாமல் அமைக்கப்பட்ட அழகு பொங்கும் சிற்பங்கள் நம் கண் எதிரே காட்சி வழங்கி நம்மை வரவேற்கின்றன. உலகப்பற்றுக்களாகிய சுமையைப் போக்குவதற்கு நாடுதோறும் சஞ்சாரம் செய்து வந்த சதாசிவ பிர்மேந்திரர் ஆகிய பெரிய முனிவர் தாம் வாழ்ந்த அப்பழங்காலத்தில் நார்த்தா மலைக்கும் வந்ததாக அறிகிறோம். இங்குள்ள மாரியம்மனைப் பாக்கள் இயற்றுவதில் வல்ல கவிஞர்களும் சொல்வன்மைமிக்க அறிஞர்களும் அவள் பெருமை தோன்ற பாடியும் புகழ்ந்தும் உள்ளனர். கோபத்தை வென்ற மனத்தை உடைய முனிவர்களும் ஞானிகளும் தரிசனம் செய்த பெருமையை உடையது நார்த்தா மலையாகும்.

அ.பொ: நாரத்தமலை-நார்த்தாமலை, புகல்-குறிப்பிடுகின்ற, நாகரிகம் - நகரத் தொடர்பு உடையது, நரபதிகள்- அரசர், ஈரத்தமனம் - இரக்க குணமுடைய உள்ளம், பாரம் - உலகப் பற்றால் ஏற்படும் மனத்துச் சுமை, காரம் - வெகுளி.

## 74. குடுமியான் மலை

குடுமியான் என்ற பெயர் கொண்ட சிவன் வாழ்வுபெறு
குன்றமொன் றுண்டு புதுமை
கொழிக்கின்ற தொண்டைமா நாட்டிலே மற்றதனின்
கோச்சரித மறிதல் நன்றாம்
குடுமியே யறியாத சிவலிங்க முடிமீது
குடுமிவளர் கதை யுள்ளதே
கொற்றவன் மனமகிழ இத்தகு மருட்காட்சி
கொன்றைவேந் தன்கொ டுத்தான்
குடுமியான் மலையிலே யாழ்நெறி விளக்கவொரு
குறிப்பிட்ட சிலையெ ழுத்தும்
கோயிலிடை மன்னவர்கள் முடிசூடு மண்டபக்
கோலமும் காணு கின்றோம்
கடுமையா மாதவம் வேட்டவரும் இம்மலைக்
கடவுளைக் காண வருவார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: புதுமைச் செல்வம் கொழிக்கின்றதாய், தொண்டைமான் என்ற குறுநில மன்னர் ஆட்சி செய்த புதுக்கோட்டைப் பகுதியிலே சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திருக்கோயிலை உடைய குடுமியான் மலை என்ற குன்றம் உள்ளது. அக்கோயிலின் மேம்பட்ட வரலாற்றை அறிதல்

நல்ல செயலாகும். குடுமி என்பதனையே அறியாது மழமழப்பாக இருக்கும் இலிங்கத்தின் உருத்திர பாகத்தின் உச்சிப்பகுதி மீது குடுமி வளர்ந்துள்ள-தாக ஒரு வரலாறு உள்ளது. அரசர் கண்டு வியக்குமாறு இத்தகைய மயக்கந்தரும் தோற்றத்தைக் கொன்றை மலரை அணிந்த சிவபெருமான் அவன் கண் காண வழங்கினான். குடுமியான் மலையிலே இசையின் நெறி முறையை விளக்க ஒரு குறிப்பிட்ட கல்லிலே வெட்டப்பட்ட இசை பற்றிய கல்வெட்டு ஒன்று உள்ளது. அங்குள்ள கோயிலிலே உள்ள மண்டபத்திலே அரசர்கள் முடிசூடும் காட்சி பற்றிய சிற்பத்தைக் காண்கிறோம். கடுமையான பெருந்தவத்தை விரும்பி மேற்கொண்ட முனிவர்களும் இம்மலை-யிலுள்ள இறைவனாகிய சிகாகிரீசுவரன் என்னும் குடுமியானைத் தரிசிக்க வருவார்கள்.

அ.பொ: தொண்டைமான் - புதுக்கோட்டை மன்னர் மரபு,
தொண்டைமான் நாடு - புதுக்கோட்டைப் பகுதி,
மருட்காட்சி - மயக்கம் தரும் தோற்றம்,
யாழ்நெறி - இசைத்துறை.

## 75. அண்ணல் வாயில்

அண்ணல்திரு வாயிலாம் பெயர்பூணு நகரினுக்
கதிகமாய்ப் புகழ்த ருவதும்
அருகிலுள சிற்றன்ன வாசலாங் குன்றமென்று
அறிவுடையார் கூறு கின்றார்
அண்ணல்வா யிலின்றுஞ் சமணர்சிலை யுள்ளதே
அதனைநாம் நோக்கி யேபினர்
அருகுள்ள சிற்றன்ன வாயிலகம் ஆடுகதிர்
அடங்குநிலை காணல் வேண்டும்
திண்ணமுறு நெஞ்சமொடு சல்லேக னம்செய்த
தீரர்பலர் ஆங்கி ருந்தார்
செந்தமிழ்உ லோச்சமொழி இச்செயல் விளக்குமே
தெளிஞர்தரு பொருளின் னதே
கண்ணழகு மலிகின்ற ஓவியக் கலையையும்
காண்கிறோம் கற்பா றைமேல்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அண்ணல் வாயில் என்ற பெயரினை உடைய ஊருக்கு மிகுதியான புகழைத் தருவது அவ்வூரின் அருகிலுள்ள சிற்றன்ன வாயில் குன்றே என்று சான்றோர் கூறுகின்றனர். அண்ணல் வாயிலில் இன்றும் சமணர் சிலைகள் காணப்படுகின்றன. அச்சிலைகளை நோக்கிய பின்னர்ச் சிற்றன்ன

வாயில் குகையில் உள்ள ஓவியச் சிறப்பை மாலை நேரக் கதிரவன் மஞ்சள் ஒளி அக்குகையினுள் பரவி ஒளிவிடும் நேரத்தில் காணவேண்டும். உறுதியான உள்ளத்தோடு சல்லேகனம் செய்த சமணச் சான்-றோர் பலர் ஆங்கு இருந்தனர். இச்செய்தியைக் கல்வெட்டுக்களிலும் செப்புத் தகடுகளிலுமுள்ள செந்தமிழ் மொழி விளக்குகின்றது. அம்மொழிகளில் தெளிந்த அறிவுடைய சான்றோர்கள் இச் செய்தியை விளக்கிக் கூறுகின்றார்கள். இக்கற்பாறை களின்மேல் தீட்டப்பட்ட, கண்களுக்கு மிகுந்த அழகை வெளிப்படுத்துகின்ற ஓவியக் கலையையும் காண்கிறோம்.

அ.பொ: <u>சல்லேகனம்</u> - ஆர்த்த ரௌத்ர த்யானங்களையும் குரோதம் முதலிய பரிணாமங்களையும் புறப்பற்றுக் களையும் உணவையும் துறந்து தர்மத்யானத்தோடு இறப்பது. அஃதாவது தர்மத்தின் பொருட்டு அநசனாதி பாஹ்ய தபஸ்ஸுகளால் சரீரத்தை க்ருசம் செய்து விடுதல். ஆர்த்த த்யானம்- தனக்கு விருப்பமான பொருள் அழிந்துவிடின் அவை மறுபடியும் எப்படி வரும் என்று சிந்தித்தல், தனக்கு விருப்பமில்லாத பொருள் கிட்டின் அஃது எப்பொழுது அழிந்துபடும் என்று சிந்தித்தல் முதலியன. ரௌத்ராயனம் - கெட்ட ஆசையினால் உண்டாகும் சிந்தனை. அது அடுத்த பிறப்பில் நரகதி, விலங்கு கதிகளுக்குக் காரணமாக இருப்பது. செந்தமிழ் உலோச்ச மொழி - கல்வெட்டுக்களிலும் செப்புத் தகடுகளிலும் பொறிக்கப்பட்ட பேச்சு வழக்குத் தமிழ்மொழி என்பது போலும்.

## 76. திருவானைக்கா

காவிரிக் குளிர்கரையி லரங்கத்தி னருகிலே
கண்ணுதல் திருக்கோ யிலாய்க்
கற்பனை கடந்த செயல் அகிலாண்ட நாயகி
காத்துவழி பாடேற் றருள்
தூவிரி சம்புலிங் கேசுவரன் வெண்ணாவல்
சொரிநிழற் கோயில் கொண்டான்
சொல்லுக்க டங்காச்சி றப்புள்ள தேவி
சொற்செல்வம் நன்க ருளியே
நாவிரி புலவர்களை யுலகினுக் கீந்தருளும்
நற்பணி பொருந்தி யுள்ளாள்
ஞானசம் பந்தரும் நாவினுக் கரசரும்
நாவலூர் நம்பி பாடும்

காவிரிக் கரையிலே களிறுதிரி காவினைக்
கருத்தினு ருகிப்பு கழ்ந்தார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காவிரியின் குளிர்ந்த வடகரையிலே திருவரங்கத்தின் அருகிலே சிவபெருமான் உகந்தருளியிருக்கும் திருக்கோயில் அமைந்திருக்கும் திருத்தலம் திருவானைக்கா. இங்கு நம் கற்பனைகளையும் கடந்து அப்பாற்பட்ட செயல்களைப் புரியும் அகிலாண்ட நாயகி என்ற அம்பிகையோடு அடியார்களைப் பாதுகாத்து அவர்களுடைய வழிபாடுகளை ஏற்றருளும் பற்றுக்கோடாக மேம்பட்டுள்ள சம்புலிங்கேசுவரன், வெண்ணாவல் மரம் வழங்கும் நிழலின் கீழ்க் கோயில் கொண்டருளியுள்ளான். ஆதலின் இத்தலம் சொற்களைக் கடந்த சிறப்புடையதே. அம்பிகை செய்யுளியற்றும் ஆற்றலும் பேச்சாற்றலும் மிகவும் வழங்கி நாவினால் செய்திகளை விரித்துரைக்கும் புலவர்களை உலகுக்கு வழங்கியருளும் நல்ல செயலில் ஈடுபட்டுள்ளாள். புலவர்கள் பாடும் சிறப்புடைய காவிரிக் கரையிலே யானைகள் திரியும் சோலைகளை உடைய திரு ஆனைக் காவினை மனமுருகித் தேவார முதலிகள் மூவரும் புகழ்ந்து பாடியுள்ளனர்.

அ.பொ: கண்ணுதல் - நெற்றிக் கண்ணுடைய சிவபெருமான் அகிலாண்டநாயகி - இறைவி. இறைவியோடு என்ற மூன்றன் உருபு தொக்கது, தூ - பற்றுக்கோடு - அடைக்கலம் தருதல், சம்பு - நாவல் மரம், தேவார மூவர் - திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நாவலூரராம் சுந்தரமூர்த்தி என்ற மூவர்.

## 77. திருக்காளத்தி

நாளத்தின் மேலெழுந் தாமரையில் வாழ்மகளிர்
நாடோறும் போற்றும் பதமாக
ஞானமலி பூங்கோதை தழுவுதோ ளுள்ளசிவ
நாயகன் குடுமித் தேவன்
ஆளத்தி போலவெழும் வேடரொடு மான்வேட்டை
யாடவரு திண்ண னார்தாம்
அம்பகம் இரண்டையும் தந்துவழி படநினைய
அருள்விளக் கியதெய் வதம்
நீளத்தி தந்தவிட முண்டுகள மீதுநிலை
நிற்கவே வைத்த வள்ளல்

நிறைவாயு வுருவமாய்க் கோயில்கொண் டருளியே
நிலமெலாம் காக்கு மிறைவன்
காளத்தி நாதனது புண்ணியத லத்தையும்
காணாத வாழ்வும் வாழ்வோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தண்டுகளின்மேல் தோன்றும் செந்தாமரை வெண்டாமரை இவற்றில் வீற்றிருக்கும் திருமகளும் கலைமகளும் நாள்தோறும் தன் திருவடிகளைப் போற்றி வழிபடும் வகையில் உள்ள ஞானப்பூங்கோதை என்ற அம்பிகை தழுவுகின்ற திருத்தோள்களை உடைய தலைவனாம் குடுமித்தேவன் என்ற பெயருடைய சிவபெருமான், நீண்ட கடல் வெளிப்படுத்திய ஆலகால விடத்தை உண்டு உட்புகாமல் தன் கழுத்திலேயே நிலையாகத் தங்குமாறு வைத்த நீலகண்ட வள்ளலாய், நிறைந்த காற்று வடிவமாய்த் திருக்கோயிலில் உகந்தருளி உலகமெல்லாம் காக்கின்ற இறைவனாய்க் காளத்தி நாதனாகக் காட்சி வழங்குகின்றான். இராகத்தை விரித்துப் பாடுதல் போலத் தொடர்ந்து புறப்பட்ட வேடர்களோடு மான் வேட்டையாட வந்த திண்ணனார் தம் கண்கள் இரண்டனையும் ஒன்றன் பின் ஒன்றாக அப் பெருமானுக்கு வழங்கி வழிபாடு செய்ய நினைக்கும் பக்குவத்தைப் பெறுமாறு தம் அருளை விளக்கிக் காட்டிய அக்காளத்திப் பெருமானுடைய புண்ணியத் தலமாகிய காளத்தியைத் தரிசிக்காத வாழ்வு நல்வாழ்வு ஆகுமோ?

அ.பொ: நாளம் - தண்டு,மகளிர் - திருமகளும் நாமகளும், ஞானப் பூங்கோதை - அம்பிகை, குடுமித்தேவன் - காளத்தி மலைமீது உகந்தருளியிருக்கும் இறைவன் அம்பகம் - கண், அத்தி - கடல், ஆளத்தை - இராகத்தை விளித்துப் பாடுதல், நிலத்தலம்- திருவாரூர், நீர்த்தலம் - திருவானைக்கா, தீத்தலம்- திருவண்ணாமலை, வாயுத்தலம் - திருக்காளத்தி, ஆகாயத்தலம் - சிதம்பரம் என்ப.

## 78. மச்சாவதார மூர்த்தி

ஏற்றமிகு பெருநிலை யிருப்பவர் இறங்குவதை
இதயம்பொ றுப்ப துண்டோ
எவ்வுயிரு மெவ்வுலகும் இன்புறுதல் திருவுள்ளம்
ஏற்றதனை யுலக றியவே

கூற்றம்விளை யாடுநில வுலகிலே பலமுறைகள்
கொண்டடைந் தாய்ப்பி றப்பே
குணங்கள் வழிபடு தேவதேவனே பரமபத
கோயிலினி ழிந்து மண்ணில்
நாற்றமிகு வாழ்வுபெறு நாயேமை நோக்கவே
நண்ணினாய் மச்ச வுருவாய்
நாலாயி ரம்கோடி குஞ்சுகளை நோக்கினால்
நன்கூட்டு தாயா யினாய்
காற்றலையு முலகெலாம் காக்கவே வந்தநின்
கருணையினை எவர றிவரே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: மிக மேம்பட்ட உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் அவ்வுயர் நிலையிலிருந்து கீழே இறங்கி வருவதைக் காண எவர் மனமும் சகியாது. எல்லா உயிர்களும் எல்லா உலகங்களும் இன்பமாக வாழ்வதனையே திருவுள்ளத்துக் கொண்டு அதனை உலகம் அறிவதற்காக, கூற்றுவன் ஆகும் காலன் உடல்களி-லிருந்து உயிரைப் பிரித்து விளையாடும் இந்த நிலவுலகிலே, பலமுறைகள் பிறப்புக்களை எடுத்து நற்குணங்கள் பலவும் தன்னை வழிபட்டுத் தன்னிடம் வந்து சேருமாறு செயற்பட்ட தேவ தேவனே! வைகுந்தமாகிய இருப்பிடத்திலிருந்து இறங்கி வந்து, இந்நிலவுலகில் தோன்றுதல் மிக்க வாழ்க்கையை மேற்கொண்ட நாய் போன்ற கீழ்ப் பட்ட எங்களை அருட்பார்வையால் காக்கவே மீன் அவதாரமாக இவ்வுலகினை நீ அடைந்தாய். பலகோடி எண்ணிக்கை உடைய குஞ்சுகளைத் தன் பார்வையினாலேயே நன்கு வயிறு நிறையச் செய்யும் தாயாய் விளங்குகிறாய். காற்று இடைவிடாமல் வீசிக்கொண்டிருக்கும் இவ்வுலகத்தை எல்லாம் காப்பாற்றவே அவதாரம் எடுத்துவந்த உன் கருணையை யாவர் முழுமையாக அறிய வல்லார்-என்று திருமாலடியார் ஒருவர் அவர் மச்ச அவதார மகிமையை எடுத்துக்கூறும் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது.

அ.பொ: கூற்றம் - இயமன், பரமபதம் - வைகுந்தம், நாற்றம்- பிறவி, மச்சம் - மீன்.

குறிப்பு: மீனின் பார்வையாலேயே குஞ்சுகளுக்கு வயிறு நிரம்பும் என்று கூறுவது மரபு.

## 79. கூர்மாவதார மூர்த்தி

காசியபர் திதியதிதி கர்ப்பத்தில் வருவித்த
கணக்கிலாச் சுரர சுரரே
கடும்பகை யோடாகவத் தழிவுபெற நேர்ந்ததும்
கலைபா சத்தை வெலவே
தேசின்மிகு திருமாலி னருளோடு பாற்கடல்
சென்றுகடை நோக்கத் தினால்
திறமிக்க மத்துகடை கயிறென்று தேடியே
திருமந்தி ரம்வா சுகி
மாசின்ம னமொடுகடை பொழுதிலே மத்தினை
வலிமிகத் தாங்கு தற்கே
வந்ததிரு வவதாரம் ஆமையுரு வாகவே
வாய்த்தது பொருத்த மன்றோ
காசில்சுர ரமுதமுண வேண்டியே கரியமால்
கவினுமோ கினியு மானான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காசியப முனிவர் தம் பத்தினிமாருள் அதிதி கருப்பத்தில் பல தேவர்களையும், திதி என்பாள் கருப்பத்தில் பல அசுரர்களையும் தோற்றுவித்தார். அந்தச் சுரரும் அசுரரும் தம்முள் கடுமையான பகைமை உணர்வு பூண்டதனால் போர்க்களத்தில் இரு திறத்தாரும் அழிந்து போகும் நிலை ஏற்பட்டது. அதனால் இயமனுடைய கயிற்றினால் கட்டப்படுதல் நீக்குதற்காக ஞான ஒளிமிக்க திருமாலுடைய அருளோடு சென்று பாற்கடலைக் கடையும் நோக்கத்தோடு மேம்பாடு மிக்க மத்தாக மந்தர மலையையும் கடைகயிறாக வாசுகி என்ற பாம்பையும் தேடிக் கொணர்ந்து குற்றமற்ற மனத்தோடு பாற்கடலைக் கடையும்போது, மத்தாகிய மந்தரம் கடலுள் அழுந்தாதபடி மிக்க வலிமையுடன் அதனைத் தாங்கிக் கொள்வதற்காக எடுத்த பெருமானுடைய திரு அவதாரம் ஆமை அவதாரமாக அமைந்தது பொருத்தம் அன்றோ? அதற்குமேல் குற்றமற்ற தேவர்கள் மாத்திரம் அமுதம் உண்ண வேண்டும் என்பதனைத் திருவுள்ளம் பற்றி, எம்பெருமான் அமுதத்தைத் தேவர்களுக்கே பகிர்ந்து அளிக்க அழகு ஒழுகும் மோகினி வடிவத்தையும் எடுத்தான்.

அ.பொ: திதி - அசுரர்களின் தாய், அதிதி - தேவர்களின் தாய், ஆகவம் - போர், காலபாசம் - இயமனால் கட்டப்படுதல், தேசு - ஞான ஒளி, காசு - குற்றம் கவினும் - பேரழகுடைய.

## 80. வராகவதார மூர்த்தி

இரணியக் கண்ணனாம் அசுரபதி தமையனையும்
எண்ணாமல் உலகத் தையே
எடுத்தெறிய வெண்ணியது தேர்ந்ததிரு நாரணன்
எழுந்தருளி முன்வந் தனன்
முரணிய கொடியவன் கையகப் படுபூமி
முழுவதும் காக்க வென்றே
முறையாய்ப் போர்புரிய வெண்பன்றி யாகவே
முழங்குகட லிடைவந் தனன்
அரணியற் றியநிலம னைத்தையும் கடலிடையி
லாழ்த்தத்து னைந்த அவுணன்
அச்சுதனை மதியாது சமர்செய்து கடலுளே
ஆவியைவி டுத்த ழிந்தான்
கரணிய செயல்செய்த வராகமா மூர்த்தியைக்
கைகூப்பி யுலகு போற்றும்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பொன்னிறக் கண்களை உடைய இரணியாக்சன் என்ற அசுரத் தலைவன் தன் அண்ணனாகிய இரணிய கசிபுவின் எண்ணத்தையும் அறிய வேண்டும் என்று நினையாமல் உலகத்தையே தனியே பெயர்த்து அழிக்க வேண்டும் என்று கருதிய செயலை அறிந்த திருமால், மாறுபாடு கொண்ட கொடியவனான இரணியாக்கனின் கையில் அகப்பட்ட நிலவுலகம் முழுதையும் காக்க வேண்டும் என்று திருவுள்ளம் பற்றிப் பாற்கடலில் இருந்து எழுந்திருந்து முன் நோக்கி வந்து அவனோடு போர் முறைப்படி போர் புரிவதற்காகவே வெண்பன்றி உருவில் ஒலிக்கும் கடலை நோக்கி வந்தானாக, மலைகளை அரண்களாகக் கொண்ட உலகம் அனைத்தையும் கடலிடையிலே அழுந்தச் செய்ய விரைந்த அசுரன் அடியார்களை நழுவ விடாதவனாகிய திருமாலை மதிக்காமல் அவனோடு போர் செய்து கடலுக்குள்ளேயே உயிரை விடுத்து அழிந்தான். செய்யத்தக்க செயலைத் தேவைப்பட்ட நேரத்தில் செய்த வெண்பன்றி உருவெடுத்த பெருமானை நன்மக்கள் கைகூப்பிப் புகழ்கிறார்கள்.

அ.பொ: இரணியம் - பொன், அக்கம் - கண், இரணியாக்கன் தம்பி, இரணிய கசிபு அண்ணன், முரணிய - மாறுபட்ட, அரண் - பாதுகாவல், துனைந்த - விரைந்த 'கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள்'

( தொல்.சொல். உரி. 315 ) கரணியம் - கரணீயம்- செய்யத்தக்க செயல்

குறிப்பு: இவ்வரலாறு நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் இல்லை, பாகவத புராணம் முதலியவற்றிலேயே உள்ளது.

### 81. நரசிங்க அவதார மூர்த்தி

மூவரும றைந்தொளிய யாவரும் நடுக்கமுற
மூன்றுலகும் ஆண்ட மன்னன்
முரண்மிக்க இரணியக் கசிபுவென வுலகெலாம்
மொழியுமொழி பொய்யில் லையே
தாவறு குணச்செம்மல் பிரகலாத நம்பியே
தந்தைகுண நோக்கி நொந்தான்
தாயகட் டெய்துமெய்ப் பொருளினது
துணைமையாம்
தானெட்டெ ழுத்து ரைத்தான்
யாவரிது ரைத்தவர் எனக்கேட்ட இரணியன்
எதிர்நின்ற தூணை யெற்ற
எதிர்வந்த நரசிங்க மூர்த்திவிர லுகிரினால்
இரணியனை மாய்த்த ழித்தே
காவல்தன துரிமையென நாட்டியதை யறியாது
கற்றதும் கல்வி யாமோ?
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பிரமன், திருமால், உருத்திரன் என்ற மும் மூர்த்திகளும் உருவம் மறைந்து ஒளிந்துகொள்ள, ஏனைய மக்கள் யாவரும் நடுக்கத்தை அடைய, உலகங்கள் மூன்றனையும் ஆண்ட மன்னன் மாறு பாடுமிக்க இரணியகசிபு என்று உலகத்தாரெல்லாம் கூறும் சொற்கள் பழுதாகமாட்டா. குற்றமற்ற நற்குணத்தால் மேம்பட்ட பிரகலாதனாகிய குணபூரணனே தந்தையினுடைய தீய குணங்களை நோக்க மனம் நொந்தான். தாயினுடைய வயிற்றிலிருந்த பொழுதே மெய்ப்பொருளாகிய எம்பெருமானை அடைவதற்குத் துணை செய்யும் திருவெட்டெழுத்தைத் தியானம் செய்து கொண்டிருந்தான். இப்பெயரை உரைத்தவர் யாவர் என்று வினவி அறிந்த இரணியன் தன் எதிரே இருந்த தூணைத் தட்ட அவன் எதிரே தூணிலிருந்து தோன்றிய நரசிங்கமூர்த்தி தன் விரல்

நகத்தால் இரணியன் மார்பைப் பிளந்து அழித்தே, உயிர்களைப் பாதுகாக்கும் செயல் தனது உரிமையாகும் என்று நிறுவிய செயலை அறியாமல் ஏனையவற்றைக் கற்ற கல்வி முழுமையான கல்வி ஆகுமோ?

அ.பொ: மூவர் - பிர்மா, விஷ்ணு, ருத்தரர், தா - குற்றம், நம்பி - குணபூரணன், அகடு - வயிறு, திரு எட்டெழுத்து - ஓம் நமோ நாராயணாய என்பது, உகிர் - நகர், உரிமை - பிறருக்குப் பொதுவாகாது ஒருவனுக்கே உரிமையாக உள்ள செயல்.

## 82. வாமனாவதார மூர்த்தி

காசிபர் தவத்தினால் அதிதியின் மகவாய்க்
காட்சியை அளித்த திருமால்
கண்ணாயி ரத்தவற் கிளவலாம் உரிமையைக்
காதலொடு மேற்ற தாலே
மாசில்மன மாவலியின் வேள்வியிடை வந்துதன்
மலரடியின் மூன்ற டிநிலம்
வாங்கியதும் விண்ணகமொடு மண்ணக மளந்தருளி
மாவலியின் முடிமி தித்தே
ஆசில்பத மருளினேன் பாதலத் துறைகவே
அரண்காவல் யானென் னவே
அரசுக்கு ரைத்தமொழி பொய்யாது காப்பதையும்
அறியாத முனிவரு ளரோ
காசில்நெறி காட்டவே கரநீட்டு மாயனைக்
காணவே அமரர் முயல்வார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: காசிப முனிவர் செய்த தவத்தினால் அவருடைய தேவியருள் ஒருத்தியான அதிதி என்பவளுடைய மகனாய்த் தோற்றம் அளித்த திருமால், இந்திரனுக்குத் தம்பியாகிய உபேந்திரன் என்ற உரிமையை விருப்பத்தோடு மேற்கொண்டதால், குற்றமற்ற உள்ளத்தை உடைய மகாபலியின் வேள்விச்சாலையிடத்தே வந்து தன் தாமரை போன்ற திருவடிகளால் அளந்து கோடற்குரிய மூன்றடி நிலத்தை இரந்து பெற்ற உடனே பெருவடி வெடுத்து விணணுலகையும் மண்ணுலகையும் இரண்டடிகளால் அளந்து மகாபலியின் முடிமீது மூன்றாமடியை வைத்து அவனுக்குக் குற்றமற்ற

பதவியை வழங்கி 'நீ கீழ் உலகில் இருப்பாயாக; நான் உனக்குக் காவலாக இருக்கிறேன்' என்று அவனுக்குக் கூறிய சொற்கள் பொய்யாதபடி இன்றும் அவனைக் காத்துக் கொண்டிருக்கும் சிறப்பை அறியாத முனிவரும் உளரோ? குற்றமற்ற வழியை அறிவிப்பதற்காகத் தன் கைகளை நீட்டி இரந்த வியத்தகு பண்புடைய பெருமானைக் காண்பதற்கே தேவர்களும் முயல்கிறார்கள்.

அ.பொ: கண்ணாயிரத்தவன் - இந்திரன், இந்திரன் தம்பி - உபேந்திரன், மாவலி - பிரகலாதனுடைய பெயரனான மகாபலி, ஆசு - குற்றம், பதம் - பதவி பாதலம் - கீழ் உலகம், காசுஇல் நெறி - குற்றமற்ற வழி. தன் உடைமையைப் பாதுகாக்க இரப்பாளனாகவும் இறங்கி வருதல், மாயன் - வியத்தகு குணம் செயல்களை உடைய திருமால்.

## 83. பரசுராம அவதார மூர்த்தி

பரசுவெனு நாமமுள மாப்படை மழுப்படை
பரித்தமுனி மகனி ராமன்
பாவமென மதியாது தாயினைத் தந்தைசொல்
பற்றியே கொன்ற தீரன்
விரசுதோள் வலிமிக்க கார்த்தவீரி யனைமிக
விரைவிலே கொன்ற தன்றி
வேந்தர்குலம் மாளவே மூவேழு முறைகொலை
வேண்டியே செய்த சூரன்
முரசுடையர் வேந்தர்நிலை பெற்றநிலம் யாவுமே
முனிவருக் காக்கும் வள்ளல்
முறைதெளியு நெஞ்சமுள தாசரதி திருமுன்பு
மொய்ம்பிழந் தேசென் றவன்
கரசரண முகம்விழிகள் அன்பருக் கென்றுகொள்
கரியமால் அவதா ரமே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பரசு என்னும் பெயருடைய பெரிய படைக்கலமான மழுப்படையைத் தாங்கிய, ஜமதக்கினி முனிவருடைய மகனான பரசுராமன் தீச்செயல் என்று கருதாது தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்ற கருத்தால் தந்தை சொல்லை மேற்கொண்டு தாயைக் கொன்ற அறவீரன் ஆவான். பலவாகிய தோள்களில் வலிமை மேம்பட்ட கார்த்த

வீரியார்ச்சுனன் என்னும் அரசனை மிக விரைவிலே கொன்றதன்றி அரசர் குலம் அழிய 21 தலைமுறைகளை அரசர் குலங்களை விரும்பிக் கொலை செய்த வீரச் செயலுடையவனாய், முரசங்கள் ஒலிக்கப் பெற்ற சிறப்பை உடைய அரசர்கள் நிலைபெற்றிருந்த நாடுகளை எல்லாம் முனிவர்களுக்கு வழங்கிய வள்ளலாய், நீதி முறையைத் தெளிவாக உணர்ந்த தசரதன் மகனான ஸ்ரீ ராமன் திருமுன்னர் வலிமை இழந்து தோற்றுச் சென்றவனாய்த் தன் கைகள் கால்கள் முகம் கண்கள் யாவுமே தன் அன்பர்களுக்காகவே செயற்படுத்திய கருநிறத்தவனாகிய திருமாலுடைய அவதாரம் பரசுராமாவதாரமாகும்.

அ.பொ: பரசு - மழுப்படை, பரித்தல் - தூங்குதல், விரசுதல்- பலவாகக் கலத்தல், முரசு - வீரம், நியாயம், தியாகம் இவற்றிற்காக முழங்கப்படும் பெரும்பறை, தாசரதி- தசரதன் மகன் இராமன்.

## 84. தசரதராம மூர்த்தி

ஆண்டுபல் லாயிரமு முலகாண்ட பெருமன்னன்
அருக்ககுல மணியா யவன்
அருள்பொங்கு முனிவர்புரி வேள்வியால் மாயனே
அவதரித் தான்கும ரனாய்
வேண்டுமர சுரிமையினை யெய்தாது இராகவன்
விபினமகம் இளவ லோடே
விதேகன்மகள் துணையோடு புக்கனன் சூர்ப்பணகை
வினையினாற் கரனா தியோர்
மாண்டமலி காட்சியும் தேவிசிறை யுற்றதால்
மாரீசன் வேண்டு மாறே
வலிமிக்க அரக்கர்வளர் இலங்கைநகர் வந்துபல
வானரப் படைக ளோடு
காண்டுமென வமரர்விழை கடும்போரின் வெற்றிபெறு
காட்சியையும் முனிவர் சொற்றார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சூரிய குலத்தில் தோன்றிய சூளாமணி போன்று பல்லாயிர ஆண்டுகள் உலகத்தை ஆண்ட பெருமன்னன் பொருட்டு அருள்மிக்க இருசிய சிருங்கமுனிவன் நிகழ்த்திய மகப்புரி வேள்வியின் பயனாக அம்மன்னனுக்கு மகனாக அவதரித்த திருமால் ஆகிய இராமன் தான் ஏற்றுக்கொள்ள வேண்டிய

அரசாட்சியை எய்தாது, இளவல் இலக்குவனோடும் தேவி விதேக நாட்டு மன்னன் மகள் வைதேகி யோடும் அவர்கள் இருவரையுமே துணையாகக் கொண்டு காட்டின் உட்புறம் சென்றான். சூர்ப்பணகை செய்த தீச்செயலால் கரன் முதலிய அரக்கர்கள் மாண்ட துயரம் மிக்க செய்தியையும், பிராட்டி சிறையுற்றதால் மாரீசன் இராவணனிடம் தொடக்கத்தில் குறிப்பிட்டவாறே வலிமை மிக்க அரக்கர்கள் தங்கியிருந்த இலங்கை நகருக்குப் பல குரங்குப்படைகளோடு இராமன் வந்து 'இதனை நாம் காண்போம்' என்று தேவர்கள் விரும்பிய கொடிய போரினை நிகழ்த்தி வெற்றி பெற்ற செய்தியையும் வான்மீகி முனிவர் விரிவாகக் கூறியுள்ளார்.

அ.பொ: அருக்கன் - சூரியன், முனிவர் - கலைக்கோட்டு முனிவர், வேள்வி - மகப்பெறு வேள்வி, விபினம் அகம் - காட்டின் உள்ளிடம், விதேகன் - விதேக நாட்டு மன்னன் சனகன், கரன் ஆகியோர் - கரதூடண, திரிசிரசு ஆகிய இராவணன் தம்பியர், மலி - துயரம் மிக்க, காட்சி - நிகழ்ச்சி, காண்டும்- காண்போம், முனிவர் - வான்மீகி முனிவர்.

## 85. பலராம அவதாரம்

யதுகுலம் பெற்றபே றாகவரு கண்ணனை
இளையவன் எனக்கொண் டவன்
இணையிலா வலியினான் அறிவினான் செயலினான்
எதிர்ப்பறு மலப்ப டையினான்
மதுமயக் கிரீடையினில் ஒப்பிலான் எய்ப்பிலான்
வரும்யமுனை வழிமாற் றியே
மற்றைவழி யோடவே செய்துதோள் கொட்டியெழும்
வல்லாளன் இல்லா ளனே
விதுமரபில் ஐவரொடு நூற்றுவரி டைப்பகையை
விரும்பாத நெஞ்ச முள்ளான்
மெல்லியல் சுபத்திரையை விசயன்மண மெய்தவே
வேண்டாது முன்வந் தவன்
கதுமென வெழுந்தசின முளனேனும் இளையவன்
கருத்தறிந் தேசெல் லுவான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: யதுகுலம் பெற்ற நல்வினையின் பயனாக அவதரித்த கண்ணனைத் தன் தம்பியாகக் கொண்டவனாய், இணையற்ற வலிமை உடையவனாய், அறிவிலும்,

செயலிலும், பிறர் எதிர்க்க முடியாத கலப்பைப் படையைப் பயன்படுத்துவதிலும், இன்பமான விளையாட்டிலும் தனக்கு ஒப்பார் இல்லாதவனாய், எந்நிலையிலும் களைப்பு அடையாதவனாய், ஓடிவந்த யமுனை ஆற்றின் வழியை மாற்றி வேற்று வழியாக அதனை ஓடச்செய்து தான் செய்த அத்தகைய வெற்றிச் செயலால் தோள்களைத் தட்டிக் கொண்டு புறப்பட்ட பேராற்றலுடையவனாய், நல்ல இல்லறத் தலைவனாய், சந்திர குலத்துத் தோன்றிய பாண்டவர் ஐவரோடு, கௌரவர் நூற்றுவர் பகைத்துச் செயல் படுதலை விரும்பாத நெஞ்சம் உடையவனாய், தன் சகோதரியாகிய மென்மைத்தன்மையுடைய சுபத்திரையை அருச்சுனன் மணத்தலை விரும்பாது அவளை வேறொருவனுக்கு மணம் செய்து வைக்க எண்ணம் கொண்டவனாய், வெகுவிரைவாகக் கோபம் கொள்ளும் இயல்பினன் ஆயினும் கண்ணனுடைய கருத்தை அறிந்தே செயல்படும் இயல்பினனாய் இருந்தவன் பலராமன்.

அ.பொ: யது - யயாதிக்குத் தேவயானை வயிற்றில் பிறந்த சந்திர குலத்து அரசன், அலம்-கலப்பை, மதுமயம்-இன்ப மயமான, கிரீடை - விளையாட்டு, எய்ப்பு - இளைத்தல், களைத்தல், இல்லாளன்- இல்லறத்தைச் சிறக்க நிகழ்த்துபவன், விது - சந்திரன், விசயன்-அருச்சுனன், இளையவன் - கண்ணன்.

## 86. கிருஷ்ணாவதார மூர்த்தி

கோவியரும் யாதவரும் ஆய்ப்பாடி மாக்களும்
குணம்கொண்ட முனிவ ரர்களும்
குறித்தபொருள் எய்தவே யருள்புரிய வந்தவன்
கோபால கோவிந் தனாம்
ஆவியு டல்எல்லாம் அவனுக்கெ னக்கூடும்
அங்கனையர் எத்து ணையரோ
அறமகனும் வீமனும ருச்சுனனும் நகுலனும்
அறிவுமிகு சகதேவனும்
மேவிவரு பகைவெல்ல வுறுதுணை யெனப்பெற்ற
வில்லெடா வீர னவனே
விசயனே செவிசாய்க்க உபநிடதத் தத்துவம்
விளக்கியருள் குரவ னவனே
காவிவிழி மாதரார் இடையிடையில் வேய்ங்குழல்
கைக்கொண்ட கண்ண னவனே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: இடைக்குல மடந்தையரும், யதுகுல மக்களும், திருவாய்ப்பாடி மக்களும் நற்பண்பு உடைய முனிவர்களும் தாம் விரும்பிய பொருள்களை அடைவதற்கு அருள்புரிவதற்காகவே அவதரித்தவன், பசுக்களைப் பரிபாலிப்பவனாகிய கோவிந்தன் ஆவான். தன் உடலும் உயிரும் அவனுக்காகவே எனும் பெண்கள் பலராக இருந்தனர். பாண்டவர் ஐவரும் தம்மை அணுகி வந்து துரியோதனன் முதலிய பகைவர்களை வெல்ல மேம்பட்ட துணைவன் என்னுமாறு பொருந்திய வில்லெடுத்துப் போர் புரியாத வீரனாகிய அவனே அருச்சுனனே செவி-மடுக்குமாறு உபநிடத தத்துவங்களை எல்லாம் ஸ்ரீ கீதையாக விளக்கி அருளிய குரு ஆவான். கருங்குவளை போன்ற கண்களை உடைய மகளிர் இடையிலே வேய்ங்குழலைக் கைக்கொண்டு இசைத்த கண்ணனே கோபால கோவிந்தனாவான்.

அ.பொ: கோவியர் - இடைச்சியர், அங்கனையர் - மகளிர், அறமகன் - தருமபுத்திரன், தத்துவம் - உண்மைப் பொருள்.

### 87. கற்கி அவதாரம்

அறம்வீழ்ந்து மறமோங்கி அறத்தவர் கலங்கவே
அறமிலார் மறமோங் கவே
அவனிமகள் பொறைபொருள் ஐயகோவெ னவலறும்
அந்தந்த கலிநி லையிலே
திறம்வாய்ந்த கலிபுருடன் ஆட்சியை யொழிக்கவே
தேவாதி தேவன் வருவான்
செங்குருதி வெள்ளத்தில் மறத்தினர் அழுந்தவே
சிறியவா ளேந்தி வருவான்
புறம்ஞான்ற கலசமொடு கேடகம் வாளோடு
புரவிமேல் வருவ னவனே
பொய்ம்மைகொ லைகாமம் மோகமே பாவமே
போயொழி யநிற்கு மவனே
கறவைகன் றினையறியு மாறுபோ லுவகுயிர்கள்
கண்டுருகு கற்கி யவனே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: தருமம் சாயப் பாவம் உயர அற உள்ளமுடையவர் கலங்கித் தவிக்க, அறமற்றவருடைய பாவச் செயல்கள் கொடி கட்டிப் பறக்க, நிலமடந்தை பாவிகளின் பாரத்தைத் தாங்க இயலாமல் ஐயகோ!

என்று வாய்விட்டுக் கதறும் அந்தக் கலி காலத்தின் இறுதி நிலையிலே பேராற்றல் பொருந்திய கலிபுருடனுடைய ஆட்சியை அழித்து நீக்கத் தேவர்களுக்குத் தேவனான திருமால் அவதரிப்பான். செந்நிற இரத்த வெள்ளத்தில் தீயோர்கள் அழுந்துமாறு சிறிய வாளினைக் கையில் ஏந்தி வருவான். முதுகுப்புறம் கலசம் தொங்க அதனோடு கேடகத்தையும் வாளினையும் கையில் ஏந்தியவனாய் அவனே குதிரைமீது இவர்ந்து வருவான். பொய்ம்மை, கொலை, காமம், மயக்கம், பாவம் இவை அடியோடு ஒழியுமாறு அவன் நிலையாக இருப்பான். பசு தன் கன்றினைக் கண்டு அன்பால் மனம் உருகுமாறு போல உலகத்து உயிர்களைக் கண்டு உருகும் கற்கி பகவான் அவனே.

அ.பொ: அவனிமகள்-பூமிதேவி, பொறை-பாரம், பொறாள்-பொறுக்க இயலாதவளாகி, கலி அந்த நிலை - கலியுகத்தின் இறுதி நிலை, கலிபுருடன் - கலியுகத் தலைவன், தேவாதிதேவன் - திருமால், மறத்தினர்-பாவியர், புறம் ஞான்ற - முதுகுப் புறம் தொங்கிய, மோகம் - மயக்கம், போய் - மிகவும்.

## 88. அமுதம் அருளிய அவதாரம்

போர்புரிய வலிமையிலை பகைவரோ மிகுவலியர்
புரந்தர னழுங்கி நின்றான்
போர்க்களத் தழிவது பொறுக்கிலே மருள்கென்று
புங்கவர் இரந்து நிற்கப்
பேர்பெரிய பாற்கடலில் அமுதம் கடைந்துமது
பிழையை யொழிப்ப மென்றே
பிறங்கலொடு பாம்புமே மத்துகயி றாகவே
பெறுமாறு கூறிப் பலரைச்
சீர்பெருக வேகமிகு மவுணரு தவியினோடு
சென்றமுது கடைக வென்றான்
திதிமைந்தர் அமுதுபெறு மாசையால் வருவரே
சிந்தித பலந்தெளி வமெனா
கார்முகிலின் மேனியொடு கைகொடுத் துதவினான்
கடலினிடை அமுத மெழவே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கயருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: போர் புரிவதற்கு உடலில் வலிமை இல்லை பகைவர்களோ மிகவும் வலிமையுடையவராய்

உள்ளனர் என்று இந்திரன் வருந்தி நின்றான். 'போர்க்களத்தில் நாங்கள் அழிந்து போகும் துயரம் தாங்க ஒண்ணாததாய் உள்ளது. எங்களுக்கு அருள் செய்க' என்று தேவர் வேண்டி நிற்க, 'பெரும் புகழுடைய பாற்கடலிலிருந்து அமுதத்தைக் கடைந்து எடுத்து உங்கள் துயரை ஒழிப்போம்' என்று தேவரிடம் கூறி, 'மலையாகிய மந்தரம் மத்தாகவும், வாசுகி என்ற பாம்பு கடை கயிறாகவும் கொள்ளுமாறு கூறித் திருமால் தேவர் பலரையும் சிறப்புப் பெறுக விரைவு மிகும் அசுரர் உதவியினோடு சென்று கடைந்து அமுதம் கொள்க' என்று செயற்படுத்தினான். 'அசுரர்கள் அமுதத்தைத் தாமும் பெறலாம் என்ற ஆசையால் கடைய வருவார்கள். பின் நினைத்த பயனைத் தெளிவாக அறிவோம்' என்று கார்முகில் போன்ற உடம்போடு கடலின் நடுவில் அமுதம் தோன்றும் வகையில் பயன்பட்டுத் திருமால் உதவி செய்தான்.

அ.பொ: புரந்தரன் - இந்திரன், புங்கவர் - தேவர், பீழை - துயரம், ஒழிப்பம் - போக்குவோம், பிறங்கல் - ( மந்தர ) மலை, அவுணர் - அசுரர், திதிமைந்தர்- திதியின் புதல்வர்களான அசுரர்கள், சிந்தித பலம்- நினைத்த பயன், தெளிவம் - தெளிவாக உணர்வோம், கைகொடுத்து உதவினான் - கை உதவுவது போல உதவி செய்தான்.

## 89. மோகினி அவதாரம்

பாலாழி மந்தரம் வாசுகிசு ழன்றெழப்
பண்ணவரு மவுணர் இனமும்
பரமனரு ளாற்பெற்ற அமுதினைக் கண்டதும்
பாகம்பெ றத்து டித்தார்
சேலாய விழியோடு பாலாய குழலோடு
திறமிக்க தன்வந் திரி
செங்கரத் தேந்திலகு மமுதகல சத்தையே
தேவிமோ கினிகொண் டனள்
ஆலாய குழலியவன் எனவறிகி லாவவுணர்
அமரரே அமுது பருக
அழகாகி புரிசூழ்ச்சி யறியாதி ருக்கவே
அவுணனும் அமுதேற் றதைக்
காலாழி ஞாயிறும் திங்களும் கண்டனர்
காட்டினார் என்ப துண்டே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பாற்கடலில் மந்தரமலையாகிய மத்து வாசுகியாகிய கடை கயிற்றால் சுழன்று ஏழுந்ததால் தேவரும் அசுரர் இனத்தாரும் இறைவன் அருளால் பெற்ற அமுதத்தைக் கண்ட அளவில் அவரவர்க்கு உரிய பகுதியைப் பெற முற்பட்டனர். சேல்மீன் போன்ற விழியோடும் பால் போன்ற தலைமயிரோடும் ஆற்றல் மிக்க தன்வந்தரி பகவான் தன் செம்மையான கைகளில் ஏந்த விளங்கும் அந்த அமுத பாத்திரத்தையே தேவியாகிய மோகினிதான் அனைவருக்கும் பகிர்ந்தளிப்பதாகக் கூறி வாங்கிக் கொண்டாள். ஆலிலையில் குழந்தையாய்த் தங்கும் திருமாலே இந்த மோகினியாக அவதரித்துள்ளாள் என்பதனை அறியாத அசுரர்கள், தேவர்களே பகிர்ந்தளிக்கப்பட்ட அமுதினை உண்ண, அழகே உருவெடுத்த மோகினி தமக்கு அமுதம் வழங்காது செய்துவந்த சூழ்ச்சியை அறியாமல் அமுதமின்றித் தங்கியிருக்க, அவருள் அசுரன் ஒருவன் மாத்திரம் தேவர்கள் நடுவில் அமர்ந்து அமுதம் பெற்று உண்ட செயலைக் காலத்தை வரையறுத்துக் காட்டும் வட்ட வடிவினரான சூரியனும் சந்திரனும் கண்டுபிடித்து மோகினிக்குக் காட்டினர் என்ற கதையும் உள்ளது.

அ.பொ: பாலாழி - பாற்கடல், பண்ணவர் - தேவர், பாகம்- பங்கு, சூழ்ச்சி - வஞ்சனை, அவுணர் - பின்னர் இராகுவும் கேதுவுமாய் இரு வடிவு பெற்ற அசுரனான சம்கிகேயன், கால்-காலம், தன்வந்திரி- தேவர் மருத்துவர்.

## 90. நஞ்சுண்ட சிவத்தின் சிறப்பு

நீலாய வண்ணனும் தேவரும் பாற்கடலில்
நெறிநின்ற அவுண ரோடு
நிறைந்தபாற் கடலிலே அமுதுபெற மத்திட்டு
நின்றபொழு தெய்து நஞ்சை
ஆலால மெனவறிந் ததனையுண் பவர்யாவர்
அறிகிலேம் எனவோ டினார்
அண்ணல்மாய வன்அமரர் நெஞ்சுநோய் மாறவே
அரன்கயிலை நெறிகாட் டினான்
கீலால முடியேறு கிரீசனு மிரங்கியே
கிரிசைமன நைந்த தேனும்
கெடுதியுல கெய்தாது தருகென்று பருகியே
கிளர்நீல கண்ட னானான்

காலார நடமாடு கருணைப்பிரான் செய்த
காரியமு மெளிதா குமோ
காசினியை வாழ்விக்க வர்நதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: நீல நிறத்தவனான திருமாலும் தேவர்களும் தம்மோடு சேர்ந்த அசுரரோடு நிறைந்த பாற் கடலிலிருந்து அமுதம் பெற அதனைக் கடைந்து நின்றபொழுது வெளிப்பட்ட நஞ்சினை உலகை அழிக்கும் பெரு விடம் என்று அறிந்து அதனை உண்ண வல்லவர் யாவர் என்று அறியோம் என்று கூறிக்கொண்டு ஓடினர். மேம்பாடுடைய திருமால் தேவர்களின் மனத்துயரம் தீரச் சிவபெருமானுடைய கயிலைக்குச் செல்லுமாறு வழி காட்டினான். கங்கை வெள்ளத்தைத் தன் சடையில் ஏற்ற கயிலை மலை ஈசனாகிய சிவபெருமானும் தேவர்மாட்டு இரக்கம் கொண்டு தன் தேவியாகிய மலைமகள் மனம் தன் செயல் கண்டு வருந்திய போதிலும் உலகம் அழியக் கூடாது என்ற உயரிய எண்ணத்தால் அவ்விடத்தைத் தருக என்று வாங்கி உட்கொண்டு விளங்கும் நீலகண்டனாயினான். கால்கள் முழுமையாகப் பயன்பட நடனமாடும் கருணைப் பிரான் ஆகிய சிவபெருமான் செய்த செயல் எளிய செயலாகுமா?

அ.பொ: நீலாய - நீல நிறமாகிய, மத்திட்டு - கடைந்து, ஆலாலம் - பெருவிடம், கிரீசன் - மலையில் வாழும் இறைவன், கிரிசை - மலைமகளாகிய பார்வதி. கிரிஜா என்பதன் திரிபு.

## 91. அரியர புத்திரன் சிறப்பு

நஞ்சுண்ட நாயகனும் அமுதங்க டைந்துவரு
நற்காட்சி காண வந்தான்
நல்லெழிலி னுருவாய மோகினியு மமுதத்தை
நல்கிநின் றதைய றிந்தான்
நெஞ்சுண்ட காதலொடு நின்றங்கு மோகினியின்
நெறிகுழலின் மணமோந் தனன்
நெகிழுமுள மில்லையோ மோகினி யுனக்கென்று
நிலைகெட்ட பித்த னானான்
அஞ்சுண்ட ஞாயிறும் திங்களும் வெட்டுண்ட
அரவினொடு முன்பு வந்தார்
அமுதகல சத்தினிடை அமுதமில் லாமையை
அரனும்தெ ளிந்து கொண்டான்

கஞ்சுண்ட மார்புமோ கினிகுயம் தழுவியே
கண்டனன் புத்திர னையே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: ஆலகால விடத்தை உண்ட சிவபெருமானும் அமுதம் கடைந்ததனால் பல அரிய பொருள்களும் கிட்டிய நல்ல தோற்றத்தைக் காணவந்து, பேரழகின் உருவாகிய மோகினி அமுதத்தை வழங்கி விட்டு நிற்கும் தோற்றத்தைக் கண்டு அவளிடம் நெஞ்சு நிறையக் கொண்ட விருப்பத்தோடு நின்று, அங்கு மோகினியின் சுருண்ட கூந்தல் மணத்தை அருகுவந்து மோந்து, 'மோகினி! உனக்கு என் திறத்து உருகும் உள்ளம் இல்லையோ?' என்று கூறித் தன் மனஉறுதியான நிலை நீங்கி, அவள் திறத்துப் பெருவிருப்பும் கொண்டவனானான். சிவபெருமான் நிலையைக் கண்டு அஞ்சிய சூரியனும் சந்திரனும் அசுரனாய்த் தேவர் நடுவில் அமர்ந்து அமுதம் உண்டு, மோகினி கைச் சட்டுவத்தால் தலை வெட்டப்பட்டு இராகு, கேது என்ற இரு பாம்பு-களாக வடிவெடுத்து உயிர் வாழ்ந்த சிம்சிகேயன் என்ற அசுரனுடன் சிவபெருமான் முன்பு வந்தனர். அமுதப் பாத்திரத்தில் அமுதம் ஏதும் இல்லை எனவே மோகினிக்குத் தொடர்ந்து அமுதம் பரிமாறும் வேலை இல்லை என்பதனைச் சிவபெருமான் தெளிவாக அறிந்து, தாமரை மொட்டுப் போன்ற தனங்களை உடைய மோகினியைத் தழுவி மகன் ஒருவனை உண்டாக்க, அவனே அரியர புத்திரனாவான்.

அ.பொ: நெறிகுழல் - சுருண்ட கூந்தல், பித்தன் - பெரும்பற்று உடையவன், வெட்டுண்ட அரவு - சிம்சிகேயன் என்ற அசுரன் வெட்டுண்ட இராகு கேது என்ற இரு பாம்புகளாகி உயிர் பிழைத்தவன். கஞ்சு - தாமரை, குயம் - நகில்.

## 92. பிட்சாடன மூர்த்தி

அழகுருவ மோகினியு மண்ணலும் கருமடர்கள்
அகமாய தாரு கவனம்
அடைந்தனர் வேள்விபுரி அந்தணர்க ளிறைவனை
அகத்திலறி யாதி ருந்தார்
விழவுமலி வேள்விமுன் மோகினிந டந்துவர
வேதியர் தவம்கெட் டனர்
மெல்லியலர் வாழுமகம் நோக்கிவரு சிவபிரான்
மேனிமுழு தும்தெ ரியவே

பழகுதங் கடினைஞயொடு பிட்சா டனக்கோலப்
பதியெனா முன்ன டைந்தான்
பாவையர்கள் தங்கற்பு நெறிகெட்டே அளவற்ற
பாவியர்க ளாக நின்றார்
கழகமலி புலவரும் பரமசிவ னாட்சியிற்
கண்டதோர் பெருமை யிதே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அழகே வடிவெடுத்த மோகினியும் சிவபெருமானும், இறைவனை விடுத்துச் சடங்குகளுக்கும் மந்திரங்களுக்கும் முதலிடம் வழங்கிய முனிவர்களின் இருப்பிடமாகிய தாருகவனத்தை அடைந்தனர். வேள்விகளை நிகழ்த்திய அவ்விடத்து அந்தணர்கள் தம் மனத்தில் இறைவனுடைய தியானம் இல்லாமலேயே இருந்தனர். திருவிழாப் போல ஆரவாரத்துடன் நிகழ்த்தப்பட்ட வேள்விச்சாலையின் முன் மோகினி நடந்துவர, அவள் பேரழகில் ஈடுபட்ட வேதியர்கள் தம் தவத்தை விடுத்து அவளைப் பின்தொடர்ந்து தம் ஒழுக்கம் கெட்டனர். வேதியருடைய மனைவிமார் வாழ்ந்த வீடுகளை நோக்கிச் சிவபெருமான் தம்முடன் பழகிய பிச்சைப் பாத்திரத்தை ஏந்திப் பிட்சாடன மூர்த்தியாய் உடல் முழுதும் காண்பவர் கண்களுக்குப் புலப்பட வந்தடைந்தார். அந்தண மகளிர் யாவரும் அவரை விரும்பிப் பின்தொடர்ந்ததால் தம் கற்புநெறி கெட்டுத் தீவினையாளர்களாக நின்றனர். கல்வி பயிலுமிடத்தில் கூடியிருந்த ஞானியரும் பரமசிவனுடைய ஆளுகையில் இக்காட்சியைக் கண்ட பெருமை கூறப்படுகிறது.

அ.பொ: கருமடர் - சடங்குகளுக்கும் மந்திரங்களுக்குமே சிறப்புக் கொடுத்து இறைவனை அலட்சியம் செய்பவர், அகம் - மனம், வீடு, பிட்சாடனர் - பிச்சைக்காகப் பல இடங்களிலும் அலைபவர், பதி- தலைவன், கழகம் - கல்வி கற்றற்குரிய இடம், புலவர் - ஞானியர்.

## 93. பிட்டுண்ட திருக்கோலம்

ஆலவாய் மதுரையினில் மாணிக்க வாசகரை
ஆட்கொள்ள வந்த பெருமான்
அரசனவர் தம்மையே சிறையிட்டு வாட்டிய
தறிந்து சடை வாழ்கங் கையை

ஓலமாய் வையையிடை யோடிவர விட்டதால்
உரிமையொடு கரைகட் டவே
ஒவ்வொருவர் பங்குபெறு முறையிலே பிட்டுவிற்று
உயிர்வாழும் வந்தி முறையும்
ஏலமாய் வரல்கண்டு சொக்கனருள் வேண்டியவள்
இனியபிட் டாக்கி வைத்தாள்
எம்பிரான் கூலியா ளாய்வந்து பிட்டினுக்கு
ஏற்றபடி பணிபூண் டனன்
காலமாய் நூலெலாம் காணரிய வரலாறு
கண்டுளது பாண்டி நாடே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திரு ஆலவாய் என்ற திருக்கோயிலை உடைய மதுரையில் மணிவாசகரை அடிமை கொள்ள வந்த சிவபெருமான், மதுரையை அக்காலத்து ஆண்டு வந்த அரசன் அம்மணிவாசகரைச் சிறையிலிட்டு வருத்திய செய்தியை மனம் கொண்டு, தம் சடையில் தங்கியிருந்த கங்கையை ஆரவாரத்தோடு வையை நதியினூடே ஓடி வருமாறு செய்ததால் வையையில் வெள்ளம் ஏற்பட, ஒவ்வொருவரும் கடமை உணர்வோடு வையைக் கரையை உயர்த்தி வெள்ளத்தைத் தடுக்கத் தாம்தாம் பெற்ற பங்கிலே, பிட்டினை விற்று உயிர் வாழ்ந்த வந்தி என்ற முதியவளுடைய பங்கும் வெளிப்படையாகக் குறிப்பிடப்பட்டமை கண்டு, தனக்குக் கூலியாள் கிட்டுவதற்கு அழகனாகிய சிவபெருமானுடைய அருளை வேண்டி இனிய பிட்டினைச் சமைத்து வைத்தாள். சிவபெருமான் கூலியாளாய் வந்து தனக்கு வழங்கப்பட்ட பிட்டுக்கு ஏற்பச் செயற்பட்டான். பலகாலமாய் நூல்களில் காண முடியாத சிவபெருமானுடைய திருவிளையாடல்களின் வரலாற்றை அனுபவிக்கும் வாய்ப்பினைப் பெற்றது பாண்டிய நாடே.

அ.பொ: ஆலவாய் - மதுரையில் உள்ள சிவன் கோயில், அரசன் - அரிமர்த்தன பாண்டியன், ஓலம் - ஓசை, ஏலம் - வெளிப்படையாகக் கூறுதல், வந்தி - பிட்டு வாணிச்சியின் பெயர், சொக்கன் - சொக்கநாதப் பெருமான்.

## 94. விறகு தலையன் திருக்கோலம்

நான்கு மாடந்தாங்கு மழைகொண்ட நகரிலே
நன்குமழை பெய்த நாளில்
நம்பிரான் எம்பிரான் உம்பரார் தம்பிரான்
நலிவிறகு தலைய னாகி
வான்குமுறு காட்சியிடை வீதியிலொ துங்கியே
வாய்வைத்த குழலி னாலே
மணமிக்க சாதாரி யென்றபண் முறையாக
வாசிக்க வயல்நாட் டவன்
யான்பயிலு மிசையினும் பெரியதிது மதுரையில்
இவனறியு மளவும் தெரியேன்
எங்ஙனம் பாணபத்தி ரனையான் எதிர்நின்று
இசைப்பனே யென்றோ டினான்
கான்பயிலும் வறியனாய்க் கிழவனாய் விறகு சுமை
காட்டுகதை யெளிய தாமோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திரு ஆலவாய், திரு நள்ளாறு, திரு முடங்கை, திரு நடுவூர் என்ற நான்கு மாடங்களும் மேகங்களைத் தன் உச்சியிலே கொண்ட மதுரை மாநகரிலே, நன்கு மழை பெய்த ஒரு நாளிலே, நமக்கும் எல்லோருக்கும் தேவர்களுக்கும் தலைவனாகிய சிவபெருமான், தலையைத் தன் பாரத்தால் வருத்தும் விறகினைச் சுமந்த தலையனாகி, வானம் மழை பெய்ய உறுமும் தோற்றத்திடையே வீதியில் ஒரு வீட்டுத் திண்ணையில் ஒதுங்கி, தான் வாயில் வைத்து ஒலியூட்டிய வேய்ங்குழலினாலே சிறப்பு மிக்க 'சாதாரி' என்ற பண்ணை முறையாக வாசிக்க, மதுரைக்கு வந்த அயல்நாட்டு இசைப் புலவன், 'யான் பழகிய இசையைவிட இது மேம்பட்டதாக உள்ளது. மதுரை நகரில் விறகு வெட்டியாக வாழும் இவன் அறியும் அளவுகூட எனக்கு இசைத்துறையில் புலமை இல்லை. பாணபத்திரன் எதிரே நின்று யான் யாங்கனம் பாடல் வல்லேன்?' என்று நினைத்து மதுரையிலிருந்து ஓடிப்போய் விட்டான். காட்டிலே விறகு வெட்டிப் பழகும் வறிய கிழவனாய்ச் சிவபெருமான் நிகழ்த்திய திருவிளையாடல் ஓர் எளிய செயலாகுமோ?

அ.பொ: நான்கு மாடம் - திரு ஆலவாய் முதலிய நான்கு கோயில்கள் என்பர் நச்சினார்க்கினியர் (கலித்தொகை 92), குமுறுதல் - ஒலித்தல், குழல்-

வேய்ங்குழல், பாணபத்திரன் - மதுரையில் வாழ்ந்த இசைப்புலவனான சிவத்தொண்டன், கான் - காடு- இசையுமாம்.

குறிப்பு: விறகு தலையன் வாயினால் இசைபாடியதாகப் பரஞ்சோதி திருவிளையாடல் கூறும். இது மதுரையில் நிகழ்த்தப்பட்ட 41-ஆம் திருவிளையாடல்.

## 95. மாமனாக வழக்குரைத்த திருக்கோலம்

மகவிலாப் பொருள்வணிகன் தங்கைபெறு மகனையே
மகனாக வளர்த்து வந்தான்
மகப்பெற்ற தாயவனை மதியாமல் ஏசினாள்
மகப் பெறா வணிக னன்றே
மகவிலா வீட்டிலே வாழ்கிலேன் என்னவே
முடுகினான் காட்டி னுக்கே
முன்னோர்கள் செல்வமொடு தன்செல்வம்
வைத்தனன்
முறைகொண்ட மைந்த னுக்கே
இகமிலா தென்னவே தாயாதர் பலர்புகுந்து
இத்திருக் கவர வந்தார்
இளையனாம் மைந்தனும் கோயிலிற் கதறினான்
இறைவனே மாம னானான்
ககனிலா வானமோ பரசிவன் நாடெனாக்
கதறினான் வெற்றி கண்டான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பிள்ளைப் பேறில்லாத பெருவணிகனான தனபதி என்பான் தன் தங்கையினுடைய மகனையே தன் மகனாக ஏற்றுக்கொண்டு வளர்த்து வந்தான். ஒருநாள் ஏற்பட்ட சண்டையில் மகனைப் பெற்ற தாயாகிய அவன் தங்கை அவனைப் பிள்ளைப் பேறில்லாதவன் என இகழ்ந்தாள். அதனால் மனம் நொந்த அவ்வணிகன் பிள்ளை இல்லாத இல்லறத்தில் வாழ விருப்பமிலாதவனாய் மகப்பேறு வேண்டி மனைவியுடன் தவம் செய்யக் காட்டிற்கு விரைந்து புறப்பட்டான். தான் முறையாக ஏற்றுக் கொண்ட தன் தங்கை மகனுக்கே தன் முன்னோர் ஈட்டி வைத்த செல்வத்தையும் தான் ஈட்டிய செல்வத்தையும் சேர்த்து வைத்திருந்தான். உலகில் ஒருவன் செல்வம் அவன் தாயத்தாருக்கே அன்றிச்

சகோதரி மகனுக்கு உரிமை ஆகாது என்று கூறித் தனபதியின் தாயத்தார் பலரும் அவன் வீட்டில் புகுந்து அவன் செல்வங்களை எல்லாம் கவர்ந்து செல்ல முற்பட்டனர். ஆண்டில் இளையவனான தனபதியின் தங்கை மகனும் கோயிலில் சென்று இறைவனிடம் அழுது வேண்ட, இறைவனே மாமன் வடிவு கொண்டு வந்தான். சிவபெருமான் சுந்தரபாண்டியனாக இருந்து ஆட்சி செய்த பாண்டிய நாடு சூரியன் இல்லாத வானமோ என்று அழுது புலம்பிய சிறுவன் வழக்கில் வென்று தன் மாமன் செல்வம் முழுமையும் பெற்றான்.

அ.பொ: மகவு - மக்கட்பேறு; முடுகுதல் - விரைந்து செல்லுதல், இகம் - உலகம்; ககன் - சூரியன்.

## 96. மாறர் வேண்டி அவியுண்ட கோலம்

சோமாசி மாறனார் வேதியர் குலத்திலே
தோன்றுபெரு வேள்வி யாளர்
சுந்தரர்க் கருளுமவன் வேள்வியின் சாலையே
தோன்றவே வேண்டு மென்றே
நாமாதி யோதியே நம்பியா ரூரரை
நயந்திரந் தேவேண் டினார்
நம்பிரான் அவியுண்ண வருவனவன் வருகோலம்
நவிலவறி யேனென் றனர்
சாமாதி நான்குமறை யோதுமக சாலையிற்
சங்கரன் வந்து நின்றான்
சதுர்வேத நாய்களொடு சண்டாள வேடமாய்த்
தயைெயாடு வந்த வனையே
காமாரி யென்றறிந் தவன்கரம் நிரம்பவே
கள்ளமற அவியை வைத்தார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சோமாசி மாறனார் வேதியர் குலத்தில் தோன்றிப் பெருவேள்விகள் செய்தவர். சுந்தரருக்குப் பலவாறாக அருள் செய்யும் சிவபெருமான் தம் வேள்விச் சாலைக்கு நேரே வந்து தோன்ற வேண்டு மென்று சுந்தரருடைய பெயர் முதலியவற்றைப் புகழ்ந்து கூறி அவரிடம் விரும்பி வேண்டினார். சுந்தரரும் இறைவன் அருள் பெற்று 'இறைவன் வேள்விச் சாலையில் அவியை நுகர வருவான். ஆனால் அவன் எவ்வுருவில் வருவான் என்பதனை யான் அறியேன்' என்றார். சாமவேதம் முதலிய

நான்கு வேதங்களும் ஓதப்படும் வேள்விச்சாலைக்கு உலகுக்கு நன்மை செய்பவனாகிய சிவபெருமான் நான்கு வேதங்களையும் நான்கு நாய்களாகக் கொண்டு புலையன் வேடத்தில் வந்து சேர, அப்புலையனே மன்மதனை எரித்தழித்த சிவபெருமான் என்று அறிந்து மாறனார் அவன் கை நிரம்பும்படி வேள்வியில் இடப்படும் அவியை நேரே வழங்கினான் என்பது செவிவழி வரலாறு.

அ.பொ: சோமாசி - சோம யாகம் செய்தவர், நம்பி ஆரூரர்- சுந்தரமூர்த்தி சுவாமிகள், அவி - வேள்வித் தீயில் இடப்படும் பொருள்கள், சாமாதி - சாம வேதம் முதலியன, காமாரி - மன்மதனை அழித்த சிவபெருமான், சங்கரன் - நன்மையைச் செய்யும் சிவபெருமான்.

குறிப்பு: சிவபெருமான் புலையன் வடிவில் வந்த வரலாறு திருத்தொண்டர் புராணத்தில் இல்லை. ஆனால் அம்பர் மாகாளத் தலபுராணத்தில் உள்ளது என்ப.

## 97. பிரம்படி பெற்ற கோலம்

வையையிற் பெருகுநீர் வெள்ளத்தி னாற்பழைய
மதுரைநக ரழியு மென்றே
மக்களவ லித்ததை யறிந்தபாண் டியமன்னன்
வளர்கரை யடைப்பே வினான்
ஐயையின் கோயிலிற் பணிமன்னர் மரபினோன்
அடைகரையி னருகு வந்தான்
ஆங்குவரு பிட்டுண்ட கூலியாள் பணிசெயான்
அயலிலே வீழ்ந்தி ருந்தான்
செய்யகோல் மன்னவன் சினந்தவனை நோக்கியே
சீர்த்தநக ரழிய விட்டாய்
சிறியைநீ யென்னவே சீறியே கையிலுள
சிறுபிரம் பால டித்தான்
கையையே நோக்கினான் முதுகிலே பட்டவடி
கைதவன் கண்டு கொண்டான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: வையை யாற்றில் பெருகிய நீர் வெள்ளத்தால் தொன்மை வாய்ந்த மதுரை மாநகர் அழிந்துவிடுமே என்று அந்நகர மக்கள் வருந்தியதை அறிந்த பாண்டிய மன்னன் உயர்ந்த கரையில் ஏற்பட்ட உடைப்புக்களை அடைப்பதற்கு ஆணையிட்டான். மீனாட்சியம்மன் கோயிலை வழிபடும் அரசர் மரபில் தோன்றிய அரிமர்த்தனனான அப்பாண்டி மன்னன்

உடைப்புக்கள் அடைக்கப்பட்டுக் கொண்டிருந்த வையை நதிக்கரையின் பக்கத்தில் வந்தான். அவ்விடத்தில் வந்தியிடம் பெற்ற பிட்டினை உண்டு வேலை எதுவும் செய்யாமல் அவள் பங்கினை அடைக்க வந்த கூலியாள் ஒரு பக்கத்தில் பள்ளி கொண்டிருந்தான். செங்கோல் வேந்தன் வெகுண்டு அக்கூலியாளை நோக்கி 'சிறந்த நகரத்தை வெள்ளத்தால் அழியுமாறு விடுத்துள்ள நீ கீழான குணத்தை உடையை' என்று கூறி அவனைச் சினந்து கையிலிருந்த சிறு பிரம்பால் அடித்தான். அரசனாகிய பாண்டியன் தன் கையையே பார்த்துக்கொண்டிருக்கவும், தன் முதுகில் தான் அடித்த அடி தாக்கியதனை அறிந்து கொண்டான். கூலியாளாய் வந்தவன் சர்வ வியாபியான சிவபெருமானே என்பதனை உணர்ந்தான் என்றவாறு.

அ.பொ: ஆவலித்தல் - வருந்துதல், வளர்கரை - உயர்ந்த ஆற்றங்கரை, ஐயை - பெண்தெய்வம், வீழ்ந்திருத்தல் - படுத்துக்கிடத்தல், கைதவன் - பாண்டியன்.

## 98. வில்லடி கொண்ட திருக்கோலம்

பாண்டவருள் மிக்கபுகழ் வில்விசயன் இறைவனைப்
பாசுபதம் வேண்டு நோக்கால்
பருவதத் தரசாய இமயத்தி னப்பாற்
பரவிய குறிஞ்சி சென்றான்
ஆண்டவற் குரியமந் திரமோதி மாதவத்
தழுந்தினன் பற்பல காலம்
அருளிறைவன் பன்றியின் கூட்டமொடு வேடனாய்
அருகில்வந் தானா யினும்
நீண்டபற் பன்றியாய் மூகதான வன்வந்து
நெருப்பெழப் பாய்தல் கண்டே
நிறைவலிமை கொண்டவிருகம் மாயவே குத்திடும்
நேயமலி பார்த்த னுமதைக்
காண்டலு மெதிர்த்தனன் சமராடி யீசனைக்
கைவிலாற் சவட்டி விட்டான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பாண்டவர் ஐவருள் மிகுந்த புகழுடைய வில் வித்தையில் வல்ல அருச்சுனன், பாசுபதாத்திரத்தை வேண்டித் தவம் செய்து பெறும் நோக்குடன் மலைமகளுக்கு அரசாகிய இமயத்தின் உயர்

பகுதியில் பரவியிருந்த மலைப் பகுதிக்குச் சென்று சிவபெருமானுக்கு உரிய திருவைந்தெழுத்து மந்திரத்தை ஓதிப் பெரிய தவத்தில் பலகாலம் ஈடுபட்டிருந்தான். எல்லாருக்கும் அருள் செய்யும் சிவபெருமான் பன்றிக் கூட்டத்தை உண்டாக்கி அருச்சுனன் தவம் செய்துகொண்டிருந்த இடத்திற்கு வேடன் வடிவில் வந்தானாயினும் நீண்ட பற்களை உடைய பன்றியாய் மூகன் என்ற அசுரன் அருச்சுனன் இருக்கும் இடத்திற்கு வந்து கோபத்தோடு தீப்பொறி பறக்கப் பாய்தலைக் கண்டு மிக்க வலிமை கொண்ட அப்பன்றி இறக்குமாறு அதன்மீது வேடன் அம்பு விடுத்தான். அன்புமிக்க அருச்சுனனும் அப்பன்றியைக் கண்டதும் அதனை எதிர்த்து அம்பினைச் செலுத்தினான். அருச்சுனன் வேடனாய் வந்த சிவபெருமானோடு போர் செய்து, அப்பெருமானைத் தன் கைவில்லினால் துன்புறுத்திவிட்டான் என்பது பாரதச் செய்தி.

அ.பொ: விசயன், பார்த்தன் - அருச்சுனன், பருவதம் - மலை குறிஞ்சி - மலைநிலம், மந்திரம் - திருவைந்தெழுத்து, மூகன் - பன்றி வடிவில் வந்த அசுரன்.

## 99. தூதுபோய் வந்த திருக்கோலம்

நம்பியா ரூரர்திரு வாரூரை நீங்கியே
நலம்பொலியு மொற்றி யூரில்
நங்கைசங் கிலியோடு வாழுநாட் பரவைபுரி
நற்றருமம் நினைவு கூர்ந்தே
எம்பிரான் அருள்கவென ஆரூரை நோக்கியே
எழுந்ததும் விழிகள் மறைய
இறைவனே விழியருள்க வெனவேண்டி யாரூரில்
எய்தினார் பரவை இல்லம்
தம்பிரான் றோழர்புக வியலாமை நோக்கியே
தையலார் திரும னைக்கே
தருதூத னாகவே போய்வருக வென்றகதை
தமிழுல கறிந்த தொன்றே
கம்பியா நெஞ்சத்தர் ஏயர்கோன் இதுகண்டு
கடுஞ்சினம் கொண்ட துண்டே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: நம்பி ஆரூரர் எனப்படும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரை விடுத்து மேற்கொண்ட தல யாத்திரையில் அழகுமிக்க திருவொற்றியூரில் சங்கிலி நங்கையாரை மணந்து அவரோடு வாழ்ந்த

நாள்களில் வசந்த உற்சவத்தில் பரவையார் செய்யும் அறச்செயல்களைப் பற்றிய எண்ணம் மிகவே 'எம்பெருமான் அருள் செய்வானாக' என்று கருதி திருவாரூரை நோக்கிப் புறப்பட்டதும் கண்ணொளி மறைய 'இறைவனே! எனக்குக் கண்பார்வையை அருளுவாயாக' என்று வேண்டிக் காஞ்சிபுரத்தில் இடக்கண் பார்வை பெற்றுத் திருவாரூரில் வலக்கண் பார்வையும் பெற்றுப் பரவையார் இல்லத்தினுள் அவர் நுழைய முடியாத வகையில் பரவையார் புலவிகொள்ளப் பரவையார் இல்லத்துக்கு என் தூதனாகச் சென்று அவர் புலவியை நீக்கி வருக என்று இறைவனை வேண்டப் பெருமான் இருமுறை தூது சென்று பரவையார் புலவியை நீக்கிச் சுந்தரரைப் பரவையாரோடு இணைத்து வைத்த கதை தமிழுலகம் அறிந்த தொன்றாகும். நடுங்காத உறுதியான நெஞ்சினை உடைய ஏயர்கோன் கலிக்காமனார் இச்செய்தியை மனத்துக் கொண்டு மிக்க வெகுளி கொண்டார் என்ற வரலாறும் உண்டு.

அ.பொ: தம்பிரான் தோழர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்,
தையலார் - பரவை நாச்சியார்,
கம்பித்தல் - நடுங்குதல்,
கம்பியா நெஞ்சம் - உறுதியான உள்ளம்.

## 100. அப்பரை உதைத்த திருக்கோலம்

அப்பர்சிவ மூர்த்தியைத் தலந்தொறும் வணங்கிடும்
அமுதமய விசைபா டுவார்
அருள்ஞான சம்பந்தர் சென்றநெறி நோக்கியே
அடுத்ததோர் பதிய ணைந்தார்
அப்பொழுது நள்ளிரவின் முன்னமே ஒருகிழவர்
அவர்முடி யிலேமி தித்தார்
அருள்வள்ளல் பதமெனா வறியாது கிழவரை
அப்புறம் ஒதுங்க வேண்ட
கப்பரை யெடுக்குமவர் என்னையறி யாய்கொலோ
காண்கென மறைந்த துண்டே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: அப்பர் என்ற பெருடைய திருநாவுக்கரசர் சிவபெருமானைத் தலம்தொறும் சென்று வணங்கி-யவராய் அமுதம் போன்ற இனிய பாடல்களைப் பாடும் இயல்பினர். அருள் வடிவான ஞானசம்பந்தர்

சென்ற வழியைப் பின்பற்றி பக்கத்திலுள்ள திருத்தலத்தை அப்பர் பெருமான் சென்றடைந்தார். காலை, நண்பகல், மாலை என்ற மூன்று நேரத்-திலும் நாள்தோறும் இறைவனுடைய புகழைப் பாடும் அப்பர் பெருமான் முத்தமிழும் வல்ல சான்றோராவார். அவர் ஒருநாள் 'எல்லோருக்கும் முற்பட்ட பெருமானே! அருள் செய்வாயாக' என்று கூறி மடம் ஒன்றை அடைந்து அங்கு முறையாகப் படுத்திருந்தார். அப்பொழுது நடு இரவிலே அவ் விடத்தில் அப்பர் வரும் முன்னரே படுத்திருந்த ஒரு கிழவர் அப்பர் தலையிலே உதைத்தார். அவ்வாறு உதைத்த திருவடிகள் யாவருக்கும் அருள் செய்யும் வள்ளலாகிய சிவபெருமானுடைய திருவடிகள் என்று அறியாமல் அப்பர் அக்கிழவரை நோக்கி வேறொரு புறம் நோக்கிப் படுக்குமாறு வேண்ட, பிச்சை ஓட்டினை ஏந்தும் பெருமான் 'என்னை நீ அறியவில்லையா? தெரிந்துகொள்' என்று கூறி மறைந்த வரலாறும் உண்டு.

அ.பொ: முத்தமிழ் - இயல் இசை நாடகம், அருள் வள்ளல்- சிவபெருமான், அப்புறம் - வேற்றிடம், கப்பரை - பிச்சை எடுக்கும் ஓடு.

குறிப்பு: இவ்வரலாறு திருத்தொண்டர் புராணத்தில் அப்பர் வரலாற்றில் இல்லை. சுந்தரமூர்த்தி சுவாமி வரலாற்றிலேயே உள்ளது.

## 101. மணப்பந்தரில் வழக்காடிய திருக்கோலம்

சடங்கவி சிவாசாரியார் மகளைமண மெய்தவே
தம்பிரான் றோழர் வந்தார்
திருமணப் பந்தரிற் கிழவர்வே டத்திலொரு
சம்புவே வந்து நின்றே
மடங்கலி னிமிர்த்தநம் பியைநோக்கி யென்னடிமை
மணவினைக் குரிமை யில்லாய்
மறைநேர்ந்த முன்னையவர் தருமோலை காணென்று
வழக்காட நம்பி யதனை
அடங்கலரி தாயசின மோடுகைப் பற்றியே
அவையிலே கீறி யெறிய
அந்தணக் கிழவரும் வெண்ணெய்நல் லூரிலே
அறிகம்வா வென்ற ழைத்தே
கடங்கலுழ மதயானை போல்நின்ற நம்பியைக்
காலில்விழ வைத்த துண்மை
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சடங்கவி சிவாசாரியார் மகளை மணப்பதற்காகத் தம்பிரான் தோழரான சுந்தரர் வந்தார். திருமணப் பந்தரில் கிழவர் வேடத்தில் சிவபெருமான் வந்து நின்று சிங்கத்தைப் போலக் கம்பீரமாக நின்று கொண்டிருந்த சுந்தரரை நோக்கி 'நீ என் அடிமையாதலின் நீ என் இசைவு இன்றித் திருமணம் செய்து கொள்ள உரிமை உடையை அல்லை. வேதங்களில் வல்ல உன் முன்னவரான தந்தைவழிப் பாட்டனார் தந்த ஓலை இது' என்று கூறி வழக்காட, சுந்தரர் அவ்வோலையை அடக்க முடியாத வெகுளியோடு கையால் பிடுங்கிக்கொண்டு அந்தச் சபையிலேயே கிழித்து எறிய, கிழவராகிய அந்தணரும் 'வெண்ணெய் நல்லூரிலேயே உண்மையை அறிவோம் வா' என்று சுந்தரரை அழைத்துக்கொண்டு, மதம் பொழியும் மதயானை போல நின்ற சுந்தரரைத் தம் காலில் விழச்செய்த செயல் உண்மை நிகழ்ச்சியாகும்.

அ.பொ: கீறுதல் - கிழித்தல், கலுழுதல் - ஒழுகுதல்.

## 102. கல்லெறிகொண்ட கண்ணுதல்

சாக்கியப் பெயரொடு பௌத்த நெறி வாழ்வுபெறு
சைவமெய் யன்பர் ஒருவர்
சங்கர லிங்கத்தை நோக்குதொறு மனமுருகு
நன்மைபெரி தாத லாலே
பாக்கியப் பேறில்லை மலர்களிட வென்னவே
பருவந்த நெஞ்சி னோடு
பரமனே கல்லெடுத் தெறிவல்யான் அவைநினது
பதுமமலர் மென்மே னியைத்
தாக்கிய வெழுந்தவென வுள்ளங்கொ ளாதடிமை
தவமென்ன வேற்ற ருள்கெனா
தமதுளப் பத்தியினைப் பௌத்தரும் சைவரும்
தக்கவா றுணரா வணம்
காக்கிய மனங்கொண்டு கடவுள்பணி பூண்டதைக்
கண்ணுதல் உவந்த துண்டே
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சாக்கியர் என்ற பெயரோடு பௌத்த நெறியுடைய மரபினரிடையே வாழ்ந்துவந்த, மனத்தில் சிவபெருமானிடம் பற்றுடைய அன்பர் ஒருவர் நன்மையைச் செய்யும் சிவலிங்கத்தைக் காணுந் தோறும் மனம் உருகும் நற்செயல் பெரிதாக

நிகழ்ந்த காரணத்தால் சிவபெருமானை அணுகி அவரை மலரிட்டு வழிபடும்பேறு, பௌத்தர்களிடையே வாழ்வதால் தமக்குக் கிட்டவில்லையே என்று வருந்திய நெஞ்சத்தோடு 'பெருமானே! நான் உன் திருமேனியை நோக்கிச் சிறுகல்லை எடுத்து எறிகின்றேன். அவை உன்னுடைய தாமரை மலர் போன்ற மென்மையான திருமேனியைத் துன்புறுத்துவதற்கு வந்தன என்று திருவுள்ளம் கொள்ளாது அடிமையாகிய அடியேன் செய்யும் தவச்செயல் என்று ஏற்றருள வேண்டும்' என்று வேண்டித் தம் உள்ளத்தில் இருந்த சிவபக்தியைப் பௌத்தரும் சைவரும் உள்ளவாறு உணராதபடி மறைத்து வைக்க வேண்டும் என்று கருதிச் சிவபெருமானைக் கல்லால் அருச்சித்த செயலை அப்பெருமான் உவப்புடன் ஏற்றுக்கொண்டு அவ்வடியவருக்கு வீடுபேறு அருளினார்.

அ.பொ: சங்கரன்-நன்மையைச் செய்பவன், பருவந்த-வருந்திய, பதுமமலர்-தாமரைப்பூ, தாக்கிய-தாக்கும் பொருட்டு-செய்யிய என்னும் வினையெச்சம், காக்கிய-காக்கும் பொருட்டு, சாக்கியர் - பௌத்தர், சமணர்.

குறிப்பு இந்நாயனாரைச் சமணர் என்று கொள்வதனை விடப் பௌத்தர் என்று கோடலே ஏற்றது. இந்நாயனார் காலத்தில் சமணர்கள் சைவர்களோடு மாறுபட்டுப் பகை பூண்டு நெறியற்ற நெறிகள் பல புரிந்தமை பெரியபுராண அடியார் வரலாறுகளில் காணப்படுகிறது. அந்த அளவு பௌத்தர் செயற்பட்டிலர்.

## 103. பிள்ளைக்கறி பெற்ற பெருமான்

பரஞ்சோதி நாமமொடு சோழர்படை நடாத்திய
பரிவுள்ள மிக்க தொண்டர்
பற்றற்று மெய்த்தெளிவு தேறவே சிவனடியார்
பாதம்வ ணங்கி வேண்டி
சிரஞ்சோதி சாரவே திருவிருந் திடுவதைத்
தேர்ந்தருளு முக்கட் பிரான்
சிவனடியா ராகவே வந்துதாய் தந்தையே
சிறுவனைப் பலித ருவரேல்
வரஞ்சோதி யருளென்று கருதுவே னென்னலும்
மனந்தூய தாய்தந் தையர்
மகனாய சீராள னைக்கொன்று சமையலும்
மணமோடு புரிந்தீந் தனர்

கரஞ்சோதி யடியவர் மறைந்தருள மைந்தனே
கனிவுமி கவேமீண் டனன்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: பரஞ்சோதி என்ற பெயரோடு சோழர்களுடைய படைத்தலைவராய் இருந்து படைகளை நடத்திச் சென்று மேலைச் சாளுக்கியரை வென்றவரான அன்புள்ளம் மிக்க சிவனடியார் பின் பதவியை விடுத்துப் பற்றறுத்து உண்மைப் பொருளைத் தெளிந்ததனால், சிவனடியார்களுடைய திருவடி-களை வணங்கி வேண்டி, மேம்பட்ட ஞான ஒளி ஏற்படுவதற்காக அவர்களுக்குச் சிறந்த அமுது படைப்பதனை மனம் கொண்டு எல்லோருக்கும் அருள் செய்யும் முக்கண் மூர்த்தி, 'சிவனடியார் வேடத்தில் வந்து தாய் தந்தை இருவரும் மனம் இயைந்து தம் சிறுவனை உணவாக்கித் தருவராயின் அதனை வளருகின்ற மேம்பட்ட சோதி வடிவின-னாகிய சிவபெருமானுடைய அருளாகக் கருதுவேன்' என்று கூறலும், மனம் தூய தாய் தந்தையர் ஆகிய திருவெண்காட்டு நங்கையும் பரஞ்சோதியாரும் தம் மகனாய சீராள தேவனுடைய உடலை மணத்-தோடு சமைத்து அடியவருக்கு இலையில் படைத்தனர். கையில் எரியை ஏந்திய பெருமானு-டைய அடியவர் உரு மறையவே, உணவாகச் சமைக்கப்பட்ட மகனான சீராளனே பெற்றோருக்கு மகிழ்ச்சி மிகுமாறு மீண்டான்.

அ.பொ: தேறவே - தெளிந்ததனால், சிரஞ்சோதி - மேம்பட்ட ஞான ஒளி, வரஞ்சோதி - மேம்பட்ட சோதி வடிவினனாகிய சிவபெருமான், கரஞ்சோதி- கையில் அனலை உடையவர், மைந்தன் - சீராளன், தாய் - திருவெண்காட்டு நங்கை, தந்தை - பரஞ்சோதி எனப்படும் சிறுத்தொண்டர்.

## 104. கலிக்காமரைக் காத்த கருணைக் கடல்

ஏயர்குடி வருகலிக் காமராம் பேரன்பர்
இறைதோழர் ஆரு ரர்தாம்
இறையையே தூதுவிடு செயல்பொறா திவர்புறகு
இவர்க்கருளு மிறைபு றகெனா
நாயமிகு கோபமொடு தேவாசி ரயத்தின்முன்
நவின்றதாற் சூலை நோயால்
நலிவுற்ற தறிநம்பி யாரூரர் அவர்பிணியை
நம்பனருள் கொண்டு போக்க

ஏயர்பதி யில்லுள்வர அவர்நொந்த மனமோடும்
ஈர்வாளின் உயிர்போக் கிட
எதிர்வந்த சுந்தரரும் அதுசெய்ய வாளினை
எடுத்ததைக் கண்ட பரமன்
காயமுயிர் பிரியாம விருவரும் நண்புபெறு
கருணையைக் காட்டி நின்றான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: ஏயர் என்ற வேளாளர் குடியில் தோன்றிய கலிக்காமர் என்ற சிறந்த அடியவர். சிவபெருமானுடைய தோழர் என்ற சிறப்புப் பெற்ற ஆரூரராகிய சுந்தரர், சிவபெருமானையே தம் மனைவியிடம் தூதுவிட்ட செய்தியைக் கேட்கச் சகியாதவராகிச் சுந்தரரையும் அவருக்காகத் தூது சென்ற சிவபெருமானையும் புறக்கணிக்கத் தக்கவர் என்று கொண்ட நேர்மையான மிக்க கோபத்தால் திருவாரூரில் அடியவர் கூடியிருக்கும் தேவாசிரிய மண்டபத்தில் கூறியதனால், இருவரிடையேயும் நட்புறவை உண்டாக்கச் சிவபெருமான் திருவுள்ளம் பற்ற, அதனால் கலிக்காமர் வயிற்று வலியால் பெரிதும் வருந்தினாராக, அதனை அறிந்த சுந்தரர் கலிக்காமருடைய நோயினைச் சிவபெருமான் அருள்கொண்டு போக்குவதற்கு கலிக்காமருடைய ஊரிலிருந்த அவருடைய வீட்டிற்குள் நுழைய, அதற்கு முன்னரே சுந்தரர் வருகையை அறிந்து அவர் முகத்தில் விழிக்க மனமின்றி வருந்திய மனத்தோடு கூரிய வாளினால் தம் உயிரைப் போக்கிக்கொள்ள, வீட்டினுள் கலிக்காமர் முன்னால் வந்தடைந்த சுந்தரரும் அதே வாளினால் தம் உயிரையும் போக்கிக்கொள்ள வாளினை எடுத்த செயலைக் கண்டு சிவபெருமான் இருவர் உயிரையும் பாதுகாத்தருள, கலிக்காமர் உயிர்த்தெழ, இருவரும் நட்பினைப் பெற்று வாழுமாறு தன் கருணையை வெளிப்படுத்தினான்.

அ.பொ: கலிக்காமர் - ஏயர்கோன் கலிக்காம நாயனார், இறைதோழர், ஆரூரர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள், புறகு - புறக்கணிக்கத் தக்கவர், நாயம் - நியாயம், தேவாசிரியம் - திருவாரூர் கோயிலில் அடியவர் கூடும் மண்டபம், ஏயர் - கலிக்காமர், நம்பன் - எல்லோராலும் விரும்பப்படும் சிவபெருமான், நம்பி ஆரூரர் - சுந்தரர்.

குறிப்பு: சுந்தரரையும் சிவபெருமானையும் புறக்கணித்தவர் என்று கூறும் செய்தி விறல் மிண்ட நாயனார் செய்தியாகப் பெரியபுராணத்தில் உள்ளது.

## 105. பொன் கொடுத்த புராந்தகன்

ஆரூரர் தோழனே ஆசியருள் தம்பிரான்
அவர்மனத் தென்று நின்றே
அவர்வேண்டு பொன்னளித்த ருளுவதை யுலகெலாம்
அறியமணி முத்த நதியில்
பேரூரே அவரிட்ட பொன்குவியல் ஆரூர்ப்
பெருங்குளத் தேதோன் றவே
பேரின்ப மொழிதரலும் அதுகேட்ட சுந்தரர்
பெண்மைமலி பரவை யோடு
நீரூரு கமலால யத்தெய்தி யிறைவனை
நினைந்துப திகம்பா டியே
நெஞ்சுருக வைம்பொறியு முருகவே பொன்குவியல்
நேர்வுறக் கண்ட துண்டே
காரூரு மாளிகையுள் நெல்லிட்ட வரலாறு
கடவுள்செயல் காட்டு வதரோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: சுந்தரர் தோழனாகிய சிவபெருமான் அவருக்கு என்றும் நல்வாழ்வு அளிக்கும் தலைவனாய், அவர் உள்ளத்தில் என்றும் நிலைபெற்று, அவர் வேண்டிய பொன்னை வழங்கியருளிய செய்தியை உலக மெல்லாம் அறியும்படியாகத் திருமுது குன்றம் என்ற திருத்தலத்து மணிமுத்தா நதியில் அவர் விடுத்த பொன் குவியலைத் திருவாரூர்ப் பெருங்குளத்தில் பெற்றுக் கொள்ளலாம் என்ற மிக்க மகிழச்சி தரும் செய்தியைக் கூறலும், அதுகேட்ட சுந்தரர் திருவாரூர் வந்து பரவை நாச்சியாரோடு நீர் என்றும் மிகும் கமலாலயமாகிய பெருங்குளத்தை அடைந்து, சிவபெருமானைத் தியானித்துப் பதிகம் பாடி நெஞ்சும் ஐம்பொறி-களும் அன்பினால் உருகப் பொன் குவியலை உள்ளவாறு சிறிதும் குறையாமல் கண்டு எடுத்துக் கொண்ட வரலாறு உள்ளது. மேகம் தவழும் பரவையாருடைய பெரிய இல்லத்தில், குண்டையூரில் வழங்கப்பட்ட நெல்லைப் பூதங்கள் கொணர்ந்து சேர்த்த வரலாறும் இறைவன் சுந்தரருக்காகச் செய்த அருட்செயலைத் தெரிவிப்பதாகும்.

அ.பொ: ஆசி - நல்வாழ்வு, வேண்டுதல் - விரும்புதல், பேரூர் - விருத்தாசலம் என்னும் திருமுதுகுன்றம், பெருங்குளம் - திருவாரூர்க்கமலாலயம், நீர் ஊர்தல் - நீர் மிகுதல், பதிகம் - 'பொன் செய்த மேனியினீர்' ( சுந்.தேவா.7473 ) என்ற பதிகம், கார் ஊரும் - மேகங்கள் தவழும்.

## 106. பேரொளி விளைத்த பெருமான்

திருஞான சம்பந்தர் ஆச்சாபு ரத்திலே
திருமணம் கொண்ட சாலைச்
சிவனருளை யன்றியே வேறொன்றும் வேண்டிலாச்
சிந்தையா ராத லாலே
உருஞான சம்பந்தம் உலகினுக் கெய்தவே
ஒருபதிகம் ஓதி நின்றார்
ஒளியொன்று சிவத்தின்மய மாகவே தோன்றியதன்
உட்புகுக வென்ற ருளவே
தருஞான சம்பந்தர் அனைவரு நுழைந்தபின்
தாம்கொண்ட மகளி னோடு
சத்திசிவ மொப்பவே அரியபே ரொளியிடைத்
தாம்புகுந் தார்ம றைந்தார்
கருஞான சம்பந்தம் தாம்வேண்டா ச்செல்வரைக்
கடவுளே வந்த ழைத்தான்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திருஞான சம்பந்தர் 'பெருமண நல்லூர்' எனப்படும் ஆச்சாபுரத்திலே திருமணம் செய்துகொண்டபோது, சிவபெருமான் திருவருளையன்றி இல்லற வாழ்க்கை முதலிய வேறு எவற்றையும் விரும்பாத உள்ளத்தவர். ஆதலாலே, மேம்பட்ட ஞானத் தொடர்பு உலகுக்கு ஏற்பட நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி நிற்க, சிவபெருமான் சொரூபமாகவே ஒளி ஒன்று தோன்ற 'அதன் உள்ளே புகுக'! என்று அசரீரி குறிப்பிடத் திருஞானசம்பந்தர், தம் திருமணத்துக்கு வந்த அனைவரும் அந்தச் சோதியினுள் நுழைந்த பின்னர் தாம் மணந்துகொண்ட தேவியோடு சக்தியும் சிவமும் ஒப்ப அரிய பேரொளியில் தாம் புகுந்து மறைந்தார். கருப்பையில் கொப்பூழ்த் தொடர்பு வேண்டாது பிறப்பறுக்க விரும்பிய ஞான-சம்பந்தராம் அடியவரைச் சிவபெருமானே வந்து தம்மிடம் அழைத்துக் கொண்டார்.

அ.பொ: ஆச்சாபுரம் - திருப்பெருமண நல்லூர், பதிகம் - 'காதலாகிக் கசிந்து' என்ற நமச்சிவாயப் பதிகம், கரு ஞாளம் - கருப்பையில் உள்ள கொப்பூழ்க் கொடி, சோதியில் கலந்தோர் - திருஞானசம்பந்தருடைய பெற்றோர் திருநீல நக்கர், முருகனார் முதலியோர்.

## 107. சூலைநோய் தந்து அப்பரை ஆண்டவன்

திலகவதி யார்தவச் செல்வநன் கறிதம்பி
சிவநெறியி னீங்கி யமணர்
சென்றநெறி புக்கதனை அதிகைவாழ் சிவபிரான்
தெரிந்தருளி அவரை மீட்க
அலகில்வலி மிக்கதொரு சூலைநோய் அவர்வயிற்
றடையவே செய்த ருளலும்
அமணர்மந் திரமொன்று மாற்றலில தாயொழிய
அதிகைவீ ரட்ட நாதன்
இலகுதிரு வாலயத் தெய்தி வயிற்றிடை
இருந்துதுயர் தருசூ லைநோய்
எடுத்தருள்க வெனவேண்ட எம்பிரான் அவரடிமை
இயையவே வருள்பு ரிந்தான்
கலகமிடு மவுணரவர் துன்புறப் புரிசூழ்ச்சி
கண்டனன் மாற்றி னனரோ
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திலகவதியாருடைய தவச் செல்வத்தை நன்கு அறிந்த அவர் தம்பியாராகிய மருள் நீக்கியார் சிவநெறியை விடுத்துச் சமணர் சென்ற நெறியில் சார்ந்த செயலைத் திருவதிகைத் தலத்தில் உகந்தருளியிருக்கும் சிவபெருமான் நோக்கி, அம்மருள் நீக்கியாரை மீண்டும் சிவநெறிக்கு மீட்க எல்லையில்லா வலியைக் கொடுக்கும் வயிற்று வலியை அவர் வயிற்றில் புகுத்த, அவ்வலியைச் சமணர் மந்திரம் ஒன்றும் போக்க இயலாததாகி ஒழிய, மருள் நீக்கியார், அதிகை வீரட்டானப் பெருமான் திருக்கோயிலை அடைந்து, 'வயிற்றிடைத் தங்கி துயர் தரும் சூலைநோயை நீக்கி அருளுக' என்று வேண்டச் சிவபெருமான் அவருடைய தீராத வயிற்று வலியைப் போக்கி அருள் புரிந்தார். வீணே ஆரவாரம் செய்த சமணர்கள் அவர் துன்புறுமாறு செய்த வஞ்சனைச் செயல்களை எம்பெருமான் நோக்கி அவையாவும் செயல் இழக்குமாறு மாற்றியருளினார்.

அ.பொ: திலகவதியார் - மருள் நீக்கியாருடைய தமக்கை மருள் நீக்கியார் - திருநாவுக்கரசரின் பிள்ளைத் திருநாமம், அலகில் - அளவு இல்லாத, சூலைநோய்-வயிற்றுவலி, இலகு - விளங்கும், கலகம் - அமைதியைக் குலைக்கும் செயல், சூழ்ச்சி - வஞ்சனை.

## 108. பெருந்துறையான் அருட்சிறப்பு

திருப்பெருந் துறையிலே திருப்பணி புரிந்துபுகழ்
திரட்டிய பெருந்தொண் டரைத்
திருவால வாயரசு அமைச்சியலை மதியாது
செய்தமுறை யாவு நீங்கக்
கருப்பெருந் துறைகழிய அவர்புரி திருப்பணிக்
கணக்கைநன் குணரு மிறைவன்
கண்களுக் கெட்டாத கோலமொ டிருத்தலாற்
கவின்மலியும் விழவு நாளில்
உருப்பெருந் துறைகண்ட மாணிக்க வாசகர்க்
குரிமையாத் தனது நிலையே
உவப்பினோ டளிக்கநற் றிருவிழாத் தோறுமவர்
ஊர்வலம் கொள்ளு கின்றார்
கருப்பெருந் துறையினைக் காலாற்க டப்பித்த
கடவுளே தாமா யினார்
காசினியை வாழ்விக்க வரநதி பெருக்கியருள்
காசிவிசு வேச சிவமே.

பொழிப்: திருப்பெருந்துறையிலே ஆலயத் திருப்பணி செய்து புகழ்பெற்ற பெரிய தொண்டராகிய வாதவூரரை, மதுரைமா நகர மன்னன், அவர் அமைச்சர் என்ற பதவியை மதியாது செய்த தண்டனைச் செயல்கள் யாவும் நீங்கவும், பிறவியாகிய பெரிய கடல் வற்ற அவர் செய்த திருப்பணியின் எண்ணிக்கையை நன்கு உணரும் சிவபெருமான் தான் உலகத்தார் கண்களுக்கு எட்டாத வடிவத்தோடு இருத்தலாலே, உலகவர் கண்களுக்கு அர்ச்சா மூர்த்தியாகக் காட்சி வழங்கும் வனப்பு மிக்க திருவிழாக் கொண்டாடும் நாளிலே பெருந்துறையில் ஆலயத்தின் உருவத்தை அமைத்த வாதவூரராகிய மாணிக்க வாசகருக்கு உரிமையோடு தன் சிவசாயுச்சியத்தை மகிழ்வோடு அளித்ததனால் மாணிக்கவாசகர் அப்பெரிய திருவிழாக்கள் தோறும் திருத்தல ஊர்வலத்தை மேற்கொண்டு வருகிறார். பிறவியாகிய பெரிய கடலைத் தன் திருவடிகளைத் தரிசிப்பித்துத் தாண்டச் செய்த கடவுளாகவே மாணிக்கவாசகம் மாறிவிட்டார்.

அ.பொ: பெருந்தொண்டர் - வாதவூரராகிய மாணிக்க வாசகர், திருவாலவாய் - மதுரைக்கு ஒரு பெயர், கருப்பெருந்துறை - பிறவிப் பெருங்கடல், கழிய - வற்ற, திருப்பணிக் கணக்கு - திருப்பணிகளின் எண்ணிக்கை, உரு - வடிவம் - ஈண்டு ஆலயம், தனது நிலை - சிவனோடு சீவன் இரண்டறக் கலக்கும் நிலை, கடப்பித்த - தாண்டி மறுகரை வரச்செய்த, கடவுளே தாம் ஆனார் - சீவனாகிய தாம் சிவனாகவே ஆகிவிட்டார்.

## 109. வாழ்த்து

ஒருநூறு செய்யுளால் நீதிபல பேசுதிறம்
உணர்த்திவரு சதக வகையுள்
ஒருபுதுமை தோற்றவரு காசிவிசு வேசனருள்
உள சதகம் நீடு வாழ்க!
தருநூறு கூடினும் தரவரிய பேரின்பு
தருகின்ற தேவ தேவன்
தண்ணருளை யாதிமுத லந்தம்வரை யோதுமிச்
சதகத்தை யுலகம் அறிக
திருநீறு கண்டிகை மனத்திலைந் தக்கரம்
சேரவாழ் தொண்டர் கணமே
சிவமயப் பொருள்தேற வேண்டியே தோன்றுமிச்
செய்யுள்நா ணாளும் வளர்க
வருநூறு வயதளவு வாழ்ந்தாலும் இறைவனருள்
மருவவே மாத வம்பூண்
மனிதகுலம் அகத்தோடு புறந்தூய தாகவே
வாழியர் பற்ப லாண்டே.

பொழிப்: சதகங்கள் என்ற பிரபந்தவகை நூறு செய்யுள்களாக அமைந்து பல நீதிகளும் கூறப்படும் திறத்தை உணர்த்தி வருவன ஆகும். அத்தகைய சதகங்களுள் ஒரு புதுமை புலப்பட இயற்றப்பட்ட காசி விசுவேசன் அருளால் தோன்றிய இச் சதக நூல் வாழ்க. கற்பக மரங்கள் நூறு கூடினாலும் வழங்க இயலாத பேரின்பம் நல்கும் தேவாதி தேவனுடைய காரணம் பற்றாக் கருணையைத் தொடக்கம் முதல் இறுதிவரை குறிப்பிடும் இச்சதகத்தை உலகத்தவர் வாசித்து இதன் செய்திகளை அறிவாராக. புறத்தே திருநீறும் உருத்திராக்கமும் அகத்தே திருவைந்-தெழுத்தின் தியானமும் சேர வாழ்கின்ற அடியார் குழாம் சிவமயமான பரம்பொருளைத் தெளிவாக

உணரவேண்டியே இயற்றப்பட்ட இச்செய்யுள் நூல் எக்காலத்திலும் செழித்து ஓங்குக. வளருகின்ற நூறு வயது வரை வாழ்ந்தாலும், இறைவன் திருவருள் பொருந்தி வாழ்க. மேம்பட்ட தவச் செயலை மேற்கொள்ளும் மனித குலம் உள்ளும் புறமும் தூயதாகப் பல்லாண்டு வாழ்க.

*அ.பொ:* தரு - கற்பகமரம், பேரின்பு - வீடுபேற்றின்பம், தேவதேவன் - பரப்ரஹ்மமாகும் பரமான்மா, தண் அருள் - காரணம் பற்றாத கருணை, நிர்ஹேதுக கிருபை, தேறல் - தெளிதல், செய்யுள் - செய்யுள் நூலாகிய சதகம்.

*குறிப்பு:* 108 - ஒரு சிறப்பான எண் ஆதலால் 100 பாடல் உடையதாக இருக்க வேண்டிய இந்நூல் 108 பாடல்களை உடையதாயிற்று, இராமாநுச நூற்றந்தாதி போல.

************

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

## அருஞ்சொல் பொருள் அகராதி

அக்கம் - கண் - 80
அகடு - வயிறு - 81
அகம் - மனம், வீடு - 92
அகல முடி - பரந்த மேட்டிடம் - 11
அகாரியம் - செய்யத் தகாத செயல் - 40
அகிலாண்ட நாயகி - இறைவி - 76
அங்கனையர் - மகளிர் - 86
அங்கயற்கண்ணி - மீனாட்சி - 36
அடர - நெருக்கமாக - 68
அடல் - ஆற்றல் - 31
அத்தன் - தலைவன் - கணவன் - 18
அத்தி - கடல் - 77
அத்திகிரி - சின்னகாஞ்சிபுரப் பெருமாள் கோயில் - 38
அதிதி - தேவர்களின் தாய் - 79
அதிரதர் - முதல்தரத்து வீரர் - 71
அந்தில் - அவ்விடத்தில் - 50
அப்புறம் - வேற்றிடம் - 100
அம்பகம் - கண் - 77
அம்பலத்தாடி - நடராஜர் - ( சிதம்பரம் ) - 1
அருணகிரி - ஒளிவீசும் மலை - 48
அருள் உரு - அர்ச்சை வடிவம் - 39
அருள் மாண்பு - வழங்குகின்ற நற்பண்பு - 63
அருள் வள்ளல் - சிவபெருமான் - 100
அலகில் - அளவு இல்லாத - 107
அலம் - கலப்பை - 85
அவதூதர் - ஆடை அணியாதவர் - 10
அவந்தி - முத்தி வழங்கும் நகரங்கள் ஏழில் ஒன்று - 5
அவனி - பூமி - 42
அவனிமகள் - பூமிதேவி - 47, 87
அவி - வேள்வித் தீயில் இடப்படும் பொருள்கள் - 96
அவுணர் - இராகுவும் கேதுவுமாய் இருவடிவு பெற்ற அசுரனான சம்கிகேயன் - 89
அவுணர் - அசுரர் - 88
அழகிய மணவாளன் - திருவரங்க உற்சவ மூர்த்தியின் பெயர் - 34
அறக்கற்பு - பிறருக்குத் தீங்கு தாரத அமைதியான கற்பு - 58.
அறமகன் - தருமபுத்திரன் - 86
அறிவர் - முக்காலமும் உணர்ந்த ஞானியர் - 9
அன்னமலை - சோற்றுக் குவியல் - 1
ஆகம் - உடம்பு - 57

இலகுதல் - விளங்குதல் - 35
இலை - வில்வம் - 22
இழிதல் - மேட்டிலிருந்து இறங்கி வருதல் - 70
இளையபெருமாள் - இலக்குவன் - 44
இளையவன் - கண்ணன் - 85
இறைதோழர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள் - 104
இனியபணி - தன்னலம் கருதாத வழுவிலா அடிமை - 46
ஈச்சுரம் - சிவன் கோயில் - 60
ஈசன் - எல்லோரையும் அடக்கி ஆள்பவன் - காப்பு; 65
ஈரத்த மனம் - இரக்க குணமுடைய உள்ளம் - 73
ஈரம் - உயிர் இரக்கம் - 52
உகிர் - நகர் - 81
உடலுதல் - மாறுபடுதல் - 31
உதரம் - வயிறு - 19
உரிமை - பிறருக்குப் பொதுவாகாது ஒருவனுக்கே உரிமையாக உள்ள செயல் - 81
உரு - வடிவம், ஆலயம் - 108
உருத்திரு - அழகிய வடிவமாகிய செல்வம் - 49
உருமால் - கட்டம் போட்ட பட்டு மேல் வேட்டி - 37
உவரி - கடல் - 37
உளவாய - இருக்கின்றன - 19
உன்னியார் - கருதியவர்கள் - 59
ஊர்தி - வாகனம் - 49
எய்ப்பு - இளைத்தல், களைத்தல் - 85
எயிலை - மதில்களை உடைய - 32
என்பு - எலும்பு - 15
ஏகன் - தனியாக இருப்பவன் - 50
ஏடகம் - நீரோட்டத்தை எதிர்த்து நீந்திய ஏடு தங்கிய இடம் - 56
ஏயர் - கலிக்காமர் - 104
ஏரகம் - கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள கந்தன் கோயில் குமார கோயில் - 52
ஏலம் - வெளிப்படையாகக் கூறுதல் - 93
ஏற்றம் - மேம்பாடு - 66
ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன - 1
ஐயை - பெண்தெய்வம் - 97
ஒழிப்பம் - போக்குவோம் - 88
ஒளிர்தல் - விளங்குதல் - 49
ஓ - வெள்ளப் பெருக்கின் ஓசை - 25
ஓங்காரமயன் - ஓங்கார வடிவினன் - 51
ஓதிமம் - அன்னம் - 48
ஓர் இரவு இருக்கை-ஓர் இரவு மாத்திரம் தங்கி இருந்த இடம்- 40

ஓலம் - ஓசை - 93
ககன் - சூரியன் - 98
ககாரங்கம் - ககரத்துக்கு இனமான கா கி கீ போன்ற இனமான பொருள்கள் - 24
கஞ்சபவன் - திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றிய பிரமன் - 4
கஞ்சு - தாமரை - 91
கடப்பாடு - முறைமை, நேரிய கடமை - 47
கடப்பித்த - தாண்டி மறுகரை வரச்செய்த - 108
கடபடம் உருட்டுபவர் - வெளி ஆடம்பரமுடையவர் - 34
கடலருகு இருந்த இறை - திருமறைக்காட்டுப் பெருமான் - 31
கடிஞை - பிச்சைப் பாத்திரம் - 30
கண்ணாயிரத்தவன் - இந்திரன் - 82
கண்ணுதல் - நினைத்தல் - 29; நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான் - 28, 76
கணிகண்ணன் - ஆழ்வாரின் சீடன் - 40
கண்கலுழி - கண்ணீர்ப் பெருக்கு - 29
கணிகன் - சோதிடர் - 43
கணை - அம்பு - 44
கத்தன் - எல்லோருக்கும் தலைவன் - 18
கதம் - வெகுளி - 41
கதம் பரவ - சைவசமய உண்மை விரைவில் பரவுமாறு - 33
கதி - நல்வினைப் பேறு - 3
கந்தன் - ஆறு உருவமும் ஒருருவமாகப் பார்வதியால் சேர்க்கப்பட்டவன் - 53
கந்து - பற்றுக்கோடு - 50
கப்பரை - பிச்சை எடுக்கும் ஓடு - 100
கம்பித்தல் - நடுங்குதல் - 99
கம்பியா நெஞ்சம் - உறுதியான உள்ளம் - 99
கம்பை - புராண காலத்தில் காஞ்சிமா நகரில் ஓடிய ஆறு - 11
கமம் - நீர் நிறைவு - 70
கமலபவன் - செந்தாமரையில் தோன்றிய பிரமன் - 51
கமலாலயம் - திருமகள் இருப்பிடமான திருவாரூர் - 1; திருவாரூர் - 26
கமலை - திருவாரூர் - 26
கமை - க்ஷமை, பொறுமை - 8
கயிலைநாதன் - சிவபெருமான் - 64
கரஞ்சோதி - கையில் அனலை உடையவர் - 103
கரணியம் - செய்யத்தக்க செயல் - 80
கரன் ஆகியோர் - கரதூடண, திரிசிரசு ஆகிய இராவணன் தம்பியர் - 84
கராசலம் - கைகளை உடைய மலை போன்ற யானை

சங்கை - ஐயப்பாடு - 64
சடகோபர் - நம்மாழ்வார் - 61
சத்தன் - உண்மை வடிவானவன் - 18
சம்பு - நன்மையை அருளும் சிவபெருமான் - 28; நாவல் மரம் - 76
சமய முடி - மதத்தின் முடிவான செய்தி - 66
சமர் - வாலி சுக்கிரீவனோடு செய்த போர் - 14
சமரதர் - மூன்றாம் தரத்து வீரர் - 71
சரணம் - நமக்கு அடைக்கலம் வழங்கும் பொருள் - 61
சரணாகதர் - அடைக்கலம் என்று வந்தடைந்தவர் - 67
சராசந்தன் - சரை என்ற பேயினால் உயிர் வழங்கப்பட்ட பெருமன்னன்; கம்சனுடைய மாமனார் - 4
சல்லேகனம் - ஆர்த்த ரௌத்யானங்களையும், குரோதம் முதலிய பரிணாமங்களையும், புறப்பற்றுக்களையும், உணவையும் துறந்து தர்ம தியானத்தோடு இறப்பது.
சற்சங்கம் - சத்சங்கம், சான்றோர் குழாம் - 8
சாக்கியர் - பௌத்தர், சமணர் - 102
சாது - தக்கோர் - 66
சாமகோடி - சாமவேத மந்திரம் - 2
சாமாதி - சாமவேதம் முதலியன - 96
சாமிநாதன் - சிவபெருமானுக்கும் தலைவன் - 51
சார்ங்கபாணி - வில்லைக் கையிலேந்திய திருமால் - 20
சார - அணுகிவந்து கடக்க - 71
சாரங்கபாணி - மானைக் கையிலேந்திய சிவபெருமான் - 20
சாரதி - தேர் ஓட்டி - 42
சாலிவாடி - திருநெல்வேலி - 60
சிகரி - மலை - 18
சித்தன் - அறிவு வடிவானவன் - 18
சித்தி - உறுதிப்பாடு - 8; உறுதியாகப் பெறுதல் - 38
சித்திரகூடம் - தில்லைக் கோயிலின் உட்கோயிலாகிய திருமால் கோயில் - 41
சிதம்பரம் - ஞான ஆகாயம் - 33
சிந்திதபலம் - நினைத்த பயன் - 88
சிரஞ்சோதி - மேம்பட்ட ஞான ஒளி - 103
சிலை - கல் வடிவம் - 54;
சிலை மரத்தால் செய்யப்படும் வில் - 44
சிவநிசி - பட்சசிவராத்திரி, மாத சிவராத்திரி, மாசி சிவராத்திரி என்பன - 64
சிவமயம் - சிவபெருமான் எங்கும் பரவியுள்ள நிலை - 45
சிவானந்தர் - அண்மைக்காலம் வரை வாழ்ந்த துறவி ஒருவர் - 9
சிற்சபை - ஞானசபை - 33
சிற்றம்பலத்து ஆடி - நடராசன் - 41

சிற்றம்பலம் - ஞான சபை - 32
சீர்த்த - புகழுடைய - 62
சீலர் - நல்லொழுக்கமுடையவர் - 38
சுதாமன் - குசேலனின் இயற்பெயர் - 5
சுந்தரர் பாடியவை - ஏழாம் திருமுறை - 26
சூலைநோய் - வயிற்றுவலி - 107
சூழ்ச்சி - வஞ்சனை - 89; 107
சூளிகை - கருவறையின் மேலுள்ள விமானத்தின் தூபி - 11
செம்மை - தாய் அன்பினால் உண்டான சிவப்பு - 47
செய்யுள் - செய்யுள் நூலாகிய சதகம் - 109
செழுத்தல் - பகைத்துப் போரிடல் - 7
சேதுநாடு - இராமநாதபுர மாவட்டம் - 45
சைவமறை - சொக்கநாதப் பெருமான் - 93
சொக்கம் - அழகு - 63
சொன்னம் - பொன் - 19
சொன்ன வண்ணம் செய்த பெருமான் - திருவெஃகா இறைவனின் பெயர் - 40
சோமாசி - சோமயாகம் செய்தவர் - 96
ஞானப் பூங்கோதை - அம்பிகை - 77
தண் அருள் - காரணம் பற்றாத கருணை -109
தண்டம் - கோல் - 51
தத்தாத்திரேயர் - அத்திரி முனிவருக்கும் அநசூயைக்கும் மகனாகத் தோன்றிய முனிவர் - 10
தத்துவம் - உண்மைச் சூழ்நிலை - 71; உண்மைப்பொருள் - 86
தந்தை - பரஞ்சோதி எனப்படும் சிறுத்தொண்டர் - 103
தம்பிரான் தோழர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள் - 99
தமர் - தன் அடியார்கள் - 60
தமரம் - ஒலி - 22
தமிழ் ஓசை - தமிழ்ப் பாசுரங்கள் பாடும் ஒலி - 35
தராதலம் - பூமி - 58
தரு - கற்பக மரம் - 60, 72, 109
தருணம் - சந்தர்ப்பம் - 48
தவவழக்கர் - தவம் செய்வதனையே தம் இயல்பாக உடையவர் - 24
தன்வந்திரி - தேவர் மருத்துவர் - 89
தனது நிலை - சிவனோடு சீவன் இரண்டறக் கலக்கும் நிலை- 108
தா - குற்றம் - 81
தாக்கிய - தாக்கும் பொருட்டு - 102
தாசரதி - தசரதன் மகன் இராமன் - 83
தாணு - நடு தறி வடிவினனாய சிவபெருமான் - 58
தாபித்தல் - நிறுவுதல் - 66
தாமம் - கயிறு - 19

தாமோதரன் - வயிற்றில் கயிறு கட்டப்பட்டவனாகிய கண்ணன் - 19
தாய் - திருவெண்காட்டு நங்கை - 103
தாருமயம் - கற்பக மரத்தின் இயல்பாகிய கொடை - 6
தானை - காலாட்படை - 72
திதி - அசுரர்களின் தாய் - 79
திதிமைந்தர் - திதியின் புதல்வர்களான அசுரர்கள் - 88
திமிங்கலம் - கடல்வாழ் உயிரினம் - 44
திரிபுரம் - மூன்று கோட்டைகள் - 31
திரிபுரர் - மும்மதில்களை உடைய அசுரர் - வித்துன்மாலி, கமலாட்சன், தாரகாட்சன் 45
திரு - இறைவன் திருவடிகளைப் போற்றும் செல்வம் - 33
திரு எட்டெழுத்து - ஓம் நமோ நாராயணாய என்பது - 81
திருச்சீரலைவாய் - ஆலயத்தின் பெயர் - 50
திருச்செந்தூர் - தலத்தின் பெயர் - 50
திருத்தளி - திருக்கோயில் - 20
திருநாவலூரர் - திருநாவலூரில் அவதரித்த சுந்தரர் - 27
திருப்பணிக் கணக்கு - திருப்பணிகளின் எண்ணிக்கை - 108
திருமூல நாயனார் - பத்தாம் திருமுறையாகிய திருமந்திர மாலையை அருளியவர் - 21
திருவாலவாய் - மதுரைக்கு ஒரு பெயர் - 108; மதுரையில் உள்ள சிவபெருமான் கோயில் - 37
திருவெண்காடர் - பட்டினத்தாரின் இயற்பெயர் - 30
திரை - கடல் அலை - 59
திலகவதியார் - மருள் நீக்கியாருடைய தமக்கை - 107
திவம் - மேல் உலகம் - 62
திறம் - பல்வகை - 60
தீர்த்தன் - தூயவன் - 42
துணுக்குறல் - நடுங்குதல் - 12
துனைந்த - விரைந்த - 80
துறவரசர் - மடாதிபதிகளான துறவியர் - 20
தூ - பற்றுக்கோடு - 20, 76; அடைக்கலம் தருதல் - 76
தூணி - அம்புப் புட்டில் - 44
தெளிவம் - தெளிவாக உணர்வோம் - 88
தென்திசைய - தெற்குத் திசையில் உள்ள - 34
தேசு - ஞான ஒளி - 79
தேமுத்தி - இறைவனை அணுகி அடையும் முத்தி நிலை - 21
தேவகுலம் - கோயில் - 57
தேவதேவன் - பரப்ரஹ்மமாகும் பரமான் மா - 109
தேவமறை - நால்வேதம் - 22
தேவாசிரியம் - திருவாரூர்க் கோயிலில் அடியவர் கூடும் மண்டபம் - 104
தேவாதிதேவன் - திருமால் - 87

பனவர் - பார்ப்பனர் - 50
பறைய - விட்டு நீங்க - 43
பாகம் - பங்கு - 89
பாகவதர் --திருமால் அடியார் - 38
பாட்டு - திருமுருகாற்றுப்படை - 53
பாணபத்திரன் - மதுரையில் வாழ்ந்த இசைப்புலவனான சிவத்தொண்டன் - 94
பாணி - கை - 51
பாதல கங்கை - சீசைலத்தின் கீழே ஓடும் புண்ணிய நதியாம் கிருஷ்ணையாறு - 65
பாதலம் - கீழ் உலகம் - 82
பாயல் - ஆதிசேடனாகிய படுக்கை - 38
பால் - தூய்மையும் இனிமையும் - 63
பார்த்தன் - அருச்சுனன் - 98
பாரம் - சுமை - 35; உலகப் பற்றால் ஏற்படும் மனத்துச் சுமை 73
பாலாழி - பாற்கடல் - 89
பாவியர் - துரியோதனன் முதலியோர் - 42
பிட்சாடனர் - பிச்சைக்காகப் பல இடங்களிலும் அலைபவர் - 92
பித்தன் - பெரும்பற்று உடையவன் - 91
பிரமபரம் - வண்டு - 65
பிரமராம்பிகை - வண்டு நிலையினளாகிய இறைவி - 65
பிறங்கல் - மந்தரமலை - 88
பிறங்கு - விளங்கும் - 60
பீடு - பெருமை - 53
பீழை - துயரம் - 88
புகல் - குறிப்பிடுகின்ற - 73; பற்றுக்கோடு, சொல்லுதல் - 24
புங்கவர் - தேவர் - 88
புயல் - மழை, பெருங்காற்று - 59
புரந்தரன் - இந்திரன் - 88
புல் - அறுகம்புல் - 22
புலவர் - அறிஞர் - 62; ஞானியர் - 92
புறகு - புறக்கணிக்கத்தக்கவர் - 104
புறம் ஞான்ற - முதுகுப்புறம் தொங்கிய - 87
பெண்மை - கட்புலனாயதோர் அமைதித் தன்மை - 59
பெருங்குளம் - திருவாரூர்க் கமலாலயம் - 105
பெருந்தொண்டர் - வாதவூரராகிய மாணிக்கவாசகர் - 108
பெரும்பேறு - மேம்பட்ட செல்வம் - 57
பேரின்பு - வீடுபேற்றின்பம் - 109
பேரூர் - விருத்தாசலம் என்னும் திருமுதுகுன்றம் - 105
பேறு - பாக்கியம் - 59; செல்வம் - 65
பொருள் - இயற்கையில் அமைந்த செல்வங்கள் - 71

பொறாள் - பொறுக்க இயலாதவளாகி - 87
பொறை - பாரம் - 87
பொன்னின் ஒளி தெளிதல் - பொன் ஒளியில் மயங்கிப் பொன்னைத் தேடித் திரட்டுதல் - 5
போக்கிலா நிலை - அழிதல் இல்லாத வீடுபேற்று நிலை - 24
போதல் வருதல் - இறத்தல் பிறத்தல் - 36
போய் - மிகவும் - 87
போற்றிகள் - முருகனுக்கு ஆராதனை செய்யும் அந்தண இனத்தார் - 50
போற்றுதல் - வேண்டுதல் - 69
மகவு - மக்கட்பேறு - 95
மகளிர் - திருமகளும் நாமகளும் - 77
மகி - உலகம் - 23
மங்களாசாசனம் - பல்லாண்டு பாடுதல் - 43
மச்சம் - மீன் - 78
மடைப்பள்ளி - கோயிலின் நிவேதன அமுது சமைக்கும் இடம்- 6
மண்டபம் - திருவிழாவில் பெருமான் வீற்றிருக்கும் மண்டபம்- 37
மண்தலம் - நில உலகு - 47
மத்திட்டு - கடைந்து - 90
மதுமயம் - இன்பமயமான - 85
மதுரகவி - நம்மாழ்வார் சீடர் - 61
மந்திரசித்தி - மந்திரம் முழு ஆற்றலையும் உற்றுப் பயன் தருதல்- 54
மந்திரம் - திருவைந்தெழுத்து - 98
மயில் - ஆண்மயில் - 32
மருட்காட்சி - மயக்கம் தரும் தோற்றம் - 74
மருள் நீக்கியார் - திருநாவுக்கரசரின் பிள்ளைத் திருநாமம் - 107
மல்லர் - சாணூரன், முட்டிகன் என்போர் - 7
மல்லிகார்ச்சுனபுரம் - சீசைலத் திருத்தலம் - 65
மலர் - செந்தாமரையும் வெண்டாமரையும் - 47
மலி - துயரம் மிக்க - 84
மலைமகள் - இமவான் மகளாகிய அம்பிகை - 11
மலைமங்கை - பார்வதி - 57
மறத்தினர் - பாவியர் - 87
மறைமுடி - உபநிடதம் - 9
மன்னிஆர் - நிலைபெற்றுப் பொருந்திய - 59
மாக்கள் - மன அறிவு இல்லாதவர் - 46
மாடம் - பல அடுக்குக் கட்டிடம் - 13
மாதேவன் - சிவபெருமான் - 58
மாய்த்தவன் - அழித்தவன் - 45
மாயன் - ஆச்சரியமான குணங்களை உடைய் திருமால் - 41; வியத்தகு செயல்களை உடைய திருமால் - 82
மாயை - ஞானம்; மாயாவயூ நம் ஞானம் - 8
மாரதர் - இரண்டாம் தரத்து வீரர் - 71

மாலை - வரிசை - 43
மாவலி - பிரகலாதனுடைய பெயரனான மகாபலி - 82
மாளிகா - மாளிகை - 12
மாளிகை - அழகான வீடு - 13
மானத சரோவர் - கயிலையை அடுத்துள்ள வெப்ப நீரூற்றுள்ள அழகிய ஏரி - 67
மானம் - கருவறையின் மீது எழுப்பப்படும் விமானம் - 58
மான்மியம் - பெருமை- 9, 58
மானவர் - மனிதர் - 2
மீதலம் - மேல் உலகம் - 65
முகுந்தன் - மோட்சம் வழங்கும் திருமால் - 11
முடுக்கர் - அகலக் குறைவான சந்து - 19
முடுகுதல் - விரைந்து செல்லுதல் - 95
முடுகும் - விரும்பி வீற்றிருக்கும் - 18
முத்தர் - வீடு பேறடைய முயலும் முமுக்ஷுக்கள் - 11
முத்தமிழ் - இயல் இசை நாடகம் - 100
முதுமை - மூதறிவு - 53
மும்மை உரு - இலிங்கத்தின் அடிப்பாகமாகத் தரையில் மறைந்து இருப்பது பிரமபாகம். இடைப்பாகமாக ஆவுடையாருள் மறைந்திருப்பது விஷ்ணு பாகம், வெளியே அடியார்கள் தரிசிக்கக் காட்சி வழங்கும் தலைப்பாகம் உருத்திர பாகமாகும்- 55
முரசு - வீரம், நியாயம், தியாகம் இவற்றிற்காக முழங்கப்படும் பெரும்பறை - 83
முரணிய - மாறுபட்ட - 80
முருகுபுகல் - முருகன் விரும்பித் தங்கியிருத்தல் - 53
முன்பு - வலிமை - 16
முனிவர் - கலைக்கோட்டு முனிவர் - 84; வான்மீகி முனிவர் - 84
மூவர் - திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்ற மூவர் - 18, பிர்மா, விஷ்ணு, ருத்திரர் - 81
மூகம் - பன்றி வடிவில் வந்த அசுரன் - 98
மெய்ப்பொருள்-பதி, பசு, பாசம் ஆகிய உண்மைப்பொருள்கள்-24
மெய்யப்பன் - சத்தியமூர்த்தி - 63
மைந்தன் - சீராளன் - 93
மோகம் - மயக்கம் - 87
யது - சந்திரகுலத்து மன்னர் தலைவருள் ஒருவன் - 4; யயாதிக்குத் தேவயானை வயிற்றில் பிறந்த சந்திரகுலத்து அரசன் - 85
யாழ்நெறி - இசைத்துறை - 74
யாழ் பயிலும் அன்பர் - திருநீலகண்ட யாழ்ப்பாணர் - 28
வடமொழி - சௌந்தர்ய லகரியின் 75-ஆம் சுலோகம் - 29
வந்தி - பிட்டு வாணிச்சியின் பெயர் - 93
வரஞ்சோதி-மேம்பட்ட சோதி வடிவினனாகிய சிவபெருமான்-103

வராகம் - பன்றி - 48
வரை - மலை - 32
வவ்வுதல் - வலியக் கவர்தல் - 46
வழுத்துதல் - புகழ்தல் - 69
வளநாடு - வளமுடைய ஈழநாடு - 34
வளர்கரை - உயர்ந்த ஆற்றங்கரை - 97
வளையவருதல் - வலமாகச் சுற்றி வருதல் - 67
வன்மீகநாதர் - புற்றிடம் கொண்ட பெருமான், சுயம்பு மூர்த்தி -26
வாக்கமுது - அமுதம் போன்று இனிமையாகப் பாடும் திறன் - 29
வாதவூரர் - மாணிக்கவாசகர் - 45
வாய் அப்பன் -வாய்தோத்திரம் செய்யச் செய்யும் தலைவன்- 63
வாயுமைந்தன் - அனுமன் - 19
வாரணாசி - காசி நகர் - 1
வாரி - நீர்வெள்ளம் - 56
வானர வீர மதுரை - வானரவீரர் கோயிலமைத்து வழிபட்ட மதுரை என்ற திருத்தலம் 16
விசயன் - அருச்சுனன் - 85, 98
விடங்கன் - அழகன் - 26
விது - சந்திரன் - 85
விதேகன் - விதேக நாட்டு மன்னன் சனகன் - 84
விநாயகன் - தனக்குமேல் வேறொருவன் தலைவனாக இல்லாதவன் - காப்பு
விபினம் அகம் - காட்டின் உள்ளிடம் - 84
விரசுதல் - பலவாகக் கலத்தல் - 83
விழைவு - விருப்பம் - 43
விளித்தல் - பெயரிட்டு அழைத்தல் - 14
வீழ்தல் - தரையில் விழுந்து வழிபடுதல் - 46
வீழ்ந்திருத்தல் - படுத்துக் கிடத்தல் - 97
வீற்றிருத்தல் - பெருமிதத்தோடு உகந்தருளியிருத்தல் - 16
வீறு - வேறொன்றிற்கும் இல்லாத அழகு - 16
வெட்டுண்ட அரவு - சம்கிகேயன் என்ற அசுரன் வெட்டுண்டு இராகு கேது என்ற இரு பாம்புகளாகி உயிர் பிழைத்தவன் - 91
வெப்பு - காய்ச்சல் நோய் - 56
வேண்டுதல் - விரும்புதல் - 105
வேணி - சடைமுடி - 48
வேதம் - கடல் - 8
வேள்வி - மகப்பேறு வேள்வி - 84
வையம் - உலகம் - 63.

****************

# பின்னிணைப்பு

## நூலில் இடம்பெற்ற திருத்தலங்களின் குறிப்பு (எண் - பாடல் எண்ணைக் குறிக்கும்)

### 1. அண்ணல் வாயில் 75

இது தமிழ்நாட்டில் புதுக்கோட்டையிலிருந்து 15 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள சிறிய ஊர். திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்தில் 'அண்ணல் வாயில்' என்று காணப்படுகிறது. அன்ன வாசலென்னும் அண்ணல் வாயிலும், அதன் பகுதியான சித்தன்னவாசல் என்னும் சிற்றண்ணல் வாயிலும் சேர்ந்த பழம்பதி; இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது அங்குள்ள சான்றுகளால் விளங்கும். இம்மலையடிவாரத்தில் முதுமக்கள் தாழி, நடுகல் முதலியவை உள்ளன. மலைக்குகைகளில் அமண் பாழி உள்ளது. சமணர் கோயிலில் அமைக்கப்பட்ட கற்படுக்கைகளை யொட்டியுள்ள கல்வெட்டுக்களில் மிகப் பழமையானது பிராமியெழுத்தில் எழுதப்பட்ட தமிழ்மொழிக் கல்வெட்டு. இக்கல்வெட்டிலிருந்து இவ்வூரின் பெயர் சிந்துப் போசில் எனவும், இவ்வதிட்டானம் இயோமி (ஓய்மா) நாட்டுக் குமட்டூர்ப் பிறந்தான் காவிதி ஈதனுக்குச் சித்துப் போசில் இளையர் குடி மக்களால் செய்யப்பட்டது எனவும் அறியலாம். இங்குக் காணும் பல்லவர் திருப்பணிகளைக் கொண்டு இத்தளி, இம்மன்னன் அப்பர் சுவாமிகளின் அருள் பெற்றுச் சைவனோடு முன் சமணனாயிருந்த காலத்தில் இயற்றிய பல்லவர் குகைத்தளி என்பர்.

### 2. அத்திகிரி அருளாளன் - 38 (திருக்கச்சி)

காஞ்சிபுரம் நகரிலிருந்து மூன்று கிலோமீட்டர் தொலைவில் சின்னக்காஞ்சிபுரத்தில் வரதராஜ பெருமாள் கோவில் உள்ளது. பெருமாள் சந்நிதி 'அத்திகிரி' என்ற குன்றின்மீது காணப்படுகிறது. ஐராவதம் மலை வடிவங்கொண்டு வழிபட்டதனால் அத்திகிரியெனப் பெயர் பெற்றது என்பர். பெருமாள் நின்ற நிலையில் காட்சி தருகிறார். தாயார் பெயர் பெருந்தேவி. ஆழ்வார்களால் பாடப்பட்ட கோயில். இக்கோயிலில் அனந்த தீர்த்தம் என்ற புனிதக்குளம் உள்ளது. இக்குளத்திலுள்ள நான்கு கால் மண்டபத்தில் நீருக்கு அடியில் ஒரு வெள்ளிப் பெட்டியினுள் ஸ்ரீஅத்தி வரதர் வைக்கப்பட்டிருக்கிறார். நாற்பதாண்டுகளுக்கு ஒருமுறை திருக்குளத்தில் நீர் இறைக்கப்பட்டு ஸ்ரீஅத்தி வரதர் காட்சிக்கு வைக்கப்படுகிறார்.

### 3. அத்தினபுரம் - 13

உத்தரப்பிரதேசத்திலுள்ள மீரட்டிற்கு வடகிழக்கே சுமார் 32 கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஒரு பழைய ஊர். கௌரவர் களுடைய தலைநகரமாயிருந்தது என்றும், அஸ்திகன் என்னும்

அரசன் உருவாக்கியதால் இப்பெயர் பெற்றது என்றும், யானைகள் மிகுதியாக இருந்தமையால் இப்பெயர் பெற்றது என்றும் கூறுவர். இப்போது 'டில்லி' என்று வழங்கப்படுகிறது.

### 4. அயோத்தி - 3

இராமன் பிறந்த ஊர் என்றும், ஏழு முத்தித் தலங்களுள் ஒன்று என்றும் கூறுவர். உத்தரப்பிரதேசத்தில் 'கோக்ரா நதிக்கரையில்' பைஜாபாத்துக்கு அருகில் இருக்கிறது. ஆண்டுதோறும் இராம நவமிக்கு மக்கள் வருவர். இங்கு ஜைனக் கோவில்கள் உள்ளன. இதற்கு 3.2 கிலோமீட்டர் தொலைவில் சரயு நதிக்கரையில் வைணவத் திருப்பதி உள்ளது.

சுவாமி: சக்கரவர்த்தித் திருமகன் இரகு நாயகன்
தாயார்: சீதாப் பிராட்டியார்

### 5. அரித்துவாரம் - 10

இது உத்தரப் பிரதேசத்தில் சகரான்புரிக்கு அருகிலுள்ளது. இந்துக்களின் புண்ணியத்தலம். இங்குதான் கங்கை நதி சமவெளிப் பகுதியில் நுழைகிறது. இங்கு 'அரியின் திருவடி' எனப்படும் குளிக்கும் துறையும், அதை அடுத்துள்ள கங்கத் துவாரா கோயிலும் உள்ளன. இங்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பமேளா விழா நடைபெறுகிறது. இதற்கு முற்காலத்தில் கபிலா, மோயோலா என்ற பெயர்கள் வழங்கப்பட்டன.

### 6. அலர்மேல் மங்கைபுரம் - 47

திருவேங்கடமலை ( திருப்பதி ) யின் அடிவாரத்திலிருந்து 3 கிலோமீட்டர் தொலைவிலுள்ள திருச்சானூரில் உள்ளது. இங்கு அலர்மேல் மங்கைத் தாயார் சந்நிதி உள்ளது. அடிவாரத்திலுள்ள கீழைத் திருப்பதியில் கோவிந்தராசப் பெருமாள் கோயில், இராமர் கோயில் முதலியன உள்ளன.

### 7. அவந்தி - 5

முத்தி நகரங்கள் ஏழனுள் ஒன்றாகக் கூறப்படுவது. இங்கே ஆலமரம் ஒன்றிருப்பதாகவும், அதன் அருகிலுள்ள தீர்த்தத்தில் முழுகி அங்கிருக்கும் சிவபெருமானை வழிபடுவது முத்தி தருமென்றும் கூறுவர். இந்நகரை 'உச்சயினி' என்று சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் கூறுவார். இது மாளவ தேசத்தில் ஒரு பட்டணம் என்றும், இங்கே கண்ணன் பலராமன் ஆகியோர் சாந்தீப முனிவரிடம் கல்வி கற்றனர் என்றும் விஷ்ணு புராணம் கூறும். இது பிற்காலத்தில் மாளவம் என்னும் பகுதியின் பெயராகவும், உச்சயினி நகரின் தலைநகரமாகவும் ஆயின.

## 8. ஆழ்வார்த் திருநகரி - 61

தாமிரபருணி ஆற்றின் தென்கரையில் பாளையங்கோட்டை-யிலிருந்து திருச்செந்தூர்ச் செல்லும் சாலையில் உள்ளது. நம்மாழ்வார் தோன்றிய ஊர். அவருடைய மூதாதையருள் ஒருவரான குருகன் இந்நகரைத் தலைநகராகக் கொண்டு திருவழுதி நாட்டை ஆண்டதால் இதற்குக் 'குருகாபுரி' என்று பெயர் வந்தது என்றும் கூறுவர். திருக்குருகூர் என்ற பெயரும் உண்டு. நம்மாழ்வார் பிறப்பதற்கு முன் 'திருநகரி' என்பதே ஊரின் பெயராக இருந்தது.

## 9. ஆனைமலை - 72

நீலகிரி மலைக்குத் தெற்கே 72 கிலோமீட்டர் தொலையில் உள்ள 'சகயாத்ரி' மலைத்தொடரின் ஒரு பகுதியாகும். இதன் சிகரமான ஆனைமுடிதான் தென்னிந்தியாவில் மிக உயரமான சிகரம் ( 8850 அடி ). இங்கு யானைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இம்மலையில் சமணர்கள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

## 10. இமயமலை - 70

இந்தியாவின் வடக்கு எல்லையாக அமைந்திருக்கும் மலைத் தொடர். ஹிமாலயம் என்னும் வடசொல் 'பனியின் இருப்பிடம்' என்று பொருள்படும். இந்தியாவையும் திபெத்தையும் பிரிக்கும் மதில்போல் அமைந்துள்ளது. இது காஷ்மீருக்கு வடக்கிலும் வடமேற்கிலும் இந்தியாவை நோக்கி வரும் ஆறுகளையும் மத்திய ஆசியாவை அடையும் ஆறுகளையும் பிரிக்கிறது.

## 11. இராமேசுவரம் - 14

இராமநாதபுரம் மாவட்டத்தில் பாக் ஜலசந்தியிலுள்ள ஒரு தீவிலுள்ள பட்டணம். இராவணன் முதலியோரைக் கொன்றதால் ஏற்பட்ட பழி தீர இராமன் சிவலிங்கத்தை நிறுவி வழிபட்ட இடம் என்று தேவாரம் கூறுகிறது. சீதை தன் கையால் பிடித்து வைத்ததும் இராமன் பூசித்ததுமான இலிங்கம் இராமலிங்கம். இங்குள்ள சிவன்கோயில் இராமனால் நிறுவப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. கோயிலுக்குக் கிழக்கே இருக்கும் கடல் அக்னி தீர்த்தம் என்று பெயர் பெறும், கோயிலுக்குள் இருப்பது கோடி தீர்த்தம். இறைவி பெயர் மலைவளர் காதலி ( பர்வத வர்த்தினி ) சேது மாதவப் பெருமாள் சந்நிதி தனியாக இருக்கிறது.

## 12. இருடிகேசம் - 9

அரித்துவாரத்துக்கு 30 கிலோமீட்டர் தொலைவில் இமயமலைச் சாரலில் உள்ள சிவத்தலம்.

### 13. உலகளந்த பெருமாள் - 39

காஞ்சிபுரத்திலுள்ள புகழ்பெற்ற வைணவ ஆலயங்களுள் ஒன்று. காமாட்சி அம்மன் சந்நிதிக்குப் பின்புறம் உள்ளது. முன்பு இது 'ஊரகம்' என வழங்கப்பட்டது. பெருமாள் உரக ரூபியாய்ச் சேவை சாதித்தபடியால் 'ஊரகம்' என்று பெயர் பெற்றது. உலகளந்த பெருமாள் கோயில் என்று பெருவழக்காக வழங்கிவருகிறது. இங்குப் பெருமானின் வலதுகால் மகாபலியின் தலை மேல் இருக்கிறது இடது கால் தென்திசைப் புறமாய் நீட்டப்பட்டிருக்கிறது. அர்த்தமண்டபத்தின் பின்புறமாகப் பெருமாள் பாம்பு வடிவில் எழுந்தருளியிருக்கிறார். தாயார் அமுதநாயகி.

### 14. கதிர்காமம் - 68

தென்னிலங்கையில் ஊவை மாகாணத்தின் தென்கோடியில் உள்ளது. கதிர்காமம் இருக்கும் பகுதி மாணிக்கக் குன்றம் எனப்படும். இது இந்துக்களுக்கும், புத்தமதத்தினருக்கும் புனிதமான இடமாகும். புத்த பகவான் போதி ஞானம் பெற்றபின் இலங்கைக்கு வந்து 16 இடங்களில் தியான நிட்டையில் இருந்தார் என்பர். அவற்றுள் ஒன்று இந்தக் கதிர்காமம். இக்கோயில் தூது குமுணு என்னும் அரசனால் கட்டப்பட்டது என்பர். ஏலேலசிங்கன் என்னும் மன்னனை வெல்லக் கதிர்காம முருகன் உதவியதாகவும் அதன் விளைவாக அவன் கோயில் கட்டியதாகவும் தெரியவருகிறது. கதிர்காம முருகன் கோயில் கருவறையில் தெய்வத் திருமேனி இல்லை. ஆனால் திருவுருவம் இங்கு இருந்தது என்றும், இதன்பின்னர் எங்கோ கொண்டுபோய் மறைக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்றும் ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்; கருவறையின் முன் மண்டபத்தின் முன்னர் முருகப்பெருமானின் திருவுருவம் எழுதப்பட்ட திரைச்சீலையொன்று தொங்குகிறது. இதுவே வழிபாட்டுக்குரியதாய் விளங்குகிறது. உள்ளே பெட்டி ஒன்று உள்ளது. திருவிழாவில் இதனையே யானை மேல் ஏற்றி ஊர்வலமாகக் கொண்டு வருவர்.

### 15. கன்னியாகுமரி - 59

தமிழ்நாட்டின் தென்கோடியில் முக்கடல் சங்கமிக்கும் இடத்தில் கன்னியாகுமரி உள்ளது. புண்ணியத் தலங்களுள் ஒன்று. இங்குள்ள பகவதி அம்மன் கோயில் பழமை மிக்கது. சிவபெருமானைக் கணவனாக அடையப் பகவதி தேவி, கன்னி என்ற அவதாரத்தில் கன்னியாகுமரிப் பாறையில் ஒற்றைக்காலில் தவமிருந்ததாகவும், மணமகன் குறிப்பிட்ட காலத்தில் வந்து சேராததால் இவ்வம்மன் கன்னித் தெய்வமாக ஆகிவிட்டார் என்றும் புராண வாயிலாக அறியப்படுகிறது. கருவறையில் பகவதி அம்மன் கிழக்கு நோக்கித் தவக்கோலத்தில் காட்சி தருகிறார்.

### 16. காசி - 1

உத்தரப்பிரதேச மாநிலத்தில் கங்கை நதிக்கரையில் இது அமைந்துள்ளது. விந்திய மலையிலிருந்து தோன்றும் வருணா அசி

என்ற இரு சிற்றாறுகளும் காசிமாநகரின் வடபுறத்தும் தென் புறத்துமாக வந்து கங்கைப் பேராற்றில் கலப்பதால் காசிமாநகரம் வாரணாசி என்ற பெயருடன் வழங்குகிறது. 83 கிலோமீட்டர் சுற்றளவுடைய இப்பெரு நகரை இன்றும் கால்நடையாக வலம்வரும் நல்வினைப் பேறு பெறும் அடியார்களும் உளர். இந்நகரில் அரிச்சந்திரன் வாழ்ந்த அரண்மனையின் சுவடு உள்ளது. புத்தர் தவம் செய்து பின் முதன்முதல் உபதேசித்த சாரனாத் என்ற இடம் இந்நகரின் ஒரு பகுதியாக உள்ளது. துளசிதாசர் இராமாயணம் எழுதியதும் இவ்வூரிலேயே ஆகும். புரந்தரதாசர் இறுதிவரை வாழ்ந்த இடமும் இதுவே. கபீர்தாசர் நெய்வதற்குப் பயன்படுத்திய தறியும் இங்கேயே உள்ளது. இங்குக் காசி மன்னர் அரண்மனை உள்ள இடம் 'வியாசகாசி' என வழங்கப்படுகிறது. இவ்வூரில் 84 சிவன் கோயில்களும், 62 விண்ணகரங்களும் உள்ளன, 2 பழைய அருங்காட்சியகங்களும் 4 பெரிய பல்கலைக் கழகங்களும் உள்ளன.

அவிமுத்தத் தலம் என்று போற்றப்படும் வாரணாசியில் இதன் தனிச்சிறப்புக் கருதிச் சிவபெருமான் இந்தத் தலத்தை நீங்காமல் நிலையாக உள்ளார். அடியார்களும் இத்தல வழிபாட்டைத் தவறாது மேற்கொள்கின்றனர். திருநாவுக்கரசர் பெருமான் தம் கயிலை யாத்திரையின்போது 'மின்னு வேணியர் வாரணாசி விருப்பினோடும் பணிந்தார்' (353) என்று சேக்கிழாரும் குறிப்பிடுகிறார். இன்றும் இத்திருத்தலத்தில் சாக்கடைகள், சாணாகம், பிணங்கள் போல்வன தீநாற்றம் கமழமாட்டா. காய்கறி களுக்கு வழக்கமாகச் சுவை இராது. மலர்கள் மணங்கமழமாட்டா. இங்கு நிலையாக வீற்றிருக்கும் சிவபெருமானே ஏனைய தலங்களிலும் உகந்தருளியுள்ளான் என்பது பெரியோர் துணிபு. இத்தலம் சைவர், வைணவர் இருவருக்கும், பௌத்த சைனர்களுக்கும் பொதுவான தலமாகும் என்று நூற்கடல் தி.வே. கோபாலையர் குறிப்பிடுகின்றார். இங்குள்ள கங்கையில் நீராடுதலை இந்துக்கள் புனிதமானது என்று கருதுகின்றனர். இங்குள்ள காசிவிசுவநாதர், அன்னபூரணி, விசாலாட்சி, துர்க்கை, கேதாரீசுவரர் ஆகிய கோயில்கள் புகழ்மிக்கவை. இதில் இறக்கும் ஆன்மாக்களுக்குச் சிவபெருமான் தாரக உபதேசஞ் செய்து திருவடிப்பேறு அளிப்பர். இதில் இறக்க முத்தியுண்டு.

### 17. காஞ்சி - 2

தமிழ்நாட்டிலுள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க நகரம். கச்சிப்பேடு, கச்சி, காஞ்சி என்ற பெயர்களும் இந்நகருக்கு உள்ளன. வேகவதி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இது ஒரு கோயில் நகரம். ஏகாம்பரேஸ்வரர் கோயில், கைலாசநாதர் கோயில், காமாட்சியம்மன் கோயில் முதலிய கோயில்கள் இங்குள்ளன. இங்குள்ள வைணவக் கோயில்கள் வைகுந்த பெருமாள் கோயில், வரதராஜப் பெருமாள் கோயில் முதலியனவாகும். சிவாலயங்கள் மிகுதியாக இருந்த பகுதி சிவ காஞ்சி எனவும், வைணவ ஆலயங்கள் மிகுதியாக இருந்த பகுதி விஷ்ணு காஞ்சி எனவும் வழங்கப்படுகிறது.

## 18. காளிகட்ட நகரம் - 12

தற்போது கல்கத்தா என்று வழங்கப்படுகிறது. இந்தியாவின் மிகப்பெரிய நகரம். கங்கையாற்றின் கிளையாகிய ஹூக்ளி ஆற்றின் கரையில் அதன் வாயிலிருந்து 90 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. முக்கியமான துறைமுகம் இங்கு உண்டு, வங்காளத்தின் தலைநகர். இன்றைய 'பௌபஜார்' என்ற இடத்தில் இருக்கும் காளிகட்டம் என்ற கிராமத்தின் பெயரே பின்னர் கல்கத்தா என மருவியது. இக்கிராமத்தின் பெயர் காளிதேவி வழிபாட்டிற்குத் தொடர்புடையதாகச் சிலர் கருதுகின்றனர். தற்காலக் கல்கத்தா நகரம் கிழக்கு இந்தியக் கம்பெனியைச் சார்ந்த ஜாப்சார்னாக் என்பவரால் 1690-இல் நிறுவப்பட்டது.

## 19. குடுமியான் மலை - 74

தமிழ்நாட்டில் புதுக்கோட்டை மாவட்டத்தில் குளத்தூர் தாலுகாவில் தென்மேற்கிலுள்ள ஊர். இது முற்காலக் கல்வெட்டுக் களில், திருநற்குன்றம் என்றும் பிற்காலக் கல்வெட்டுக்களில் சிகாநல்லூர் என்றும் வழங்கப்பட்டுள்ளது. இம்மலையின் உச்சியில் சுப்பிரமணியர் கோயிலும், குன்றின் அடியில் கிழக்குப் பக்கத்தில் சிகாநந்தர் கோயிலும் உள்ளன. குகைக் கோயிலில் இருக்கும் பிள்ளையார் சிற்பங்களுக்கு இடையில் இசைக் கல்வெட்டுக்கள் உள்ளன. இது, கல்வெட்டுக்களில், திருமேற்றளி என்று குறிக்கப்பட்டுள்ளது. இது முதலாம் மகேந்திரவர்மன் காலத்தைச் சார்ந்தது. இம்மலையின் அடிவாரத்தில் குடுமிநாதர் கோயில் உள்ளது. இதற்குச் சிகாகிரீஸ்வரர் என்ற பெயரும் உண்டு. கருவறையிலுள்ள லிங்கத்தில் குடுமி இருப்பது போன்ற அமைப்பு உள்ளது. இறைவன் குடுமிநாதர், சிகாபுரீஸ்வரர், இறைவி அகிலாண்டேஸ்வரி அம்மன்.

## 20. கூடலழகன் - 36

மதுரை நகரிலுள்ள முக்கிய வழிபாட்டுத் தலம். அடித்தளத்தில் மூலவரான கூடலழகர் வீற்றிருந்த திருக்கோலம், இரண்டாவது தளத்தில் பெருமாள் சூரிய நாராயணனாக நின்ற கோலத்திலும் மூன்றாவது தளத்தில் பெருமாள் க்ஷீராப்தி நாதனாகப் பள்ளிக்கொண்ட கோலத்திலும் காட்,சி தருகிறார். தாயார் மதுரவல்லி ஸ்ரீ வல்லப பாண்டியன் பரத்துவ நிர்ணயம் செய்வதற்காகத் ( பரம்பொருள் இன்னார் என்று கூறுவது ) தன் சபையில் வித்வான்களை எல்லாம் கூட்டினான். இப்பாண்டியனுடைய அரச புரோகிதரான செல்வநம்பி என்பவர் பெரியாழ்வாரை அச்சபைக்கு அழைத்தார். பெரியாழ்வார் மதுரைக்கு எழுந்தருளி பரத்துவ நிருபணம் செய்து பொற்கிழியைப் பெற்றார். அப்போது கூடலழகர் தேவியருடன் கருடவாகனராய்க் காட்சியளித்தார் என்பர்.

### 21. கோகன்னநாதன் - 64

இது கர்நாடக மாநிலத்திலுள்ள சிவத்தலங்களில் ஒன்று. இராவணன் கயிலையிலிருந்து இலங்கைக்குக் கொண்டுசென்ற சிவலிங்கத்தை இந்த இடத்தில் வைத்துத் திரும்ப எடுத்தபோது எடுக்க முடியாமல் பசுவின் காதுபோல் குழைந்து நீண்டதால் அதற்குக் கோகர்ணம் என்ற பெயர் வந்ததென்பர். இராவணன் தன் பலத்தால் எடுக்க இயலாமல் இருந்ததால் ஈசுவரர் மகாபல லிங்கேசுவரர் எனப் பெயர் பெற்றார்.

### 22. சங்கர நயினார் கோயில் - 54

கழுகுமலையிலிருந்து 19 கிலோமீட்டர் தொலைவில் சங்கர நயினார் கோயில் உள்ளது. கருவறையில் சிவனும் விஷ்ணும் ஒன்றாக இருப்பதைக் குறிக்கும் திருவுருவம் உள்ளது, 'இது அரனும் அரியும் ஒன்று' என்பதை உணர்த்துகிறது. இறைவி பெயர் கோமதி அம்பிகை.

### 23. சீகாழி - 29

தஞ்சை மாவட்டத்தின் வடகிழக்கிலுள்ளது. திருஞான சம்பந்தர் பிறந்த இடம். காளியினால் பூசிக்கப்பெற்ற இடம். ஆதலால் ஸ்ரீகாளிபுரம் என்ற பெயர் அமைந்து, அது ஸ்ரீகாளியாகி, நாளடைவில் ஸ்ரீகாழி ஆயிற்று. பழங்காலத்தில் இதற்குக் கழுமலம் என்ற பெயரே வழங்கப்பட்டுள்ளது. இங்குள்ள சிவன் கோயிலில் பிரமபுரீசர் கோயில், தோணியப்பர் கோயில் என்று இரு சந்நிதிகள் உள்ளன. திருஞானசம்பந்தருக்குத் தனியே கோயில் இருக்கிறது. இவ்வூருக்கு வழங்கப்படும் பெயர்கள்:- சண்பைப் புல்லால் மாய்ந்த தம் குலத்தவரால் வந்த பழி தன்னைத் தொடராதிருக்கக் கண்ணன் பூசித்ததால் சண்பை என்று பெயர். நடராஜரோடு வாதாடிய காரணத்தால் தனக்கு ஏற்பட்ட குற்றம் நீங்கப் பத்ரகாளி இங்குப் பூசித்ததால் ஸ்ரீகாளிபுரம் என்ற பெயர்பெற்றது. தன் வலிமையை அழித்த கண்ணபிரானால் ஏவப்பட்ட காளிங்கன் என்ற பாம்பு பூசித்தமையால் ஸ்ரீகாளிபுரம் என வழங்கப்பட்டுப் பின்பு சீகாழி என வழங்கப்பட்டது. மச்சகந்தியைக் கூடியக் கொச்சையாம் பழிச்சொல் நீங்கப் பராசரர் பூசித்தமையால் கொச்சைவயம். எத்தலங்களிலும் தொலையாத தம்மலத் தொகுதி நீங்க உரோமச முனிவர் இறைவனைப் பூசித்ததால் கழுமலம்.

### 24. சுசீந்திரம் - 58

இது சிவத்தலம். நாகர்கோவிலிலிருந்து 6 கிலோமீட்டர் தொலைவில் கன்னியாகுமரிக்குச் செல்லும் சாலையில் உள்ளது. இந்திரன் சாப நீக்கம் பெற்ற இடமாதலால் இவ்வூர் சுசீந்திரம் என்று பெயர் பெற்றதென்பர். இரவில் இந்திரன் பூசை செய்வதாகக் கூறுவர். கோயிலில் சிவன், பிரம்மன், விஷ்ணு ஆகியோரின் விக்ரகங்களை இந்திரனே நிறுவியதாகப் புராணம் கூறுகிறது. தாணு,

மால், அயன் ஆகிய மூன்று தெய்வங்களையும் ஒரே வடிவில் கொண்ட தாணுமாலயன் கருவறையில் மூர்த்தியாக உள்ளார். மூலவரான லிங்கத்தின் மேல்பாகம் சிவனின் அம்சமாகவும் நடுப்பாகம் விஷ்ணுவின் அம்சமாகவும், அடிப்பாகம் பிரம்மனின் அம்சமாகவும் கருதப்படுகிறது.

### 25. சுவாமிமலை - 51

முருகன் திருப்பதிகளுள் ஒன்று. மயிலாடுதுறை - தஞ்சாவூர் இரயில் வழியில் காவிரியாற்றின் தென்கரையில் உள்ளது. சிவபெருமானுக்கு முருகன் பிரணவ மந்திரத்தைக் கூறியருளிய திருப்பதி. மலையின் அடிவாரத்தில் சிவபெருமான் உமாதேவியுடன் எழுந்தருளிய திருக்கோயிலும் மலையின்மேல் குழந்தை முருகன் கோயிலும் உள்ளன.

### 26. தஞ்சாவூர் - 19

தமிழ்நாட்டில் கிழக்குக் கடற்கரையோரமாக உள்ள மாவட்டம். காவிரியாற்றின் கழிமுக வெளியாகும். பிற்காலச் சோழர்களுக்கும், மராட்டிய மன்னர்களுக்கும் தலைநகராக இருந்த இடம். பிரகதீசுவரர் கோயில், சரஸ்வதி மகால் நூல் நிலையம் முதலியவை இங்குள்ளன. பராசர முனிவரின் தவத்தைக் கெடுத்த தஞ்சன், விஷ்ணுவால் வதையுற்றபோது, அவனுக்கீந்த வரத்தால் தஞ்சாபுரி என்றும் பெயர்பெற்றதென்பர்.

### 27. தருமபுரம் - 22

தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள மாயூரத்துக்குக் கிழக்கே 4.8 கிலோமீட்டர் தொலைவில் இருக்கும் ஊர். சைவசித்தாந்த கொள்கையை மேற்கொண்டுள்ள ஆதீனம் இங்கிருக்கிறது. இது 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்றது. வேளூர், சீகாழி, திருக்கடவூர் போன்ற 27 திருக்கோயில்கள் இவ்வாதீனத்திற்குரியன.

### 28. திரிச்சிராப்பள்ளி - 18

தமிழ்நாட்டின் மத்தியில் இருக்கும் மாவட்டம். ஸ்ரீரங்கம் என்னும் புண்ணியத்தலம் இங்குள்ளது. இந்நகரின் நடுவே மலைக் கோட்டை அமைந்துள்ளது. மலையின்மேல் உச்சிப்பிள்ளையார் கோயிலும், தாயுமானவர் கோயிலும் உள்ளன. சிவபெருமானை வழிபட்ட ஒருத்தியின் பிள்ளைப்பேறு காலத்தில் காவிரியின் பெருக்கினால், அவளுடைய தாய் வரமுடியாததால் இறைவரே அவள் தாயாக உருக்கொண்டு வந்து மருத்துவம் பார்த்ததால் இறைவனுக்குத் தாயுமானவர் என்று பெயர் வந்ததாகப் புராணம் கூறும்.

### 29. திருக்கயிலாயம் - 67

இது இமயமலைத் தொடரைச் சேர்ந்தது. திபெத்து நாட்டில் உள்ளது. கயிலை, கைலாசம் என்றும் வழங்கப்படும். இது இந்துக்-களாலும், பௌத்தர்களாலும் வழிபடப்படுகிறது. அன்னப்பறவைகள் வாழும் 'மானசம்' என்கிற ஏரி கயிலாயத்தின் தென்கிழக்கில் இருக்கிறது. சிவபெருமான் விரும்பியுறையும் இடமாகக் கருதப் படுகிறது. நாயன்மார் மூவரும் பாடியுள்ளனர்.

## 30. திருக்காளத்தி - 77

ஆந்திர மாநிலத்தில் சித்தூர் மாவட்டத்தில் உள்ள ஒரு திருப்பதி. கண்ணப்ப நாயனார் சிவபெருமானை வழிபட்டு முத்தி யடைந்த இடம். இது பஞ்சபூதத் தலங்களில் வாயுத்தலம் என்பார். சீ - சிலந்திப் பூச்சி, காளம் - பாம்பு, அத்தி - யானை - இம்மூன்றும் சிவபெருமானை வழிபட்டு முத்தி பெற்றதால் சீ காளத்தி எனப் பெயர் பெற்றதென்பர். இக்கோயிலில் இறைவன் காற்று வடிவாய்த் திகழ்பவர். இதனைக் கருவறையில் இலிங்கத்தின் அருகே உள்ள விளக்கு எந்த நேரமும் அசைந்து கொண்டிருப்பதன் மூலம் அறியலாம். இந்த இடம் 'தட்சக் கயிலாயம்' எனவும் வழங்கப்படும். இறைவன் காளத்திநாதர், இறைவி ஞானப்பூங்கோதை.

## 31. திருக்கானப்பேர் என்ற காளையார் கோயில் - 55

சிவகங்கையிலிருந்து 18 கிலோமீட்டர் தொலைவில் காளையார் கோயில் என்ற ஊர் உள்ளது. இதன் பண்டைய பெயர் கானப்பேர் எயில் ஆகும். சங்ககாலப் பாண்டிய மன்னன் உக்கிரப் பெருவழுதி இந்த இடத்தை ஆண்டுவந்த வேங்கை மார்பன் என்ற மன்னனை வென்று, 'கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார். இது மருது சகோதரர்களுக்கு இராணுவக் கோட்டையாக இருந்தது. இங்குப் பழமையான சிவன் கோயில் ஒன்று உள்ளது. சுந்தரர் ஈசன்மீது பாடிய திருக்கானப்பேர் பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் 'கானப்பேர் உறை காளை' என்று பாடியதால் காளையார் அமர்ந்தருளும் கோயில் காளையார் கோயிலாயிற்று. கோயில் பெயரே நாளடைவில் ஊர்ப்பெயராகக் கொள்ளப்பட்டது.

## 32. திருக்குடந்தை - 20

இது தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள வட்டம்; கும்பகோணம் என்றும் வழங்கப்பெறும். இதன் பழைய பெயர் குடமூக்கு. இங்குப் பல சிவன் கோயில்களும், விஷ்ணு கோயில்களும், பிரமன் கோயில் ஒன்றும் பிறகோயில்களும் உள்ளன. மகாமகக் குளமும் உண்டு. மகாமகத்தின்போது இக்குளத்தில் நீராடுவது புனிதம் என்று கருதப்படுகிறது. இங்குள்ள பழமை மிக்க கோயில் ஆதி கும்பேஸ்வரர் கோயில் ஆகும். இது தமிழ்நாட்டிலுள்ள கோவில் மாநகரங்களில் ஒன்று.

### 33. திருக்கேதாரம் - 66

வடநாட்டில் இமயமலைத் தொடரிலுள்ள புகழ்பெற்ற சைவத் திருப்பதி. திருக்கேதாரக் கோயில் அமைந்துள்ள இடத்திற்குப் பின்னால் கேதாரநாத சிகரம் இருக்கிறது. ஆறு திங்கள் தேவர்களும் ஆறு திங்கள் மக்களும் இறைவனை வழிபடுவதாக ஐதீகம். உமாதேவியார் பிருங்கி முனிவருக்காக இறைவனை வழிபட்டு இடப்பாகம் பெற்ற இடம். இங்கு எல்லோரும் தாமே கையால் நீராட்டி, பூவிட்டு வழிபடலாம். இறைவன் கேதாரேசுவரன். இறைவி கேதார கௌரி. கேதார நாதனை முதலில் வழிபட்டவர்கள் பாண்டவர்கள். ஆதி சங்கரர் அமைத்த மடம் ஒன்று இங்கு உள்ளது.

### 34. திருக்கேதீச்சுரம் - 69

இது இலங்கையில் உள்ள மிகப் பழைய கோயில்களுள் ஒன்று. இது மன்னார் பகுதியிலுள்ள மாதோட்டத்தில் உள்ளது. இதன்மீது சம்பந்தர் பாடியுள்ளார். ஒரு காலத்தில் பெருந் துறைமுகமாகவும், தமிழ் மன்னர் ஆட்சிக்குத் தலைநகரமாகவும் விளங்கியது. போர்ச்சுக்கீசியர், டச்சுக்காரர்களால் அழிக்கப்பட்ட கோயில் 1894-ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டது என்பர்.

### 35. திருச்சித்திரக்கூடம் - 41 ( தில்லை )

வைணவத் தலம். பெருமான் கோவிந்தராசன். தாயார் புண்டரீகவல்லி. குலசேகராழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பாடிய இடம். சிவபெருமான் தில்லைக்கு வந்தபோது கிராமதேவியாகிய தில்லை காளி அவருக்கு இடம் கொடுக்க மறுத்தாள். காளியும் சிவபெருமானும் நடனம் புரிவதென்றும் இப்போட்டியில் தோற்றுவர் ஊருக்கு அப்பால் சென்றுவிடுவதென்றும் ஒப்பந்தம் ஏற்பட்டது. சிவபெருமான் ஊர்த்துவத் தாண்டவமாடிக் காளியை நடனத்தில் தோற்கடித்தார். இந்த நடனத்துடன் இன்று நிருத்த சபையில் அவர் காட்,சியளிக்கிறார். ஒப்பந்தப்படி காளி நிருத்தசபையை விட்டு வெளியேறி, தில்லைவனத்திற்குச் சென்றுவிட்டாள். சிதம்பரத்தில் நடராசர் சந்நிதிக்கு மேற்கே உள்ள சித்திரகூடத்தில் கோவிந்தராசர் பள்ளி கொண்டிருக்கிறார்.

### 36. திருச்சீரலைவாய் - 50

இது முருகப்பெருமானுடைய அறுபடை வீடுகளில் இரண்டாவது படைவீடு. சூரபத்மனைப் போரில் வென்ற இடம் இது என்று புராண வாயிலாக அறியப்படுகிறது. ஆகவே இது செயந்திபுரம். இதைத் திருச்செந்தில், சீரலைவாய் முதலிய பெயர்களிலும் வழங்குவர். இது வ.உ.சி. மாவட்டத்தில் கீழ்க்கடல் ஓரத்தில் அமைந்துள்ளது. கருவறையில் மூலவர் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கியுள்ளார்.

### 37. திருத்தணிகை - 49

தமிழ்நாட்டில் திருத்தணிகை என்ற இரயில் நிலையம் அருகே உள்ளது. முருகப்பெருமான் சூரபத்மனை வென்ற பிறகு போர்வினை

தணிந்து வள்ளி தெய்வானையுடன் வீற்றிருந்த இடம் என்னும் பொருளில் 'தணிகை' என்றும் 'செருத்தணி' என்றும் பெயர் பெற்றதென்பர்; மலையுச்சியில் உள்ளது. இந்திரன் முருகனை வழிபட அமைத்த தீர்த்தம் 'இந்திரநீலச் சுனை' என வழங்கப்படுகிறது.

## 38. திருநெல்வேலி

தமிழ்நாட்டின் தென்பகுதியில் கிழக்குக் கடலோரமாகவுள்ள மாவட்டம். நெல்லை மாவட்டத்தின் தலைநகர். சைவத் திருப்பதி. ஐந்து சபைகளில் ஒன்றான தாமிர சபையை உடையது. வேதசருமா என்னும் அந்தணன் உலர்த்தி வைத்திருந்த நெல்லைத் தண்ணீர் அடித்துக்கொண்டு போகா வண்ணம் வேலியிட்டுச் சிவபிரான் காத்ததனால் இப்பெயர் வந்ததென்று புராணம் கூறும். இறைவர் மூங்கிலில் தோன்றியதால் வேய் முத்த நாதர் என்னும் பெயர் கொண்டார். இறைவர் நெல்லையப்பர், இறைவி காந்திமதி.

## 39. திருப்பரங்குன்றம் - 53

மதுரை மாவட்டத்தில் மதுரை நகருக்குத் தென்மேற்கில் உள்ளது. முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் ஒன்று. கருவறை பண்டைய குடைகோயில். முருகப்பெருமான் சூரபத்மனை வதைத்த பிறகு திருச்செந்தூரிலிருந்து திருப்பரங்குன்றம் வந்து வீற்றிருந்தார். இங்குத் தெய்வயானைக்கும் முருகப்பெருமானுக்கும் திருமணம் நடைபெற்றது. நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் இது குறித்துப் பாடியுள்ளார்.

## 40. திருப்பனந்தாள் - 23

இது மயிலாடுதுறை - கும்பகோணம் இரயில் பாதையில் ஆடுதுறை இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 9.6 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. பனை மரத்தைத் தலவிருட்சமாக உடைமையின் இது பனந்தாள் என்று பெயர்பெற்றது. இங்குள்ள ஸ்ரீ காசி மடத்தை நிறுவியவர் குமரகுருபர சுவாமிகள். இறைவன் செஞ்சடையர். இறைவி பெரிய நாயகி.

## 41. திருப்புல்லணைத் தலம் - 44

தமிழ்நாட்டில் இராமநாதபுரத்திலிருந்து தெற்கே 9 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள திருமால் திருப்பதி. இது திருப்புல்லாணி - தருப்பசயனம் எனவும் வழங்கப்பெறும். புல்லாலான அணை புல்லணை. இராமபிரான் இராவணனோடு போர்புரிய இலங்கைக்குச் செல்வதற்குக் கடல் கடக்க வேண்டியிருந்ததால் வழிவிடும்படி, வருணனை வேண்டி, ஏழுநாள் அளவும் திருப்புல் படுக்கையில் கிடந்த இடம் ஆதலின் இப்பெயர் பெற்றது. வடமொழியில் தருப்பசயனம் எனப்படும். புல்வாரணிய முனிவருக்கும் அசுவத்த நாராயணனுக்கும் அருள்புரிந்த இடமெனப் புராணம் கூறும். திருமால் பெயர் கல்யாண ஜெகந்நாதன், பிராட்டி கல்யாணவல்லி.

## 42. திருப்பூவனம் - 15

பாண்டிய நாட்டிலுள்ள சைவத்திருப்பதி. பொன்னனையாள் என்ற தாசிக்காக இறைவர் சித்தராக வந்து இரசவாதஞ் செய்து கொடுத்த பொன்னைக் கொண்டு அவள் சிவபெருமானுடைய திருவுருவமமைத்து மகிழ்ந்த இடம்.

இறைவர்: திருப்பூவணநாதர், இறைவி: மின்னனையாள்.

## 43. திருமறைக்காடு - 31

இது திருத்துறைப்பூண்டிக்கருகிலுள்ள பழமையான நகரம். முன்பு, திருமறைக்காடு என வழங்கப்பட்டது. இங்கு, மறைகள் திருக்காப்பிட்ட நாள் முதலாகத் திறக்கப் பெறாமலிருந்ததை அடியவர் வேண்டியதற்கேற்பத் திருநாவுக்கரசர் பத்துப் பாட்டுப் பாடி முடித்துப் பதினோராவது பாட்டில் கதவுகள் திறந்தன. திருஞானசம்பந்தர் காப்புக் கொளப் பாடிய முதல் பாட்டிலேயே கதவுகள் அடைத்துக் கொண்டன.

## 44. திருமாலிருஞ்சோலை - 27

மதுரையிலிருந்து 21 கிலோமீட்டர் தொலைவில் அழகர் மலை உள்ளது. இம்மலையின் அடிவாரத்தில் அழகர் கோயில் அமைந்துள்ளது. 'அழகர்' என்ற பெயர் கொண்ட திருமால் இங்கே கோயில் கொண்டுள்ளார். இது சோலைமலை, திருமாலிருஞ்சோலை, மாவிருங்குன்றம் என்ற பெயர்களாலும் வழங்கப்படும். கள்ளர் என்ற சமூகத்தினர் முக்கியமாக வழிபடும் தெய்வமாக இருப்பதால் கள்ளழகர் என இக்கோயிலின் தெய்வம் அழைக்கப்படுகிறார்.

## 45. திருமெய்யம் - 63

புதுக்கோட்டையிலிருந்து 20 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது திருமயம். மலையடிவாரத்தில், சிவ விஷ்ணு கோவில்கள் உள்ளன. மலையடிவாரத்திலுள்ள சத்தியகிரீஸ்வரர், சத்தியமூர்த்தி பெருமாள் ஆகிய கோயில்களின் கருவறைகள் மலையடிவாரத்தைக் குடைந்து அமைக்கப்பட்டனவாகும். இறைவி வேணுவனேஸ்வரி, திருமால் சத்தியகிரிநாதன், தாயார் உய்யவந்தாள்.

## 46. திருவண்ணாமலை - 48

சைவத் திருப்பதி. உயரமான மலை. நாற்புறங்களிலும் நான்கு கிளைகளாக அமைந்த குன்று. இதன் அடிவாரத்தில் அண்ணாமலையார் கோயில் உள்ளது. ஐம்பூதங்களில் அக்கினித் தலம். இரமண மகரிஷி ஞானம் பெற்ற இடம். சிவபெருமானின் அடிமுடி தேடிய ஐதிகத்தைப் பின்பற்றியது. இறைவன் அருணாசலேசர். இறைவி உண்ணாமுலையம்மை.

### 47. திருவரங்கம் - 34

காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையிலுள்ள தீவில் திருச்சி நகரிலிருந்து 5 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு ரெங்கநாதர் கோயில் உள்ளது; கோயிலின் கருவறையில் ரெங்கநாத சுவாமி ஆதிசேடனாகிய அரவணையின்மீது வலப்பக்கமாகச் சாய்ந்து குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கிக் காட்சி தருகிறார். பூலோக வைகுண்டம் எனப் போற்றப்படுகிறது. ஸ்ரீரங்கநாதருக்குத் தேங்காயை உடைத்து நைவேத்தியம் செய்தால் பெருமாளின் தூக்கம் கலைந்துவிடும் என்று கருதித் தேங்காயை உடைக்காமல் துருவிய தேங்காயை நைவேத்தியம் செய்கிறார்கள். இந்த மூர்த்தியை இராமனின் பட்டாபிஷேகப் பரிசாகப் பெற்றார் விபீடணன். பட்டாபிஷேகத்திற்குப்பின் இலங்கை நோக்கிச் சென்றுகொண்டிருந்த விபீடணன் ஸ்ரீரங்கத்துக்கருகில் இளைப்பாறினார். சேஷசயனமூர்த்தி அவ்விடத்திலேயே சயனித்துவிட்டார் என்பர். பகவான் தென்திசை நோக்கி எழுந்தருளியிருப்பது விபீடணனுக்குக் காட்சியளிப்பதற் கென்பர்.

### 48. திருவல்லிக்கேணி - 42

இது வைணவத் திருப்பதி. சென்னை நகரில் திருவல்லிக்கேணியில் உள்ளது. திருமால் பார்த்தசாரதி; தாயார் வேதவல்லி. இவர் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார்.

### 49. திருவனந்தபுரம் - 45

கேரள மாநிலத்தின் தலைநகர். 108 திருப்பதிகளில் ஒன்று. பெருமாள்: அனந்த பதுமநாபர், தாயார்: அரிலட்சுமி. பாம்பின் மீது பள்ளிகொண்ட திருக்கோலம்.

### 50. திருவாரூர் - 26

தஞ்சை மாவட்டத்திலுள்ள சைவத் திருப்பதி. பிறக்க முத்தி தரும் இடம். இறைவர் வன்மீகநாதர். இவர் புற்றிடம் கொண்டார் என்றும் வழங்கப்படுகிறார். அவர் இருக்கும் இடம் திருமூலட்டான் என்றும், பூங்கோயில் என்றும் வழங்கப்படும். இறைவி அல்லியங்கோதை. இங்குள்ள குளம் கமலாலயம் தேவதீர்த்தம்.

### 51. திருவாலங்காடு - 32

இது அரக்கோணத்திற்கு அருகில் உள்ளது. சைவத் திருப்பதி. இரத்தின சபை. இங்குச் சக்தியைவிடச் சிவனே ஆற்றல் மிக்கவர் என்பதை உணர்த்துவதற்காகச் சிவபெருமான் காளியுடன் நடன மாடியதாகப் புராணம் கூறுகிறது. இறைவன் தேவசிங்கப்பெருமான்

ஊர்த்துவ தாண்டேசுவரர். இறைவி வண்டார்க்குழலி. காரைக்கால் அம்மையார் கயிலையிலிருந்து தலையாலே நடந்துவந்து இறைவனுடைய நடனத்தைக் கண்டு சிவானந்தத்தை நுகர்ந்ததாகப் பெரியபுராணம் கூறும்.

## 52. திருவாலவாய் - 17

இப்போது மதுரை என்று வழங்கப்படுகிறது. இதனை ஆலவாய், கூடல், கடம்பவனம் என்ற பெயர்களால் பழந்தமிழர் வழங்கினர். வம்பிசேகரப் பாண்டியன் காலத்தில் ஊரில் நெருக்கம் ஏற்பட்டது. இந்நகரத்தின் ஆதி எல்லையைக் காட்டி அருளுமாறு மன்னன் சிவபெருமானை வேண்டினான். சிவபெருமான் தன் திருக்கையில் இருந்த பாம்பை எல்லை யளந்து காட்டுமாறு ஆணை யிட, அது வாயும் வாலும் ஒன்றுபடும்படி வட்டமாக வளைந்து எல்லையைக் குறித்தது. அதன் பொருட்டு 'ஆலவாய்' என்ற பெயர் இந்நகருக்கு ஏற்பட்டது. சிவபெருமான் தன்னுடைய 64 திருவிளையாடல்களை நடத்திய நகரம். கடைச்சங்கத்தில் புலவர்கள் இருந்து தமிழை ஆராய்ந்த இடம்.

## 53. திருவாவடுதுறை - 21

இது சைவத் திருப்பதி. கும்பகோணத்திற்கருகிலுள்ளது. திருக்கயிலாயத்தில் இறைவி இறைவனோடு சொக்கட்டான் ஆடிக் களித்தமையால் பசு வடிவம் எய்தினார் என்றும், அவர் அப் பசு வடிவத்தோடு இங்கு வந்து வழிபட்டு அவ்வடிவம் நீங்கப் பெற்றனர் என்றும், அக்காரணத்தின் அடிப்படையில் இவ்வூர் திரு ஆ, அடுதுறை எனப் பெயர் பெற்றதென்றும் கூறுவர். இறைவன் மாசிலாமணியீசர். இறைவி ஒப்பிலா முலையம்மை. இது கோமுக்தி, கோகழி நவகோடி சித்தபுரம் எனவும் வழங்கப்படும். திருமூல நாயனார் திருமந்திரம் அருளிய இடம். திருக்கயிலாயப் பரம்பரை நமச்சிவாய தேசிக மூர்த்தி அவர்களால் நிறுவப்பெற்ற திருவாவடுதுறை ஆதீனம் இங்கு உள்ளது.

## 54. திருவானைக்கா - 76

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ளது. இது அப்புத்தலம். இக்கோயிலின் இலிங்கத்தை எப்பொழுதும் நீர் சூழ்ந்திருக்கும். திருவெண்ணாவல் என்ற பெயரும் வழங்கப்படுகிறது. சம்புகேஸ்வர முனிவர், வெண்ணாவல் பழமொன்றைக் கொண்டு சிவபெருமானுக்கு நிவேதித்துக் கொட்டையுடன் அதை உண்டபோது, அது அவருக்குள்ளே முளைத்து மரமாகியது. அம்முனிவர் வேண்டிக் கேட்டதற்கேற்ப அதனடியில் இலிங்க வடிவாகி அவரையும் அதனடியில் இருக்கச் செய்தார் எனத் தலபுராணம் கூறுகிறது. சிவபெருமானின் கணநாதர் புஷ்பதந்தன், மாலயவான் ஆகியோர் சாபத்தால் யானையாகவும் சிலந்தியாகவும் மாறி வழிபட்ட இடம். இங்கு அர்ச்சகர் புடவை

கட்டிக்கொண்டுதான் உச்சகாலப் பூசை செய்வார். அம்மனே சுவாமியைப் பூசிப்பதாக ஐதீகம்.

### 55. திருவிடை மருதூர் - 24

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணம் தாலுகாவில் உள்ளது. இது வரகுணப் பாண்டியனுடைய பாவத்தைப் போக்கிய இடம். இறைவன் மகாலிங்கேசுவரர், இறைவி பெருநலமா முலைநாயகி.

### 56. திருவியலூர் - 25

கும்பகோணத்திற்குக் கிழக்கே 6.4 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சைவத் திருப்பதி. இறைவர் யோகானந்தர், இறைவி சவுந்திர நாயகி.

### 57. திருவுத்தரகோச மங்கை - 45

இராமநாதபுர நகரிலிருந்து 13 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு மங்களேசுவர சுவாமி கோயில் உள்ளது. ஆதி சிதம்பரம் என்ற பெயரும் இக்கோயிலுக்கு வழங்கப்படுகிறது.

### 58. திருவெஃகா

செங்கல்பட்டுக்கு அருகே உள்ளது. வைணவத் திருப்பதி. பிரமன், காஞ்சியில் கலைமகளின்றி யாகம் செய்ததால், அவள் வெகுண்டு, அவ்வேள்வியை அழிக்க வேகவதி என்னும் ஆறாகப் பெருகி வந்தாள். அதைத் தடுக்கத் திருமால் அந்த ஆற்றின் குறுக்கே அணையாகப் பள்ளிகொண்டாரென்பது தல வரலாறு. இது வேகவணை என்றும் வழங்கப்படும். இதுவே வேகணை, வெஃகணை, வெஃகா என மருவி இவ்விடத்தைக் குறித்ததென்பர்.

திருமால்: சொன்ன வண்ணம் செய்த பெருமாள்,
தாயார்: கோமளவல்லி நாச்சியார்.

### 59. திருவெண்காடு

சீர்காழிக்குத் தென்கிழக்கே 11.2 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு அக்னிதீர்த்தம் உண்டு. இறைவர் சுவேதாரணியேசுரர், இறைவி பரமவித்தியா நாயகி.

### 60. திருவெவ்வுளூர் - 46

செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ளது. திருமால் சாலிகோத்திர முனிவருக்குக் காட்சி தந்து, உறைதற்குரியது எவ்வுள் என வினவியதால் திரு எவ்வுளூர் எனப் பெயர் வந்ததாகக் கூறப்படுகிறது.

### 61. திருவேங்கடம் - 43

ஆந்திர மாநிலத்தில் உள்ளது. இதற்குத் திருப்பதி, சேஷாத்திரி, வேங்கடாத்திரி, அஞ்சனகிரி என்ற பெயர்களும் உண்டு. இம்மலை ஆதிசேஷனைக் குறிப்பதாகவும் ஏழு சிகரங்களோடு கூடிய திருமலையை ஆதிசேடனுடைய ஏழு தலைகளாகவும், வேங்கடேசர் அந்தத் தலைகளில் எழுந்தருளியிருப்பதாகவும் நூல்கள் கூறும். 108 வைணவத் திருப்பதிகளில் ஒன்று. இங்குத் தாயாருக்குத் தனிக்கோயில் இல்லை.

### 62. திருவேடகம் - 56

திருஞானசம்பந்தர் சமணருடன் வாது செய்தபோது புனல் வாதத்தில், 'வாழ்க அந்தணர்' என்னும் பாட்டை எழுதியிட்ட ஏடு வைகையில் நீரை எதிர்த்துச் சென்று, பிறகு 'வன்னியும் மத்தமும்' என்ற பதிகம் பாடியவுடன் நின்ற இடம் ஆகையால் ஏடகமெனப் பட்டது.

இறைவர்: ஏடகநாதேசுவரர், இறைவி: ஏலவார் குழலி.

### 63. திருவேரகம் - 52

இது கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள முருகன் கோயில். தற்போது குமார கோயில் என்றழைக்கப்படுகிறது. வேளி மலையின் மீது கோயில் உள்ளது.

### 64. துவாரகா - 20

சௌராஷ்டிர மாநிலத்தில் கோமதியாற்றங்கரையில் இப்போதுள்ள துறைமுகமே பழைய துவாரகை என்றும், மும்பை மாநிலத்தில் உள்ள துவாரகை கண்ணனுடைய துவாரகை என்றும் கோனாடிக் அருகில் உள்ள மூலத்துவாரகையே துவாரகை என்றும், பல கருத்துக்கள் நிலவுகின்றன. முத்திதரும் நகரங்களுள் ஒன்று. வைணவத் திருப்பதி. வடமதுரையில் இருந்த யாதவகுல அரசர்கள், கண்ணன், பலராமன் ஆகியோர், சராச்சந்தன் முதலான பகைவர்களுக்கஞ்சிக் கடல் ஓரத்தில் துவாரகை என்ற நகரை நிறுவி வாழ்ந்தார்கள் என்றும் அது கடலில் மூழ்கிவிட்டது என்றும் புராணங்கள் கூறுகின்றன.

### 65. நாகர்கோயில் - 57

கன்னியாகுமரி மாவட்டத்தின் தலைமையிடம் நாகர்கோயில். இதன் பழைய பெயர் கோட்டாறு. நாஞ்சில் நாட்டின் ஒரு பகுதி. இங்கு நாகராசர் கோயில் உள்ளது. இக்கோயிலின் பெயரே இந்நகருக்கு உண்டாயிற்று. நாகராசரின் கருவறையின் மேல்பகுதி ஓலையால் வேயப்பட்டுள்ளது. பழையாறு நகரத்திற்கு வடக்கே ஓடுகிறது.

### 66. நாரத்தாமலை - 73

புதுக்கோட்டையிலிருந்து 17 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர். நகரத்தார் மலை என்ற பழைய பெயரின் மருவே இப்பெயராக வழங்கப்பட்டதாகக் கூறுவர். மலைமீது விஜயாலய சோழீஸ்வரம் கோயில் உள்ளது. இதைக் கட்டியவர் விஜயாலயச் சோழன். நாரத்தாமலையின் மேல் மலைக்குன்றின் அடிவாரத்தில் இருகுடைவரைக் கோயில்கள் உள்ளன. இது சமணர் வழிபாட்டுத் தலமாக இருந்ததென்றும், மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் விஷ்ணு கோயிலாக மாற்றப்பட்டதென்றும் கூறப்படுகிறது.

### 67. புள்ளிருக்குவேளூர் - 28

தஞ்சை மாவட்டத்தில் சீகாழிக்கடுத்து இவ்வூர் விளங்குகிறது. புள் என்பது சடாயு, சம்பாதி என்ற பறவைகளையும், இருக்கு என்பது வேதத்தையும், வேள் என்பது முருகனையும் குறிக்கும் . புள்ளும் இருக்கும் வேளும் வழிபட்ட தலம் புள்ளிருக்குவேளூராயிற்றென்று புராணம் கூறும். இறைவன்: புள்ளிருக்குவேளூரான். சிவபெருமான் முருகனுக்கு வேலளித்த இடம். இறைவர் எல்லா நோய்களையும் நீக்குபவர் ஆகையால் இத்தலத்தில் வைத்திய நாதர் என்று போற்றப்படுகிறார். இறைவி தையல் நாயகி. இது அங்காரகத் தலம்.

### 68. பெருந்துறை - 108

புதுக்கோட்டை நகரிலிருந்து 44 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. இது ஆவுடையார் கோயில் என அழைக்கப்படுகிறது. அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சர் மாணிக்கவாசகர். இவர் சிறந்த சிவபக்தர். பாண்டிய மன்னன் குதிரைகள் வாங்கக் கொடுத்த பணத்தைத் திருப்பெருந்துறையில் தங்கிச் சிவபுண்ணிய செயல்களில் செலவு செய்தார். குருந்த மரத்தடியில் சிவபெருமான் குருவாக இருந்து மாணிக்கவாசகருக்கு உபதேசம் செய்ததாகப் புராணம் கூறும். இதனுள் மேளம் வாசிப்பதில்லை. மாணிக்கவாசகருக்கு இங்கு இரு சந்நிதிகள் உள்ளன. இறைவன் ஆன்மநாதர், இறைவி சிவயோக நாயகி.

### 69. மதுரை - 4

உத்தரப்பிரதேசத்தில் தென்மேற்குக் கோடியில் இராஜபுதன எல்லையோரத்தில் இருக்கிறது. நடுவில் யமுனை ஆறு செல்கின்றது. இந்துக்களின் புண்ணியத்தலம். இது கண்ணன் பிறந்து வளர்ந்து பல விளையாடல்கள் செய்த இடம். கண்ணன் கம்சனைக் கொன்ற இடமும் இதுவே. கண்ணன் பிறந்த இடத்தில் ஒரு கோயில் கட்டப்பட்டுள்ளது. அதன் அருகில் பௌத்ரா குண்டம் என்ற கிணறு இருக்கிறது. ஏகாதசி தோறும் இராசலீலை விழா நடைபெறும்.

### 70. மல்லிகார்ச்சுனபுரம் - 65

ஆந்திர மாநிலத்தில் கர்னூலுக்கருகில் உள்ளது. நந்திதேவர் மலை வடிவாகிச் சிவபெருமானைத் தாங்கிக் கொண்டிருப்பதாகத் தலவரலாறு கூறும். திருப்பருப்பதம், ஸ்ரீசைலம் என்றும் வழங்கப்படுகிறது. இறைவர்: பருப்பதநாதர், இறைவி: பருப்பத நாயகி. ஓங்கி நிற்கும் மலைகளுக்கு இடையே மல்லிகார்ச்சுனம் என்னும் திருக்கோயில் உள்ளது.

### 71. மாயாவதி - 8

முத்தி தரும் ஏழு நகரங்களில் ஒன்று. மாயா என்றும் வழங்கப்படும். இது வைகுந்தத்திற்கு ஏறும் ஏணியாக உள்ளது. இதற்கு அரித்துவாரம், கங்காத்துவாரம், மாயாத்துவாரம் எனவும் பெயர்கள் உள்ளன. கங்கை இவ்விடத்தில் சுழன்று செல்லுதலால் இப்பெயர் பெற்றதென்பர்.

### 72. மாயூரம் - 27

தஞ்சாவூருக்கருகில் வடகிழக்கில் கடலோரமாக இருக்கும் இடம். இது சைவத்தலம். உமையம்மையார் மயிலாக இருந்து சிவபெருமானை வழிபட்டதால் இப்பெயர் பெற்றதாகப் புராணம் கூறகிறது. இதனால் இந்த இடம் கௌரி, மாயூரம் எனவும் பெயர் பெறும். இறைவர்: மயூரநாதர், இறைவி: அபயாம்பிகை. திருவாவடுதுறை ஆதீனத்துக்குரியது.

### 73. மும்பை - 11

இந்தியாவின் மேற்குக் கரையோரமாக உள்ள மாநிலம். வணிகத் துறைமுகப் பட்டினம். இந்தியாவின் தலைவாயில் என்று கூறப்படுகிறது. இங்குள்ள மலபார் குன்றின் சரிவிலுள்ள தொங்கு தோட்டங்கள் மகாலட்சுமி கோயில் முதலியவை பார்க்கத் தகுந்தன. எலிபெண்டா குகைச் சிற்பங்களும் உள்ளன.

### 74. வானரவீர மதுரை - 16

பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரை ஆன்ற பெருமை வாய்ந்ததாகும். தமிழும் சைவமும் தழைத்தோங்கிய அந்நகரின் பெயரை ஏற்று விளங்குவது மானாமதுரை. மானவீரன் மதுரை என்பது மானாமதுரையாயிற்று என்பர். சோழநாட்டில் ஓர் ஊர் மதுரை என்று பெயர் பெற்றுள்ளது. வானரவீரன் மதுரை என்பது மானாமதுரை யாயிற்றென்பது புராணக் கொள்கை.

### 75. விந்தியமலை - 71

இந்தியாவின் நடுவில் கங்கைச் சமவெளிக்கும் தக்காண பீடபூமிக்கும் இடையிலுள்ள ஒரு மலைத்தொடர். இது

நருமதையாற்றின் வடக்கில் அமைந்துள்ளது. இது குஜராத்தில் தொடங்கிச் சிறிது வடகிழக்காக மத்தியப்பிரதேசத்தினுள் சென்று மாளவப் பீடபூமியின் தென்பகுதியாகிப் பின்பு இருகூறாகப் பிரிந்து செல்கிறது.

## *76. ஸ்ரீவைகுண்டம் - 62*

*திருநெல்வேலிக்குக் கிழக்கே 25.6 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. நம்மாழ்வார் இப்பதியைப் பாடியுள்ளார். திருமால்: கள்ளபிரான், வைகுந்தநாதன்; தாயார்: வைகுந்தவல்லி. திருமால் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார்.*

## துணைநூல் பட்டியல்

1. அரசு, ( உரை ) - குமரேச சதகம், கழக வெளியீடு, சென்னை, 1965.

2. அரசு - பெரியபுராண வசனம் அல்லது திருத்தொண்டர் வரலாறு, கழக வெளியீடு, மூன்றாம் பதிப்பு, 1963.

3. இரத்தினவேலு முதலியார், ( உரை ) - திருவிளையாடல் புராணம், சென்னை, 1937.

4. இராமசாமி, சு.அ. ( பதி. ) - மேற்கோள் விளக்கக் கதை, அகரவரிசை-2, கழக வெளியீடு, சென்னை, 1963.

5. இளங்கீரன் - சதகங்களின் சிறப்பு, மணிவாசகர் நூலகம், சென்னை, 1962

6. கந்தசாமி, வி. - தமிழ்நாட்டின் தல வரலாறுகளும் பண்பாட்டுச் சின்னங்களும், பழனியப்பா பிரதர்ஸ், 1983.

7. கோபாலையர், டி.வி. ( பதி. ) - தேவாரம் 1 & 2 பிரான்காஸ்டி இன்ஸ்டிடியூட், பாண்டிச்சேரி, 1984.

8. சங்கரன், இரா., - முருகன் முந்நூல் சைவசித்தாந்த மகாசமாஜம், மயிலை, சென்னை, 3-ஆம் பதிப்பு, 1978.

9. சிங்காரவேலு முதலியார், ஆ. - அபிதான சிந்தாமணி, ஆசியன் எஜுகேஷனல் சர்வீசஸ், புது டில்லி, ஐந்தாம் பதிப்பு, 1986.

10. சுப்பிரமணியம், கே, ( பதி. ) - பெரியபுராணம், திருப்பனந்தாள் வெளியீடு, திருப்பனந்தாள், 1974.

11. செயராமன், ந.வி.- சதக இலக்கியங்கள், மணிவாசகர் நூலகம், 9-ஆம் பதிப்பு, 1978.

12. சேதுப்பிள்ளை, ரா.பி., - தமிழகம் ஊரும் பேரும், முதல் பதிப்பு, சென்னை, 1946.

13. சேனாவரையம், ( உரை. ) - தொல்காப்பியம் சொல்லதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 6-ஆம் பதிப்பு, 1959.

14. பேராசிரியர், ( உரை ) - தொல்காப்பியம் பொருளதிகாரம் வெளியீடு, திருப்பனந்தாள், 1974.

15. ஜய செந்தில் நாதன், பு.மா. - சேக்கிழார் வழியில் சிவத் தலங்கள், இந்து சமய மன்ற வெளியீடு, காஞ்சிபுரம், 1983.

## அகராதிகள்


1. தமிழ்ப் பேரகராதிகள் - சென்னை, 1928.

2. கலைக் களஞ்சியம் - ( தொகுதி 1-10 )
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை, 1956.

3. வாழ்வியல் களஞ்சியம் - தொகுதி-1
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர், 1986.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - 2 | 65.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குரு நூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச்சுவடி அட்டவணை-2 | 110.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு | 19.00 |
| மன்னான் சின்னாண்டிக் கதைப்பாடல் | 18.00 |
| தனிநாயகம் அடிகளாரின் ஆய்வுகள் | 22.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10.00 |
| நன்னூல் மூலமும் விருத்தியுரையும் | 225.00 |
| பல்லவர் செப்பேடுகள் முப்பது | 250.00 |
| பாண்டியர் செப்பேடுகள் பத்து | 125.00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45.00 |
| Critical Studies in Kural | 30.00 |
| Tamil India | 40.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச்சுவடி அட்டவணை-I | 110.00 |
| செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி | 20.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை (சித்த மருத்துவம்) | 75.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை (இலக்கியம்) | 70.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை (மெய்பியல் & நாட்டுப்புறவியல் | 70.00 |
| நாடகமேடை நினைவுகள் | 160.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| தொல்காப்பியம் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |

Pub.No. 324 காசி விசுவநாதர் சதகம் Rs. 40.00